உ

திருமால் துணை.

---

# கலித்தொகை

## மூலமும்

### நச்சினார்க்கினியருரையும்.

### நான்காவது முல்லைக்கலி.



(க0க.) களிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்ற
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலையேபோற் றடவுபு துடுப்பீன்ற
ஞெலிபுட னிரைத்த ஞெகிழிதழ்க் கோடலும்
மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறருமுன்பினோன் கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னொருங்கு;
அவ்வழி, முழக்கென விடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ;
மேற்பாட் டுலண்டி னிறனொக்கும் புன்குருக்க
ணோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா

ணஞ்சி ரசையியல் கூந்தற்கை நீட்டியா
னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்;

௨௧ சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்;

௨௭ செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணாரிரு ளென்னா ரருங்கங்குல் வந்துதன்
றாளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தாளிற் றிருகுவான் போன்ம்;

எனவாங்கு;

௩௪ அணிமாலைக் கேள்வற் றரூஉமா ராயர்
மணிமாலை யூதுங் குழல்;

௩௬ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை
விடாஅதுநீ கொள்குவை யாயிற் படாஅமை
யின்றன வாயமக டோள்;

௩௯ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்;

௪௩ கோளாள ரென்னொப்பா ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்
கோளாள னாகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்;

சஎ ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு.

இஃது "ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய, ராவயின் வரூஉங் கிழவரு முளரே" என்னும் (க) சூத்திரத்தில் 'திணைநிலைப்பெயராகிய கிழவருங் கிழத்தியரும் உளர்' என்னும் விதியாற்கொண்ட அத்தலைவிக்கு அவள் தோழி ஆயர் ஏறுதழுவுகின்றமைகாட்டி அவள் அதுகண்டு வருந்தாமல் ஆண்டுப் பெற்ற நன்னிமித்தங் கூறித்தெளிவித்து, *அதனை அவ்விதியாற்கொண்ட தலைவற்குங்கூறி, மீட்டும் அத்தலைவிக்குத் தீஞ் சுற்றத்தார் கூறியிருக்குங் கூற்றினையுங் கூறி, தலைவனும் இன்னும் ஒருஞான்று ஏறுதழுவி நம்மை வரைந்துகொள்வுனென்று ஆற்றுவித்தது.

இதன் பொருள்.

தளிபெறு தண்புலத்துத் (உ)தலைப்பெயற் கரும்பீன்று
முளிமுதற் பொதுளிய (ங) முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலைபோற் (ச) றடவுபு (ரு) துடுப்பீன்று
ஞெலிபுட னிரைத்த †ஞெகிழிதழ்க் (சு)கோடலு

க. தொல். அகத். சூ. உக.

உ. "தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்,. திருள்படப் பொதுளிய பராரை மராஅத்து" முருகு. கூ - கo.

ங. பிடாவென்பதுமுட்காலையுடையதொரு புதல்;'மழைக்குத் தளிர்த்து அரும்பிக் குலையாகப் பூப்பது; இதன்பூ நீண்ட காம்பையும் வெண்ணிறத்தையுமுடையது (அ)"முட்பிடவார்சிறுநெறி" (ஆ)"வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக், கான்பிசிர்கற்பக்கார்தொடங்கின்றே" (இ) "சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல், கண்ணகியின் மலருந் தண்ணறும் புறவில்" (ஈ) "குறும்புதற்பிடவி னெடுங்காலலரி" (உ) "நிலவெனத், தொகுமுகை விரிந்த முதுகாற் பிடவின்" எனவருதலும் காண்க. பிடாவென ஒரு மரமும் உண்டென்பர்.

ச. "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" தொல். உரி. சூ. உங.

ரு. (அ) "காந்தட் டுடுப்பிற் கமழ்மடல்" மலை. நுஙக. என்பதும் (ஆ) கலி. ருக: ங - ச வது அடிக்குறிப்பில் காந்தட்டுடுப்பென வந்திருப்பனவையும் ஈண்டு அறிதற்பாலன.

சு. கோடலென்பது பெரும்பாலும் முல்லைநிலத்துக்குரித்தாகக் கூறப்படும்ஒருபூக்கொடி ; இதன்குலைக்குப் பாம்பின் படமெடுத்தநிலையும்

(பிரதிபேதம்) * இதனை, † ஞெகிழிதழ்க் கோடலும்.

ரு (க)மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலர்ந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறரு முன்பினோன் (உ)கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னெருங்கு

எ - து: மழையைப் பெறுகின்ற குளிர்ந்த நிலத்தே நின்ற கார்காலத்து முற்பட்ட மழைக்கு *அரும்பீனுகின்ற முன்புஉலர்ந்த முதலிடத்தே தழைத்த முள்ளைப் புறத்தேயுடைய பிடவம்பூவும், (ரு) கள்ளுண்டு†களித்தலுற்றவனிலைமைபோல அசைந்து ‡ விளைந்து துடுப்புப்போலும் முகையை முன்னர்

இதன்பூவுக்கு விளக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன; இஃது இடையராற் சூடப்படுவது; இது பெரும்பாலும் வெண் காந்தளுக்கே பெயராய்வருமென்பர்; இங்குச்செங்காந்தட்கு வந்திருப்பது புண்டரீக மென்பது செந்தாமரைக்கு வருவதுபோல அருகியவழக்கு; (அ)"குருவுடையன கொடிமிடைவொடு குலைவிரிவன கோடல்" (ஆ) "வெஞ்சின வரவின் பையணந் தன்ன, தண்கமழ் கோட ரூதுபிணி யவிழ" (இ) "அணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்கோடல், பூங்குலை யீன்ற புறவு" (ஈ) "கோடலந் தீப மேந்தி" (உ) "வரிவெண்கோடல் வாங்குகுலை வான்பூப், பெரிய சூடிய கவர்காற் கோவலர்" என்பவற்றால் இவை விளங்கும்; இதுவும் மகளிர்வளையலும் ஒன்றற்கொன்று உவமையாதல் இந்நூற்பக்கம் சகூ: க-ஆம் குறிப்பால் அறியலாகும். தோன்றி யென்பதும் இதன்வகைபோலும்.

க. (அ) "மணிக்காயா" பொருந. உ0க. (ஆ) "மணியெனத், தேம்படு காயா மலர்ந்த" ஐங். சஉ0.

உ. கணிச்சி, மழுவின் வேறுபய தொருபடை; இதனை, "கையது கணிச்சியொடு மழுவே மூவாய், வேலு முண்டத் தோலாதோற்கே" என்பது வலியுறுத்தும்.

ரு. (அ)"நாளா தந்து நறவுநொடை தொலைச்சி, யில்லடு கள்ளின் றோப்பி பருகி...........தோளோச்சி வலன் வளையூஉப், பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை" பெரும்பாண். கசக - கசஈ. (ஆ) "தசும்பு துளங்கிருக்கையென்றது தன் களிப்புமிகுதியால் தன்னை யுண்டாருடல்போல அத்தசும்பிருந்து ஆடும்படியான இருப்பென்றவாறு; இச்சிறப்பான், இதற்கு, 'தசும்புதுளங்கிருக்கை' என்றுபெயராயிற்று" பதிற். சஉ: கக.உரை.(இ) "துழந்தடு கள்ளின் றேப்பியுண் டயர்ந்து, பழஞ்செருக் குற்ற வனத்தர்ப் பாணியும்" மணி. எ: எக - எஉ. (ஈ) "அரிய லார்ந்த வனந்தர்" தணிகை. திருநாட்டு. ச00.

(பிரதிபேதம்) * அரும்பீனு கின்ற, † களித்தலுற்றவனிலைமை ‡ விளைந்ததுடுப்பு.

ஈன்று, பின்னர்க்(௧)தீயைக் கூடைந்து, அதிற்பிறந்த நெருப்பைச்சேரநிரைத் தாற்போன்ற அலர்ந்த இதழினையுடைய செங்காந்தட்பூவும், நீலமணியை யொக்கும் நிறத்தினையுடையவாகிய(௨)*காயாம்பூக்களும் பிறவும் அழகுகொள் ளும்படி சூடிய கண்ணியையுடையவர் சேரத்தொக்கு ஏறுதழுவுவாரோடே மாறுபடுதலை ஏறட்டுக்கொண்ட தம் மைந்தினைச் சேரநிறுத்துதற்கு மகட் கொடை நேர்ந்த ஆயர் சேரக்கூடி, பிறரால் சீறுதற்கரிய வலியினையுடைய இறைவனுடைய குந்தாலிப்படைபோலே கூரிதாகக் கொம்புகளைச் சீவி, ஏறு களைச் சேரத் தொழுவிடத்தே புகுதவிட்டார். எ - று.

தண்புலத்துநின்ற பிடவும் காந்தளும் காயாவும் பிறவுமென்க. இவை (௩)முதற்பொருட்கேற்ற அடையடுத்துநின்ற ஆகுபெயர். ஈன்றென்பதுநிகழ் காலமுணர்த்துஞ் செய்தெனெச்சம். (௪) ஞெகிழியுடனென்றது ஞெலிபட னென எச்சமாகக்கூறுதலின் இவ்வாறு பொருள் †கூறினும். "ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழி" (௫)என்பதனானும் இது வினைச்சொல்லாம்.

அவ்வழி, முழக்கென இடியென முன்சமந் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
(௬)துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ

எ - து: அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப்‡போக்கும்படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழைமுழக்கென்ன இடியென்ன நடுவானநிலத்தின்

௧. "தீயி னன்ன வொண்செங் காந்தட்,... ......... .....நெருப்பி னன்ன பல்லிதழ்" மலை. ௧௪௫-௧௪௬.

௨. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவராடையை" கலி. ௧௦௮: ௧௦.

௩. ' தளிபெறு..................பிடவமும்" என்பது பூங்குமிழென்பது முதலாகிய தன் பொருட்கேற்ற அடையடுத்து நின்ற ஆகுபெய ரென்பதற்கும் (கோவையார். ௧: பேர்.) செய்தென்னும் வினை யெச்சத்திற்கு நிகழ்கால வாய்பாடும் சிறுபான்மையுண்டென்பதற்கும் (தொல். வினை. சூ. ௩௧. நச்.) உகரவீறுசிறுபான்மை நிகழ்காலம் பற்றி வருமென்பதற்கும் (இ - வி. சூ. ௨௪௬.) மேற்கோள்.

௪. "சொடு மழைக் காற்று தங்கட் குளிர்பெயன் மாறவெண்ணி, நெடு மலை யெடுத்துக் காட்டு செட்டிதழ்க் காந்தட் கொள்ளி"

௫. பெரும்பாண். ௧௭௮.

௬. (அ)"யாறுங்குளனும் வேறுபல் வைப்புஞ், சதுக்கமுஞ் சந்தியும் புதுப் பூங் கடம்பும்" முருகு. ௨௨௪-௨௨௫. (ஆ) "ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவுங், கால்வழக் கறுநிலைக் குன்றமும்பிறவு, மவ்வவை மேய வேறு

பிரதிபேதம்) * காயாம் பூக்களுமழகுகொளளும்படி, † கூறிற்று. ஞெலிகோற், ‡போகும் படியை யுளைகொண்டு வந்து வந்து.

முன்னே ஆரவாரமெழப் புகையொடு துகள் எழ ஏறுதழுவினார்க்குக் கொடுத்தற்கு நல்லமகளிர் திரண்டுநிற்ப * நீர்த்துறையிலும் (க) ஆலமரத்தின்கீழும் பழையவலியினையுடையமராமரத்தின்கீழும் உறையுந்தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைப் பரவித் தொழுவிலே பாய்ந்தார். எ - று.

"வளிவழக் கறுத்த வங்கம்" (௨) என்றாற்போல வழக்குப் போக்குதன் மேல்நின்றது.(௩) இடி ஏற்றின் இடிப்பிற்கு உவமம். அவர்பாய்ந்த அளவிலே தோழி தலைவியை அழைத்துக்காட்டுகின்றாளாக மேற்கூறுக.

கடு மேற்பாட் டுலண்டி னிறனொக்கும் புன்குருக்க
ணொக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா
ணஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியா
(௪)னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்

எ - து: உயர்ந்த கொம்பிடத்தே வைத்த(௫)உலண்டினது நிறத்தையொக்கும் புல்லியநிறத்தைத் தன்னிடத்தேயுடைய எருத்தினது நோக்கை அஞ்சானாய் அதின்மேலே பாய்ந்த இடையனைச் சாவக்குத்திக் கொம்பிடத்தே எடுத்துக்கொண்டு உடலைக்குலைக்கின்றதனுடையதோற்றரவைக்காணாய்; அழகிய

* வேறு பெயரோ, யெவ்வயி னோயு நீயே" பரி சு: சுஎ - எ௦. (இ) "துறைமிசை நினதிரு திருவடி தொடுகோ"சிலப். ௨௪. 'குறமகள்'

க. (அ) "ஆலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட" கலி. க௦௩: ௨௩. (ஆ) "கடவுளாலத்து" நற். ௩௪௩: ௪; புறம். ௧௯௯: க.

௨. புறம். ௩௬௮: ௯.

௩. "உருமி னதிருங் குரல்போற் பொருமுர, ணல்லேறு" கலி. ௧௧௩: ௨௪ - ௨௫. என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

௪. "நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன், வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்" என்பது 'இட்டு' என்னு மிடைச்சொல் அசைநிலையாய் வருதற்கு மேற்கோள். நன். இடை. சூ. ௨௨. மயிலை; விருத்தி; இரா. இ - வி. சூ. ௨௭௭.

௫. உலண்டென்பது தான் வெளிப்படுதற்கு வழியின்றித் தன்னுடம்பைத் தானூற்கு நூலாற் சுற்றிக் கூடாக்கிக் கொண்டு அதனுளிருந் திறக்கும் இயற்கையையுடையதொரு புழு; அந்நூலியற்ற அதுவே வல்லது. அது காட்டிலமிர்தென்று சிறப்பிக்கப்படுவது; அதனாலால் சிறந்த ஆடை நெய்தலுண்டு; இவை (அ) "வரியுடல் சூழக்குடம்பை நூறெற்றிப், போக்குவழி படையா துள்ளுயிர் விடுத்தலி, னழிவு புறம்போய வுலண்டது போல" (ஆ) "போக்குவழி கண்டிடை

(பிரதிபேதம்) * நீர்த்துறையும் ஆலத்தின் கீழும்.

தலைமையினையுடைய மனமமைந்த இயல்பினையுடையளாகிய திரோபதையது தூய்ய கூந்தலிலே கையை நீட்டிய* துச்சாசனனுடையநெஞ்சைப் பிளந்து போகட்டுப் பகைவர்நடுவே தான்சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச்செய்த வீமசேனனைப்போலும். என - று.

போலும் போன்மெனத் திரிந்தது. † "னகாரை முன்னர் மகாரங் குறுகும்" (க)என்பதனான் மகரங் கான்மாத்திரையாய் நின்றது. புன்குருக்கண், ஆகுபெயர். சாவக்குத்தியென்பது "சாவ வென்னுஞ் ‡செயவெனெச்சத் திறுதி வகரங் கெடுதலு முரித்தே" (உ) என்பதனால் வகரங்கெட்டது.

௰க (௩)சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய(ச)வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர் ||கூளிக் கார்த்துவான் போன்ம்

---

புகாதுறு முலண்ட, மாக்கியிடு கூடதனை யாத்திடுதல் போல" (இ) "குடம்பையுளுலண்டுபோலக்கோட்படும்வினையன்"(ஈ) "வாலுலண்டு கோற்றருத, றேன்புரிந்தி யார்க்குஞ் செயலாகா" (உ) "அரக்குலண்டு செந்தே னணிமயிற்பீலி, திருத்தகு நாவியோடைந்து" (ஊ) "நூலினு முலண்டினு நாரினு மியன்றன" என்பவற்றால் அறியப்படுகின்றன; இங்கே அதனிறம் புற்கென்றநிறமென்று சொல்லப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியால் இது பட்டுப்பூச்சி யென்பது விளங்கும்.

க. தொல். மொழிமரபு. சூ. கக.

உ. சாவ வென்னும் எச்சத்து இறுதிக்கணின்ற வகரவுயிர்மெய் கெட்டு நிற்றற்கு, "கோட்டிடைச் சாக்குத்தினன்" என்பது (தொல். உயிர் மயங்கு. சூ. எ. நச்; இ - வி. சூ. அ௫) இவற்றிலும், 'சாக்குத்தினன்' என்பது (தொல். உயிர்மயங்கு. சூ. எ. இளம். நன். உயிரீற்று. சூ. கக. மயிலை. விருத்தி. இரா); இவற்றிலும் மேற்கோளாகக் காணப்படுகின்றன. 'சாக்குத்தினன்' என்பதனை முதனிலைவினை வினைமாத்திரையாய் நில்லாது வினையெச்சப் பொருட்டாய் நின்றதென்பர் பிரயோக விவேக நூலார். பிரயோக. ௩௫.

௩. "வள்ளுருவ ணேமியான் வாய்வைத்த வளைபோலத், தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்" கலி. ௧0௫: கூ-௧0.

௪. (அ)"ஏற்றெருமைநெஞ்சம் வடிம்பினிடந்திட்டு" கலி.௧0௩: ௪௨. எனவும் (ஆ) "ஏற்றெருமை யுகைத்தடரு மிருணிறத்த வெரிகுஞ்சிக்,

(பிரதிபேதம்) *துச்சாசனனுடைய, † 'னகரமுன்னர் மகரங்குறுகும்' ‡ செய்தெனெச்சத் திறுதி, || கூளிக் கார்த்துவான்.

எ - து: மதிவிரிந்தாற்போன்ற சுட்டினைப் நெற்றியிலேயுடைய கரிய எருது முழைஞ்சினையுடைய மலையிற்பூவாற்செய்த அழகையுடைய கண்ணியை யுடைய பொதுவனைத் * துகைத்துக் குடர்சரியும்படி குத்திக் கோட்டிடைக் கொண்டு குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; பல்லுயிரும் வருத்தத்தை அணிகின்ற ஊழிமுடிவிலே (௧)பசியநிறத்தைத் தன்பாகத்தேயுடைய உருத்திரன் வருத்தத்தைச்செய்த எருகிய எருமையையேறுகின்ற(௨)கூற்றுவனுடையநெஞ்சைப் பிளந்துபோகட்டு அவன் குடரைக் கூளிக்கிட்டு அவற்றின் வயிற்றை நிறைவிக்கின்றவனைப்போலும். எ - று.

எருமை, † ஆகுபெயராய்க் கூற்றுவனை உணர்த்திற்று.

௨௭ (௩)செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணாரிரு ளென்னு மருங்கங்குல் வந்துதன்
றுளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்

எ - து: செவிமறுவாயிருக்கின்ற விளங்கும் நுண்ணிய சிவந்த பொறிகளையுடைய ஆயர் நேர்ந்துவிட்ட வெள்ளை யெருத்தினது கோபத்தை ‡ அஞ்சானாய் அதன்மேலே பாய்ந்த பொதுவனை நுதியைத் துகைத்து முனையினையுடைய கோட்டாலெடுத்துக் குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; வருதற்கரிய கங்குலிலே அரிய இருளென்று கருதானாய் வந்து துரோணாசாரியனைக் கொன்ற (௪)சிகண்டியைத் தன்முயற்சியாலே வென்று கொன்று தன் தோளால் தலையைத் திருகும் || அச்சுவத்தாமாவைப்போலும். எ - று.

---

கூற்றம்" நைடத. போர்புரி. ௬௫. (இ)"கூற்றினொருமை யேறணிந்த கண்டையொலி" காசி. மணிகன்னிகை. ௧௮. எனவும் வருதல் காண்க.

௧. பசியநிறமென்றது அந்நிறத்தையுடைய உமாதேவியாரை.

௨. "சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா, வுடறிய சேவடி யான்" தேவாரம்.

௩. (அ)"செம்மறு வெள்ளை" (ஆ) "சில்லைச் செவிமறை கொண்டவன்" கலி. ௧௦௫: ௧௨, ௧௦௭: ௬. (இ) "நுண்பொறி வெள்ளை யடர்த் தாற்கே", "பொற்பொறிவெள்ளை யடர்த்தாற்கே", "தூநிறவெள்ளை யடர்த்தாற்கு" சிலப். ௧௭: ௪, ௫, ௭.

௪. துரோணரைக்கொன்றவன் திட்டத்துய்மனும்வீடுமரைக்கொன்றவன் சிகண்டியுமாதலால் இங்கே சிகண்டியை யென்பது திட்டத்துய்மனை

(பிரதிபேதம்) * தெகைத்து. † ஆகுபெயராய்க், ‡ 'அஞ்சானாய்த் தன்மேலே பாய்ந்த பொதுவனைத் துகைத்து முன்னினது நனிபோலும் முனையினையுடைய' என்பது முந்திய பதிப்பு. || அசுவத்தாமாவைப்போலும்.

நேர்வெள்ளையென்க. நுதியென்றது முனை; எனவே, தலை யென்பது தோன்றிற்று. *"நுதிக்கோலஞ்செய்து"(க) என்றாற்போல.

எனவாங்கு அசை.

இங்ஙனம் தோழி காட்டக்கண்டு நங்கணவற்கும் இங்ஙன மாகுமோ வென்று அஞ்சின தலைவியது அச்சத்தை ஆண்டுப்பெற்ற நன்னிமித்தங்கண்டு தோழி †போக்குவாளாக மேற்கூறுகின்றாள்.

௩.௪ அணிமாலைக் கேள்வற் றரூஉமா (உ)‡ராயர்
மணிமாலை யூதுங் குழல்

யென்றிருக்க வேண்டியதென்று தோற்றுகிறது. வியாஸபாரதத்தில் அசுவத்தாமா திட்டத்துய்மனை அவனுறங்குகையில் காலாலுதைத்து நிலத்தில்தேய்த்துத் தன்வில்லின் நாண்கயிற்றினால் அவன் கழுத்தைக் கட்டி இழுத்து அவனை மிதித்து வருத்தாநிற்க, அவன் வலியற்று, 'குரவன் காதலா! யான் புண்ணிய வுலகடையுமாறு என்னைப் படைக்கலத்தால் விரைந்து கொல்' என்று வேண்டவும், 'குரவனைக்கொன்ற பாவிகட்கு நல்லுலகங்கள்கிடையா; ஆதலால் நீ படைக்கலத்தால் கொல்லத் தக்காயல்லை' என்று மறுத்து மீட்டும் தன்கால்களால் உயிர் நிலைகளில் உதைத்துக் கொன்றான்" என்று காணப்படுஞ் செய்தியும் பின்பு, "வீடுமனைக்கொன்ற சிகண்டி எதிர்த்துப் புருவங்களுக்கிடையே வில்லால் அடிக்க, அவனைக் கத்தியால் இருதுணியாகத் துணித்தா னென்று காணப்படுஞ் செய்தியும் இங்கே அறிதற்பாலன. வில்லிபுத்தூராரும், "பருவாலகற்றி யிருவர்வீரரையும் பாசறை வாயிலினிறுத்தி, மருவருங் கமல மாலையான்கடப்ப மாலையானெனமனங் களித்துப், பொருவரு முனைக்குக் குரிசிலா யெல்லாப் போரினும் புறமிடா தடர்த்த, துருபதன் மதலை வரிசிலைத் திட்டத் துய்மனை மணித்தலை துணித்தான்", "கயில்புரி கழற்காற் றந்தையைச் செற்ற காளையைப் பாளையத் திடையே, துயில்புரி யமையத் திமைக்குமுன் சென்னி துணித்தனன் சுதனெனக் கலங்கி, வெயில்புரி வதன்முன் வல்விருளிடையே யுணர்ந்தவர் வெருவுட னரற்றப், பயில்புரி சிலைக்கைச் சிகண்டியை முதலோர் பலரும்வந் தனர்கள்பாஞ் சாலர்", "உத்தமோ சாவு முதாமனு முதலிட் டுள்ளவர் யாவரும் பிறரும், தத்தமோ கையினால் வந்தெதிர் மலைந்தோர் தலைகளாற் பலமலையாக்கி" என்று கூறியிருக்கிறார்; வில்லி. பதினெட்டாம். உகரு - உ௩௫.

க. கோவையார். உ௬0.

உ. "அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன், குழல்போலுங் கொல்லும் படை" குறள். கஉஉஅ.

(பிரதிபேதம்) *, நுதிக்கோலஞ் செய்ததென்றாற்போல. † போக்கினளாக மேற்கூறுக. அணிமாலைக். ‡ ஆயன்.

எ - து: ஆயர் ஊண்டு ஊதுகின்ற குழல் நீலமணிபோலுங் காயாம்பூவாற் செய்த மாலையினை அணியும் இயல்பினையுடைய கேள்வனை நமக்குத் தருதற்கு நன்னிமித்தமாக இசைத்தது காண்; நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - று.

அது, மங்கலமான பண்ணைத் தருதலின் நிமித்தமாயிற்று.

௩௬ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை
விடாஅதுநீ *கொள்குவை யாயிற் படாஅகை
யீன்றன †வாயமக டோள்

எ - து: தோழி, தலைவனிடத்தே சென்று ஆண்டுச்செய்த நிமித்தத்தை ஆராய்ந்துபார்க்கில், மதத்தையுடைய களிற்றினுங்காட்டிற் றறுகண்மையை யுடைய ஏற்றை நீ கைநெகிழவிடாது கொள்வை; இப்பொழுது இவ்வாய மகள் ‡தோள்·ஏனைமகளிர் தோள்களிற்காட்டில் ||வெற்றிக்கொடியை உண்டாக் கினவாமென்றாள். எ - று.

௩௯ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்

எ - து: பின்னர்த் தலைவியிடத்தே வந்து எம்முடைய பலவான கரிய கூந்தலினையுடையவளை யாம் கூடுதற்குக் கொடுப்பேம்; கொல்லேற்றைச் சாடு தற்குச்சமைந்திருந்தவர்களுக்கென்று ÷நமர்கூறி, கூற்றம் தலைவனையொழிந்த பகற்பொழுதிலேஅலர்ந்த கண்ணியையுடையவன் வருத்தத்தையுடைத்தாகிய குழலினையுடையவன் ×சுவலின்மேலே கோலைவைத்தகையையுடையவனாகிய வினைவலபாங்கினோர்க்கு அயலதாயிருக்குங்காணென்றாள். எ - று.

அயலதென்றது ஏறுதழுவுதற்கு அரிதென்னும் + பொருட்டு. இம்மூன்று பெயரும் ஏறுதழுவினவர்களை நோக்கிக் கூறிற்று.

௪௫ (க)கோளாள ரென்னொப்பா **ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட் ·

௧. "தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன், வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணாதான், கோளாள னென்பான் மறவாதா னிம் மூவர்,கேளாக வாழ்த லினிது" (திரிகடுகம்.௧௨.) என்னுஞ் செய்யுளி லும் இப்பகுதியிலுமுள்ள எதுகைச்சொற்கள் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * கொள்ளுவையாயிற், † ஆயர்மகள், ‡ தோளைமகளிர், தோள்வீரமகளிர், || வெற்றிக்கொம்பையுண்டாக்கின, ÷ நமர்கூடிக்கூறுந்தலைவனை· × சுவன் மேலேகோலைவைத்த கையையுடையவனு'மொழிந்தவினைவல, + பொருட்டா யிற்று. இம்மூன்று, ** இல்லே நம்மானுட்.

*கேளாள னுகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்

எ - து: யான் முற்கூறிய நிமித்தமேயன்றித் தலைவனைக் கண்டு என் கண்கள் உபகாரத்தைச் செய்கையினாலே எறுகொள்ளவல்லார் என்னை யொப்பார் பிறரில்லை யென்று நம்முடைய பக்ஷத்திரளிலே நின்று தனது தாளாண்மையைக் கூறுந் தலைவன் பின்பு ஒருநாளிலேயாயினும் ஏறுதழுவி †நம்மைத் தனக்குக் கேளாக ஆளுந் தன்மையையுடையனுகாமை இல்லை யென்றாள். எ - று.

தாளாண்மை - முயற்சியை. ........ஆண்டு ‡போதுவன். நம்மை, நமக்கு; உருபுமயக்கம். கண் வேளாண்மை செய்தலாவது, (க)இடக்கண் துடித்தல்; வலக்கண் || துடிக்கலாதிருத்தலும் நன்னிமித்தமாதலிற் செய்தனவெனப் பன்மையாற் கூறினன்.

சஎ X ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
(உ)நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
(ங)முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு

எ - து: அவ்விடத்தில் ஏறுகளும் வருந்தின; இடையரும் புண்மிக்கா ரென்று எல்லாம் (விலக்குகையினாலே) தம்மைக் கொள்ளுதற்கு நின்ற

---

க. (அ) "கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு, முன்னெறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன, வெண்ணுமுறை யிடத்தினும் வலத்தினுந் துடித்தன" சிலப். ரு: உங எ - உங க (ஆ) "போக மகளிர் வலக் கண்க டுடித்த" சீவக. உகஎங. (இ) "நலந்துடிக் கின்றதோ நான் செய் தீவினைச், சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ, பொலந் துடி மருங்குலாய் புருவங் கண்முதல், வலந்துடிக் கின்றில வருவ தோர் கிலேன்" (ஈ) "நஞ்சனை யான்வனத் திழைக்கு நாளிடை, வஞ்சனை யால்வலந் துடித்த வாய்மையா, லெஞ்சல வின்றுதா மிடந் துடித்ததா, லஞ்சலென் றிரங்குதற் கடுப்ப தியாதென்றாள்" கம்ப. காட்சிப். கூஉ, கூரு. என்பவைகளும் (உ) கலி. கக: கக - உஉ. அடிக் குறிப்பில் இடந்துடித்தல் நன்மைக்குறியென்பதை யறிவிக்கும் மேற் கோள்களும் ஈண்டு அறிதற்பாலன.

உ. (அ) "நாறிருங் கூந்தல்" (ஆ) "நாறிருங் கூந்தலார்" கலி. ருச: ரு, கரு: உ.

ங. "முல்லையந் தண்பொழில்" நாற். கு. க. மேற்கோள்.

(பிரதிபேதம்) *கோளாளனுகாமை, † நம்மைக்கொள்ளுதலையானுகாமை ‡ பொதுவன்தன்மை நமக்கு, || துடித்தலாயிருத்தலும், X ஆங்க.

பொதுவரோடே தாம் புணர்தற்கு வேண்டும் நிமித்தங்களைப் பெற்று நாறு இன்ற கரிய கூந்தலையுடைய பொதுமகளிரெல்லாரும் முல்லையையுடைய குளிர்ந்த பொழிலிடத்தே விளையாடுதற்குப் புக்கார்; நாமும் பொழிலிடத்தே விளையாடுதற்குப் போதுவாயாகவென்றாள். எ - று.

அச்சூத்திரத்துட் பொதுவனென்னும் பெயர் முதலியனவும் அச்சாதியிற் றலைவர்க்கு வருதலுங் *கொண்டவாறுணர்க. "புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல, தகத்திணை மருங்கி னளவுத லிலவே" என்னும் (க) சூத்திரத்திற் கைக்கிளை பெருந்திணைக்கும் தலைவருந் தலைவியரும் பலராய் வருவரென்றலின், இதன் சுரிதகத்துத் தலைவருந் தலைவியரும் பலராகக் கூறினர். இது சிறப்பில்லா ஆசுரமாகிய கைக்கிளை.

இதனால், தலைவிக்கு * நினைதல் பிறந்தது.

இது கொச்சகம் இரண்டும் வந்தமையிற் கலிவெண்பாவின் †வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. (க)

(௧0௨.) கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்ற
தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு
மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
௫ தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று;

௧0 ஓஒ இவள், பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற்
றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா
வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள் ;

௧௩ சொல்லுக; பாணியே மென்றா ரறைகென்றார் பாரித்தார்
*மாணிழை யாறுகச் சாறு ;

---

க. தொல். அகத். சூ. ௫௫. இச்சூத்திர வுரையிலும் அகப்புறமாகிய கைக்கிளை பெருந்திணைக்குச் சிறுபான்மை தலைவரும் தலைவியரும் பலராகவருவ ரென்று கூறி, "ஏறும் வருந்தின.........புணர்குறிக் கொண்டு" என்பதை மேற்கோள் காட்டினர்; நச்.

(பிரதிபேதம்) *நினைத்தல். † வேறுபாட்டுவந்த.

கரு சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து நோக்கும்வா யெல்லா
மிடைபெறி னோராத் தகைத்து ;

கஎ தகைவகை மிசைமிசைப் பாயிய ரார்த்துட
னெதிரெதிர் சென்றார் பலர் ;

க௯ கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல் ;

உக எழுந்தது துகள்
ளேற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர் ;

உரு அவருள், மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள்
பிணை இ
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் றோன்றி
வருத்தினான் மன்றவவ் வேறு ;

உஅ ஏறெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ
வேறுடை நல்லார் பகை ;

௩0 மடவரே நல்லாயர் மக்க ளொருந
லடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமேற் றின்று
முடலேறு கோட்சாற்று வார் ;

௩௩ ஆங்கினி,

தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்
திண்டோட் டிறலொளி மாயப்போர் மாமேனி
யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை.

*இஃது ஆயன் தலைவனும் ஏறுதழுவினமை †சுற்றத்தார் கண்டுநின்று கூறியது.

**இதன் பொருள்.**

(பிரதிபேதம்) * இது, † சுற்றத்தார்க்கண்டு.

கண்(௧)ணக னிருவிசும்பிற் கதழ்(௨)பெயல் *கலந்தேற்ற
தண்ணறும் (௩)பிடவமுந் தவழ்(௪)கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் (௫)வயங்கிணர்க்-கொன்றையு
† மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
௫ தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து ‡திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
||ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று

எ - து: இடமகன்ற பெரிய விசும்பிலே விரைந்துவருகின்ற மழை தன்னிடத்தே கலக்கையினாலே அதனை எற்றுநின்ற +தண்ணிய நறிய பிடவமும் படர்கின்ற கொடியினையுடைய முல்லையும் நிறத்தினையுடைய வளவிய (௬) தோன்றியும் விளங்குகின்ற கொத்தினையுடைய கொன்றையும் இவை

௧. (அ) "அகலிரு விசும்பில்" பெரும்பாண். ௧. (ஆ) "அகலிருவானத்து" மது. ௨௬௮; மணி. ௧௧: ௯௧.

௨. "தண்ணிக் கேற்ற பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன் மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்பு" குறுந். ௩௮௨.

௩. "தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று, முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்" கலி. ௧0௧: ௧-௨.

௪. "கொடித்தளவமே" சீவக. ௧௬௫௧.

௫. "கொன்றை யொள்ளிணர்", "நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றை" நற். ௨௨௧: ௪; ௩0௨: ௨.

௬. தோன்றி, ஒருபூங்கொடி. மழைக்குத்தளிர்க்கு மியற்கையையுடையது; அதன் மலர் செந்நிறமானது. அம்மலருக்கு விளக்கும் பவழமும், கோழிச்சேவலின்றலைக்கு அம்மலரும் உவமையாகக்கூறப்படுகின்றன. இவற்றை, (அ) "விடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றி, பவழத் தன்ன செம்பூத் தாஅய்" (ஆ) "கார்க்கேற், றெரிவனப் புற்றன தோன்றி" (இ) "நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட, தலைநாள் விளக்கிற் றகையுடைய வாகிப், புலமெலாம் பூத்தன தோன்றி" (ஈ) "வான்றோன்றி, வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநாடு" (உ) "மரகதத் தண்டிற் றோன்றி விளக்கெடுப்ப" (ஊ) "தோன்றி தோன்றுபு புதல் விளக்குறூஉ" (எ) "ஒண்சுடர்த் தோன்றி" (ஏ) "தோன்றி யொண் பூவன்ன, தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்" என வருவன வற்றால் அறிக.

(பிரதிபேதம்) * கலந்தெற்றத் தண்ணறும், † இன்னவும் பிறவும், ‡ திளைவிளையாடு, || உடம் போடின்னுயிர், + கண்ணிய.

போல்வனபிறவும் பூத்த பலமலர்கள் நெருங்கும்படி (௧) தழையும் கோதையும் இழையுமென்று சொல்லுகின்ற இவற்றைக் கட்டினராய் அணிந்துமகிழ்ந்து திளைத்து விளையாடும், மடப்பத்தையுடைத்தாகிய மொழியினையுடைய, ஆயத்தாருள்ளே * இன்று உடம்போடே என்னுயிர்க்குள்ளே புக்கவளாகிய இவள் யார்தானென்றான் தலைவன். எ - று.

இழை, பூண்வடிவாகக் கட்டினது.

௯ †ஓஒ இவள், (௨)‡பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற்
றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா
வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் ||தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள்

எ - து: அதுகேட்ட பாங்கன், ÷ஓஒவென வியந்து இவள் பொருகின்ற ×புகற்சியையுடையநல்ல ஏற்றைத் தழுவுமவரல்லது அழகினையுடைய மாந்தளிர்போலும் =நிறத்தையுடைய மெய்யைச் சேராரென்று எல்லாருங் கேட்டிருப்ப இதுகாரியமாகப் பலகாலுஞ் சாற்றிச் சாற்றி எப்பொழுதுஞ் சொல்லிய சொல்லாலே ✠அடிப்படக் கொண்டுவரப்பட்டவளென்றான். எ - று.

௧௩ சொல்லுக

எ - து: அதுகேட்ட தலைவன், அச்சுற்றத்தைநோக்கி இவன் ஏறுதழுவி இவளைக் கொள்வனென்று அவர்க்குக் கூறுகவென்றான். எ - று.

பாணியே மென்றா றறைகென்றார் பாரித்தார்
மாணிழை யாறாகச் சாறு

---

௧. தழை, பலவகையான தளிர் அரும்பு பூ முதலியவற்றாற் செய்து ஓரங்களை ஒழுங்காகக் கத்தரித்து இளைய மகளிர் உடுக்கும் உடை விசேடம்; "முடித்த குல்லை யிலையுடை நறும்பூச், செங்கான் மராஅத்த வாலிணர் இடையிடுபு, சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை, திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ" முருகு. ௨௦௧-௨௦௪. "அளிய தாமே சிறுவெள் ளாம்ப, லிளைய மாகத் தழையா யினவே", "அணித்தழை நுடங்க வோடி மணிப்பொறிக், குரலங் குன்றி கொள்ளு மிளையோள்", "அம்பூந் தொடலை யணித்தழை யல்குற், செம்பொறிச் சிலம்பி னிளையோள்" புறம். ௨௪௮: ௧-௨, ௩௪௦: ௧-௨, ௩௪௧: ௨-௩. என வருதல் காண்க.

௨. "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. ௧௦௩: ௬௨-௬௩.

(பிரதிபேதம்) * நின்றுடம்போடே, † ஓஒவிவள், ‡ பொருபுகழினல்லேறு, பொருபுகழ் நல்லேறு, || எப்போதும், ÷ ஓவெனவியந்து, × புகழ்ச்சியை, = நிறத்தினையுடைய, ✠ படிபடக்.

விடின் நின்னையின்றி *இறையினெல்லைநில்லாமற் கழன்ற வளையினையுடைய இவட்கு இனிப் பிறையையொக்குந்திருநுதலிற் றோன்றியபசலை ஒருகாலமும் வாராமல் மறையும்படியாகப் போமெண வரைவுகடாயினாள். எ - று.

இதனால், தலைவற்குப் புணர்ச்சியுவகை † பிறந்தது.

இது "பரத்தை மறுத்தல்வேண்டியும்" என்னும் (க) சூத்திரத்தாற் கைகோளிரண்டற்கும் பொதுவாகப் பொருள் கூறவும் பெறும்.

இது தாழிசையல்லா இடைநிலைப் பாட்டுப்பெற்றுப் புல்லாது விடுவாயெனக் குறைந்துவருதலின் யாப்பின்வேறுபட்டகொச்சகம். (அ)

(க௨௫.) பொன்மலை சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப;

அணிச்சிறை யினக்குரு கொலிக்குங்கா னின்றிண்டேர்
மணிக்குர லென்னிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யுள்ளான்ற வொலியவா யிருப்பக்கண் டவைகானற்
புள்ளென வுணர்ந்துபிற் புலம்புகொண் டினையுமே;

நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கா னின்மார்பிற்
றார்நாற்ற மெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென வுணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே;

நீணகர் நிறையாற்று ணினையுநள் வதிந்தக்காற்
றோன்றலை யெனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
கனவென்ப் புல்லுங்காற் காணாளாய்க் கண்டது
கனவென வுணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே;

எனவாங்கு;

---

க. தொல். கற்.சூ கஎ. இச்சூத்திரத்தினுரையிலும் இவர் இச்செய்யுளை இச்செய்திக்கே மேற்கோள்காட்டி, இதனைக் கைகோளிரண்டிற்குங் கொள்கவென்பர்.

(பிரதிபேதம்) * இனி இறையினெல்லை. † பிறந்தது. இது தாழிசை...........கொச்சகம். இஃ பரத்தை மறுத்தல்வேண்டியும்.

எ - து: அவரும் ஆண்டுச்சென்று தழுவுதற்கு யாங்கள் * தாழ்த்திரே மென்றார்; அதுகேட்டு அவள் சுற்றத்தார் மாட்சிமைப்பட்ட இழையினையுடையாள் வழியாக நிகழ்த்தும் ஏறுவிடுகின்ற விழவைப் பரக்கச்செலுத்தி இவனையன்றி மற்றும் ஏறுதழுவுவார் உளராயினும் வருகவென்று பறையறைகவென்றார். எ - று.

௧௫ † சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து ‡நோக்கும்வா யெல்லா
(௧)மிடைபெறி னேராத் தகைத்து

எ - து. இந்தவிழவினைப் || பெடையையொப்பார் தங்கண்கள் பொலிவுபெற்று இவ்வழகைப் பார்க்குமிடமெல்லாம் நின்று பார்க்கும் பரணைப் பெறுவார்களாகில் அது தகைமையையுடைத்தென்றார். எ - று.

இதற்குமுன் உள்ளனவும் மேல்வருகின்றனவும் கண்டசுற்றத்தார் கூறியதாகப் பொருளுரைக்க.

௧௭ தகைவகை மிசைமிசைப் = பாயிய ரார்த்துட
× னெதிரெதிர் சென்றார் பலர்

எ - து: அழகினையுடைத்தாகிய வகுப்பையுடைய அவ்வேறுகளின்மேலே பாய்கைக்குச் + சேர ஆர்ப்பரித்து ஏறுகளினெதிரேயெதிரே பலருஞ்சென்றார். எ - று.

௧௯ கொலைமலி சிலைசெறி ** செயிரயர் சினஞ் †† சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல்

எ - து: அப்பொழுது அவ்வேறுகள் கொலைத்தொழின்மிக்க ‡‡ சிலைசெறிந்த குற்றத்தைச்செய்யுஞ் சினமிக்கு வெவ்விதாயெழுந்து அவர்மேலே ஓடிற்று. எ - று.

௨௧ எழுந்தது துகள்

எ - து: அப்பொழுது துகள் எழுந்தது. எ - று.

|| || ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர்

எ - து: அவர்களும் மார்புகளை எதிரே கொடுத்தார்; அவற்றின் கொம்புகளுங் கவிழ்ந்து குத்தின; அதனால், தழுவினவர்கள் பலரும் கலங்கிப்போனார். எ - று.

---

௧. மிடை - பரண்.

பிரதிபேதம்) * தாழ்த்திரென்றார், † சாற்றுவள், ‡ நோக்குவாயெல்லா, || பெடையொப்பார், = பாயப்பார், பாய்மார், × எதிர்சென்றார், + சேர வாரவாரித்து. ** செயிரனெஞ், †† னொத்து, செறித்து, ‡‡ சிலைச்செறிந்த, |||| ஏற்றனமார்பு.

௧௬ பலநினைந் தினையும் பைதனெஞ் சி
னலமர லேயு ளுழக்குமென் றோழி
மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநல மேர்தரப் பூண்கநின் றேரே.

**இது தோழி தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவுகடாயது.**

**இதன் பொருள்.**

பொன்மலை (௩)சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் *தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு (௨)மிலங்குநீர்த் தண்சேர்ப்ப

எ-து: (௩)பொன்னையுடைய அத்தகிரியிலே ஞாயிறு சென்றுசேர, அஞ்ஞாயிறு †உடனேபட, ஞாயிறின்றி வருந்தின உலகைநோக்கி உலகங்கொண்டாடும்படியாகத் தகைமையினையுடைய மதி எழாநிற்க, செக்கர்வானத்தைக் கொண்ட அந்திக்காலத்தின்கண்ணே, (௪) முக்கோலைக் கையிலே கொண்ட அந்தணர் முதியமொழியை நினைக்கின்றவர்களைப்போலே, இனமான நாரைகள் ஆரவாரத்தைக் கைவிட்டு இடுமணன்மேலே இறுத்தலைச் செய்யும் இலங்குகின்ற நீரையுடைய சேர்ப்பனே! எ - று.

(௫) அந்தணர், காஷாயம் போர்த்த குழாங்கள். முதுமொழி - பிரணவம். பெரியநாரைசிறகுசிவந்திருத்தலானும்மூக்குத் ‡தரையிலேசென்று ||குத்துதலானும் அதனை முக்கோலை ஊன்றியிருந்தஅந்தணரோடு ÷ ஒப்புரைத்தார்.

(௬)நாரை பகற்பொழுதெல்லாம் பல்லுயிர்க்கு வருத்தஞ்செய்து இரைகவர்ந்து அந்திக்காலத்து ஓர் ஆரவாரமின்றித் தீங்குசெய்யாதாரைப் போலே

௧. "தினக ரன்கரந் திகழ்க மண்டலம், பனிகொள் செக்கர்தம் படமதாகவே, யினிய வந்தனைக் கெறியும் வேலைசேர், புளித ரொத்ததப் புன்கண் மாலையே" வில்லி. சூதுபோர். ௧௪௨.

௨. "இலங்குநீர்ச் சேர்ப்ப" கலி: ௧௨௫: ௧௫.

௩. "அத்தமென்னும், பொன்னஞ் சிலம்பு கதிரோன் மறைதலும்" இறை. சூ. ௧௮. மேற்கோள்.

௪. இந்நூற்பக்கம் ௫௮: ௨ - ஆம் குறிப்புப் பார்க்க.

௫. "சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்" ஐந் - எழு. ௬௮.

௬. "கூர்வாய்ப் பறைதபு பெருங்கிழ நாரை, வஞ்சனை தூங்கி யாரலுண்ணு, நீங்காப் பழனப் பெருநகர்க் கூடல்" கல். ௩௧: ௨ - ௪.

(பிரதிபேதம்) * தகைமதி, † உடனேபட்டு, ‡ தறையிலே, || குத்துதலானுமுக்கோலை, ÷ ஒப்புத்தார்.

குவிந்திருக்குஞ் சேர்ப்பன் என்றதனால், நின்னாட்டின் மகளிர் பிரிந்திருந்தார் உயிர்போதற்கு வேண்டுந் தீங்குகளைப் பகற்பொழுதெல்லாங் கூறி அந்திக் காலத்து ஆரவாரத்தைத் தவிர்ந்து நல்ல மகளிரைப் போலே ஒடுங்கி உறைகின்றார் என உள்ளுறையுவமங் கூறியவாறு உணர்க.

௯ அணிச்சிறை யினக்(௧)குரு கொலிக்குங்கா னின்றிண்டேர்
மணிக்குர லெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யுள்ளான்ற வொலியவா யிருப்பக்கண் (௨)டவைகானற்
புள்ளென வுணர்ந்துபிற் புலம்புகொண் டினையுமே

எ - து: அழகினையுடைத்தாகிய சிறகினையுடைய குருகுகள் இராக் காலத்து ஒருகால் ஒலிக்குமிடத்து நின்னுடைய திண்ணிய தேரின்மணியினோசையென்று இவள் மிகவும் துணியாநிற்கும்; துணிந்த அப்பொழுதே அப்பறவைகள் உள்ளடங்கிய ஒலியையுடையவாய் ஆரவாரியாதிருக்க, அதனைத் தன் (௩)மனத்தாலே தேர்மணியொலியல்லவென்று கண்டு, பின்னர் அவ்வொலியைக் கானலிடத்துப் பறவைகளொலியென்று உணர்ந்து, பின்பு தனிமைகொண்டு வருந்தாநிற்கும். எ - று.

௧௦ நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கா னின்மார்பிற்
றார்நாற்ற மெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென வுணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே.

எ - து: நீரைக் கைவிட்டு மேலாய் நெருங்கின பூ அலர்ந்து நாறுமிடத்து நின்மார்பிற் கிடந்த மாலையினது நாற்றமென்று இவள் மிகவுந் துணியாநிற்கும்; துணிந்த அப்பொழுதே அப்பூக்கள் அலருஞ் செவ்வி

---

௧. இந்நூற்பக்கம் ௭௯௩: ௫ - ஆம் குறிப்புப் பார்க்க.

௨. (அ) "அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட, மணியரவ மென்றெழுந்து போந்தேன் - கனிவிரும்பும், புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழா, யுள்ளுருகு நெஞ்சினே னாய்" ஐந்-ஐம். ௫௦. (ஆ) "இடுமணலெக்க ரகன்கானற்சேர்ப்பன், கடுமாமணியரவமென்று- கொடுங்குழாய், புள்ளரவங் கேட்டுக் கலுழ்ந்தாள் சிறுகுடிய, ருள்ளரவ நாணுவ ரென்று" ஐந் - எழு. ௫௧.

௩. காணுதலென்பதற்கு விளங்கவறிதலென்று நீலகேசியுரையாசிரியர் பொருள் கூறுதலால், இங்கே அது காதினால் விளங்கவறிதலின்மேல் நின்றதென்றலுமாம். "நம்பி தந்த கீத மோச யந்து காண வோடினார்" (சீவக. ௨௦௩௭) என்புழி, காணவென்பதற்கு, கேட்கவென்றுபொருள் கூறியிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

விடத்து அவற்றை அசைத்த காற்றுவந்து தன்மேற்பட, அதனைக் கழியிற் பூத்த மலரினது மணமென்று உணர்ந்து, பின்பு மயக்கங்கொண்டு வருந்தா நிற்கும். எ - று.

கச நீணகர் நிறையாற்று ணினையுநள் வதிந்தக்காற்
(க)றோண்மேலா யெனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
(உ)நனவெனப் புல்லுங்காற் காணாளாய்க் கண்டது
கனவென வுணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே

எ-து: உயர்ந்தமனையிலே மனத்தைநிறுத்துதலைமாட்டாளாய்(ங)நின்னை நினைத்து அவசத்தாற் சிறிதுதுயின்றவிடத்துத் தன் தோண்மேற்கிடந்தாயாக நின்னை மிகவுந் துணியும்; துணிந்த அப்பொழுதே மெய்யென்று கருதித் தழுவுமிடத்து உன்வடிவைக் காணாளாய்த் * தான்கண்டது கனவாயிருந்த தென்று அறிந்து பின்பு செயலற்றுக் கலங்காநிற்கும். எ - று.

†எனவாங்கு

எ - து: என்று; எ - று. ஆங்கு, அசை.

கரு (ச)பலநினைந் தினையும் பைதனெஞ்சி
னலமர லேயு ளழக்குமென் (ரு)றோழி

---

க. (அ) "துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா, னெஞ்சத்த ராவர் விரைந்து" குறள். கஉகஅ. என்பதும் (ஆ) "வேய்புரை மென்றோ ளின்றுயி லென்றும், பெறுஅன் பெயரினும்" குறிஞ்சி. உசஉ-உசங. (இ) "பாயல்கொண் டென்றோட் கனவுவார்" கலி. உச: எ. (ஈ) "இளையோள், பெருந்தோ ளின்றுயில் கைவிடு கலனே" அகம். கசுங: கங - கச. (உ) "நறுநுதலா, ராவி தளிர்ப்ப வவர்தோண்மேற் றுஞ்சி ஞர்" (ஊ) "நல்லா ரவர்தோண்மேற் றுஞ்சினர்" சீவக. கருஎரு, கருஎசு. என்பவைகளும் (எ) "மென்றோட் டுயில்பெறும்" (கலி. கoச: உச) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. "நனவினா னல்காக் கொடியார் கனவினா, னென்னெம்மைப் பீழிப் பது" குறள். கஉகஎ.

ங. "நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற், கனவிற் கண்டு" (கலி. சக: ங - ச) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ச. (அ) "பலநாடு நெஞ்சினேம்" (ஆ)"பலசூழு மனத்தோடு பைதலேன்" கலி. ஙரு: கக, சசு: கஎ.

ரு. "ஆய்நலம் பெயர்தரப், புரியுளைக் கலிமான்றேர் கடவுபு, விரிதண் டார் வியன்மார்ப விரைகநின் செலவே" (கலி. கஉச: கக - உக.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * நாங்கண்டது. † எனவாங்கு, அசை,

மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநலமேர் தரப் பூண்கநின் றேரே

*எ-து: பலவற்றையும் நினைத்து வருந்தும் நோயையுடைய நெஞ்சாலே சுழலுதலையுடைய காமநோயிலே அழுந்தும் என் தோழியுடைய மதியென்று மருளும் ஒளியினையுடைய முகம் விளங்கும்படி புதிய நலம் எழுதலைச் செய்ய நின் தேர் குதிரையைப் பூண்பதாகவென வரைவுகடாயினாள். எ - று.

இதனால், தலைவற்குப் புணர்ச்சி யுவகை பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (௧)

(௧௨௭.) தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப விருந்தும்பி யிமைப்பூதச்
செருமிகு நேமியான் றார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;

கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வாலெக்கர்
நடுங்குநோய் தீரநின் குறிவாய்த்தா ளென்பதோ
கடும்பனி யறலிகு கயலேர்கண் பனிமல்க
விடும்பையோ டினைபேங்க விவளைநீ துறந்ததை;

குறியின்றிப் பன்னாணின் கடுந்திண்டேர் வருபதங்கண்
டெறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்பதோ
வறிவஞ ருழந்தேங்கி யாய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர விவளைநீ துறந்ததை;

காண்வர வியன்றவிக் கவின்பெறு பனித்துறை
யாமத்து வந்துநின் குறிவாய்த்தா ளென்பதோ
வேய்நல மிழந்ததோள் விளங்கிழை பொறையாற்றாள்
வாணுதல் பசப்பூர விவளைநீ துறந்ததை;

அதனால்;

இறைவளை நெகிழ்ந்த வெவ்வநோ யிவடீர
வுரவுக்கதிர் தெறுமென வோங்குதிரை விரைபுதன்
கரையம லடும்பளித் தாஅங்
குரவுநீர்ச் சேர்ப்ப வருளினை யளியே.

(பிரதிபேதம்) *எ - து: என்று பலவற்றையும்.

இதுவுமது.

இதன் பொருள்.

தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
(௧)*வரி(௨)ஞிமி (௩)றிமிர்ந்தார்ப்ப (௪)விருந்தும்பி யியைபூதச்
செருமிகு (௫)நேமியான் றார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப

எ - து: போரின்கண் மிகுகின்ற சக்கரத்தையுடைய திருமால் திருத்தோளிற் சேர்ந்த மாலைபோலே பெரிதாகிய கடற்கரையில் அறலையுடைய மணலிடத்தே விளங்குகின்ற கொத்தினையுடைய(௬)ஞாழற்பூவும் தேன்நாறு

---

௧. "வரிஞிமிறு" குறிஞ்சி. ௧௧௧.

௨. "நரம்பின் றீங்குரலிறக்குங்குழல்போ, லிரங்கிசைமிஞிறொடு தும்பிதாதூத" கலி. ௩௩: ௨௨ - ௨௩.

௩. "இமிர்ந்தார்ப்ப" கலி. ௧௩௧: ௬.

௪. "இருந்தும்பி யியைபூத" கலி. ௧௨௩: ௨.

௫. பலமலர்கள் விரவி நீளக் கிடத்தல்பற்றி, 'நேமியான்றார்போல' என்றார்; (அ) "பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போற், றிருவில் விலங்கூன்றி" கார். ௧, எனவும் (ஆ) "அகலிரு வானத்துக் குறைவில் லேய்ப்ப, வரக்கிதழ்க் குவளையொடு நீல நீடி, முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கை" பெரும்பாண். ௨௯௨-௨௯௪. (இ) "எருவை கோப்ப வெழிலணி திருவில், வானி லணித்த வரியூதும் பன்மலராற், கூனி வளைத்த சுனை" பரி. ௧௮: ௪௮ - ௫௦, எனவும் வருபவற்றைநோக்குக.

௬. ஞாழல் - நெய்தனிலத்துக்கு உரித்தாகக் கூறப்படுவதொரு பூமரம்; (அ) அது "ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்காற், கொழுநிழன் ஞாழன் முதிரிணர்கொண்டு, கழுமமுடித்துக் கண்கூடு கூழை" (கலி. ௫௬: ௧ - ௩) என்பதன் விசேடவுரையில் 'ஞாழன் முடித்தானென நெய்தற்றலைவிபோலவும், ஊர்க்கா னிவந்த பொதும்பரென்றதனான் மருதத்துக்கண்டான் போலவுங்கூறி' என்றும்(ஆ)நெய்தற்கு, 'மரம், புன்னையும் ஞாழலும் கண்டலும்' (தொல். அகத். சூ. ௧௮. உரை.) என்றும் இவ்வுரையாசிரியர் எழுதியிருத்தலானும்(இ) நெய்தற்றிணைக் கருப்பொருளுக்கு, "நறுஞாழல் கையினேந்தி என்பதனாற் பூவுங் கூறினார்" (சிலப். பதி. விசேடவுரை) என்று அடியார்க்குநல்லார் எழுதியிருத்தலானும் (ஈ)* பரிபாடலும் புறநானூறு மொழிந்த மற்றைத் தொகை நூல்களினும் சீவக. சிலப். மணி முதலிய நூல்களிலும்

(பிரதிபேதம்) * வரிமிஞிறு.

இன்ற(௧)புன்னைப்பூவும் தளையவிழ்ந்தபூக்களையுடையனவாகிய(௨)தாழம்பூவும் தளையவிழ்ந்த பூக்களையுடையனவாகிய (௩) *செருந்திப்பூவும் வரியினையுடைய

---

நாற்கவி ௨௪-ஆம் சூத்திரத்திலும் இது நெய்தற்கே உரித்தாகக் கூறப்பட்டிருத்தலானும் அறியலாகும். இம்மரம் எக்கரிற்செழித்துவளர்வது; (உ) அது ஐங்குறுநூற்று ஞாழற்பத்தால் அறியலாகும். இதன் அரையும் கொம்பும் கருநிறமுடையன; அவற்றை (ஊ) "எஞ்ஞான்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலும்" (கலி. ௨௬: ௪) என்பதும் (எ) 'ச்யாமா' என வடமொழியிலுள்ள பெயரும் (ஏ) "செவ்வீ ஞாழற் கருங்கோட்டிருஞ்சினை" அகம். ௨௪௦: ௩. என்பதும் வலியுறுத்தும். அவ்வரை பொரிந்திருப்பது; அது (ஐ) 'பொரியரை ஞாழலும்' சீவக. ௫௧௫. என்பதனால் அறியப்படும். நெய்தனிலத்து மகளிர் இதன்குழை கொய்தும் இதனாலாக்கிய தழையுடுத்தும் இதிற்றூக்கிய ஊசலாடியும் இன்புறுவரென்பதுமரபு; அவற்றை (ஒ) "ஞாழன் மலரின் மகளி, ரொண்டழை யயருந் துறைவன்" ஐங். ௧௪௭. (ஓ) "கொய்குழை யரும்பிய குமரி ஞாழல்" நற். ௫௪: ௩.(ஔ) "கானன் ஞாழற் கவின்பெறு தழையள்" ஐங். ௧௧௧. (ஃ) "ஞாழ லோங்குசினைத் தொடுத்த, தாழைவீழ் கயிற் றூசல்" அகம். ௨௦: ௫-௬. என்பவை வலியுறுத்தும். இது செறிந்தபூங்கொத்தினது; (அஅ) "இணர்ததைஞாழல்" பதிற். ௩௦: ௧. என்பதனால் உணர்தற்பாலது. இது பசிய அரும்புள்ளது; (ஆஆ) "பசுநனைஞாழல்" குறுந். ௮௧. என்பதனாற் பெறப்படும். இதன்பூ, பொன்னிறமும் சிறிய உருவமும் நன் மணமும் வண்டினமொய்த்தலுமுடையது; அவற்றை (இஇ) "பொன்னிணர் ஞாழல்" ஐங். ௧௬௯. (ஈஈ) "ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்" குறுந். ௫௦. (உஉ) "நறுவீ ஞாழல்" நற். ௯௬: ௧. (ஊஊ) "கணங்கொள்வண் டார்த்துலாங் கன்னி நறுஞாழல்" என்பவற்றால் அறிக. இப்பூ, பசப்புக்கும் சுணங்குக்கும்உவமையாதல் இந்நூல் ௧௩௧: ௧௧ - ஆம் அடிக்குறிப்பிற் காட்டப்படும். ஞாழலென்பது குங்குமம், ஒருவகைக் கொன்றை, கோங்கு, பலினி முதலிய பலமரத்துக்கும் பெயராமாயினும் நெய்தற்கருப்பொருளில் அதுபலினியையேகுறித்து வருமென்ப; பலினி யென்பது வடமொழிச் சிதைவு.

௧. புன்னையின் செய்தி கலி. ௧௩௬: ௩-ஆம் அடிக்குறிப்பிற்காணலாகும்.

௨. தாழையின் செய்தி கலி. ௧௩௧: ௧௦ ஆம் அடிக்குறிப்பிற் குறிக்கப்பெறும்.

௩. (அ) "பாசிலைச், செருந்தி தாய விருங்கழிச் சேர்ப்பன்" (ஆ) "எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழ" (இ) "வண்டுபட, விரிந்த செருந்தி வெண்மணன் முடுக்கர்" (ஈ) "செருந்தி, யிருங்கழி தாழு மெறிகடற்

(பிரதிபேதம்) * செருந்திப்பூவும் சூழ்ந்துகிடக்கும் விளங்குகின்ற சேர்ப்பனே, எங்ஙனம் *சூழ்ந்துகிடக்குமென்னில் வரியினை.

மின்றுஞ் சிறிதே ஒலித்து மிக ஆரவாரிப்பக் *கரிய தும்பிகள் தம்மில் இயைந்து தேனையூதச் †சூழ்ந்துகிடக்கும் விளங்குகின்ற நீரையுடையசேர்ப்பனே! எ-று.

கடலினது புலால்நாற்றமாகிய தீங்கினைப் பூக்களின்மணம் போக்கினவதனை அக்கடல் அறியாதிருக்கின்ற சேர்ப்பனென்றதனான், நின்வருத்தத்தைத் தீர்க்க ‡வேண்டுமென்று கருதி அவள் நின்னிடத்தே வந்து தீர்த்த நிலையை நீயறிந்திலையென மேல்வருகின்ற தாழிசைப்பொருளையுள்ளுறுத்து உள்ளுறையுவமந் தந்தவாறுகாண்க.

சு கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வாலெக்கர்
(க) நடுங்குநோய் தீரநின் குறிவாய்த்தா ளென்பதோ
கடும்பனி யறலிகு கயலேர்கண் பனிமல்க
விடும்பையோ டினைபேங்க விவளைநீ துறந்ததை

எ - து: முன்னர்க் கடியதாகிய நீர் பின்னர்ச் சுவறுதலின் அறலினை யுடைத்தாய் விழுகின்ற, கயலையொத்த கண் நீர்ற்று(உ)மல்குகின்ற அளவாய் நிற்க, வருத்தத்தோடே கெட்டு அழும்படி இவளை நீ துறந்தது, நின் மனம் நடுங்குதற்குக் காரணமாகிய காமநோய் தீரும்படியாகச் சுறவு முதலியன வற்றையுடைமையாற் ||கொடிய கழிகள் சூழ்ந்த மலைபோல் உயர்ந்த வெண்மையையுடைய இடுமணலிடத்து நீ செய்த குறியிடத்தே தப்பாமல் வந்தாளென்பதோ? எ - று.

என்பதோ என்றது என்று சொல்லப்படுவதோவென்னும் பொருட்டு நில்லாது வாய்த்தாளென்னுஞ் சொல்லுணர்த்திய செய்ந்நன்றியைத் தானும் உணர்த்திப் பிரிவிலசைநிலையாய் நின்றது. இஃது "ஆக வாக லென்ப

றண் சேர்ப்ப" (உ) "பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்தி" (௩) "பருதியஞ் செல்வன்போ லிணரூழ்த்த செருந்தியும்" (௪) "அரும்பலர் செருந்தி நெடுங்கான் மலர்" (௫) "தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்" (௬) "செருந்தி, காலை யேகன கம்மலர் கின்ற சாய்க் காடே" (௭) "பொன்னியன்ற, தட்டலர்த்த பூஞ்செருந்தி" என்பவற்றால் செருந்தி நெய்தற்குரித்தாதலும் அதன் பூவினியல்பு முதலியனவும் அறியப்படும்.

க. "நடுங்குநோய் செய்தவர் நல்காமை நினைத்தலிற், கடும்பனிகைமிகக் கையாற்று ளாழ்ந்தாங்கே, நடுங்குநோ யுழந்தவென் னலனழிய மணநோக்கி, யிடும்பைநோய்க் கிகுவன போலுமஃ தென்கொலோ" கலி. கநஅ: கரு - கஅ.

உ. "கண்ணிறை நெடுநீர் கரந்தன ளடக்கி" என்பதும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன. சிலப். கரு: ளஎரு; அடியார்க்கு.

(பிரதிபேதம்) * கரியதாகிய. † சூழ்ந்துகிடக்குமென்க, கடலினது, ‡ வே[illegible]மென்று கருதி யவனிடத்தே, || கொடியதாகிய.

தென்று, * மாவயின் மூன்றும் பிரிவி லவைநிலே” என்னும் (க) சூத்திரத்து என்ப † தென்றதற்கு உதாரணமாகக்காட்டினும்; அதனுலுணர்க. ஏனையவும் இவ்வாறேகொள்க.

௧௦ (உ)குறியின்றிப் பன்ணுளின் கடுந்திண்டோ் வருபதங்கண்
டெறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்பதோ
வறிவஞ ருழந்தேங்கி (ங)யாய்நலம் வறிதாகச்
செறி(ச)வளை தோளூர விவளைநீ துறந்ததை

எ - து: தன்னறிவு வருத்தத்தே அழுந்தி அழுது ஆராய்ந்தநலம் சிறிதாகையினாலே முன்புசெறிந்தவளைதோளினின்றுங்கழன்றுவிழும்படி இவளை நீ துறந்தது, எறிகின்றதிரை யொலிக்கின்ற கடற்கரையிலே நின்னுடைய கடியதாகிய தேர் இன்ன காலத்தே வருமென்னுங்குறிப்பின்றிப் பலநாளும் வருங்காலத்தை(ரு)மனத்தாலே நோக்கி எதிர்கொண்டாளென்பதோ ? எ-று.

திரையொலியால், தேரொலி கேட்டற்கு அரிதாகவும் அவ்வொலிகேட்டு எதிர்கொண்டாளென்றாள்.

௧௪ காண்வர வியன்றவிக் கவின்பெறு பணித்துறை
யாமத்து வந்துநின் குறிவாய்த்தா ளென்பதோ

---

க. தொல். இடை. சூ. ௩உ. இச்சூத்திரத்தின் இவுருரையிலும் 'என்பது' என்றது என்றுசொல்லப்படுவதென்னும் பொருள்தந்து நில்லாது வாய்த்தாள், எதிர்கொண்டாள் என்னுஞ்சொற்கள் உணர்த்திய செய்ந் நன்றியைத் தானும் உணர்த்தி நின்றதென்பதற்கு "நடுங்குநோய்... ......துறந்ததை" "எறிதிரை... .....துறந்ததை" என்னும் பகுதிகள் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன.

உ. களவொழுக்கத்துத் தேரேறிச்சென்று தலைவர்கூடுதற்கு, "குறியின்றி ... ......தோளூர விவளைநீ துறந்ததை" என்னும் பகுதி மேற்கோள்; தொல். பொருளி. சூ. கஅ. நச்.

௩. "மென்மேலுண் ஞெகிழவுந் திருநுதல் பசப்பவும், பொன்போல் விறற் கவின் றொலைத்த குன்ற நாடற்கு" ஐங். உ௩௦.

ச. வளையென்றது தொடியை; அது முன் 'செறி' என அடைகொடுத்த லானும் பின் 'தோள்' என இடங்குறித்தலானும் துணியப்படும். தொடி, வளையென்றும் வழங்கப்படுதற்கு, குறள். கஉ௩ச, கஉ௩ரு, பரிமேலழகருரையும் சான்று பகரும். 'முன் வளைகழல நின்றார்க்கு வருத்தமிகுதியால் தொடியுங் கழன்றன வென்க' (சீவக. சசுக. விசேடவுரை) என்பதும் இங்கே அறிதற்பாலது.

ரு. இந்நூற்பக்கம் எஅச: ௩ - ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * ஆவியன் மூன்றும். † என்பதற்குக் காரணமாகக் காட்டினும்.

வேய்நல மிழந்ததோள் விளங்கிழை பொறையாற்றா
வாணுதல் பசப்பூர விவளைநீ துறந்ததை

எ - து: மூங்கில் நன்னலனிழத்தற்குக் காரணமான தோள்களிற் கிடந்து விளங்குகின்ற பூண்களை அத்தோள் பொறுத்தலைச் செய்யாமல் மெலிந்து (௧) வாணுதல்பசப்புப்பாக்கும்படி இவளைநீ துறந்ததுநோக்கினோர்க்குக் காட்சி வரும்படியாகப் பண்ணினதோர் அழகைத்தான்பெறுகின்ற இப்பனித் துறையிலே *நடுயாமத்தே நீ வந்து செய்த நின் வரவு உணர்த்திய குறியிலே தப்பாமல் வந்தாளென்பதோ? எ - று.

தன்மெலிவு தோள்பொறாமைக்குக் காரணமாய் நின்றது. ஆற்றாளாவென்னும் முதல்வினை நுதல்பசப்பூரவென்னுஞ் சினைவினையோடு முடிந்தது. (௨) †இவளையென்றது இங்ஙனம் நன்மை செய்தவளையென்றும், நீயென்றது அங்ஙனங் குறைந்துநின்ற நீயென்றும் பொருள் தந்தன.

தாழிசைமூன்றும், பொச்சாப்பென்னுமெய்ப்பாடு ‡பயந்தன.

௧அ அதனால்

இறைவளை நெகிழ்ந்த வெவ்வநோ யிவடீர
வுரவுக்கதிர் தெறுமென வோங்குதிரை விரைபுதன்
கரையமம் (௩) ||லடும்பளித் தாஅங்
(௪) குரவுநீர்ச் சேர்ப்ப வருளினை ÷யளியே

எ - து: வலியினையுடைத்தாகிய நீரையுடைய சேர்ப்பனே! நினக்குச் செய்ந்நன்றிக்கேடு உண்டாம், ஆகையினாலே அதுதீர வலியினையுடைய ஞாயிறு சுடுமென்று கருதி ஓங்குகின்ற திரை தன் கரையில் நெருங்கின

---

௧. (அ) "நீ துறத்தலிற், பல்லோரறியப் பசந்தன்று நுதலே" (ஆ) "வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே" ஐங். ௫௫, ௭௨௩. (இ) "நுதலூரும் பசப்பு" (ஈ) "பிறைநுதல் பசப்பூர" கலி. ௨அ: ௧௫, ௯௯: ௧0.

௨. "அந்தா மரையன்ன மேனின்னை யானகன் றாற்றுவனோ" (கோவையார். ௧௨) என்பதன் விசேடவுரையில் 'நின்னையென்புழி உயிரினுஞ் சிறந்த நின்னையென்றும், யானென்புழி இருதலைப் புள்ளினோருயிரேனாகிய யானென்றும், அச்சொற்களால் விளங்கி நின்றன' என்று பேராசிரியர் எழுதியிருப்பதும் இங்கே அறிதற்பாலது.

௩. அடும்பின் செய்தியை, கலி. ௧௪௪: ௩0-ஆம் அடிக்குறிப்பிற் காண்க.

௪. (அ) "உரவுநீ ரழுவத்து" மணி. எ: ௧௨௫. (ஆ) "உரவுநீர் ஞாலத்து" பு - வெ. பாடாண். ௪௩. (இ) "உரவுநீர் நிலத்து" கம்ப. பால. ஆற்றுப். ௧௨. உரவு - வலி; உரவுதலெனின், உலவுதலென்றாக்கி, பரத்தலென்றலுமாம்.

(பிரதிபேதம்) * நடுவியாமத்தே, † இவளொன்றது, ‡ பயன், || அடும்பனித்தாஅங் குரவுநீர், ÷ அளிமே.

அடும்பை விரைந்தளித்தாற்போல இவளுடைய இறையில் வளைகழன்ற வருத்தத்தையுடைய நோய்தீரும்படி அருளினையாய் வரைந்துகொள்ளென வரைவுகடாயினாள். எ - று.

(௧)வளைகழலுதல் வெளியாக வருத்தத்தைவிளக்குதல்பற்றிச் சுரிதகத்து வளைநெகிழ்தலைக்கூறினாள்.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (௧௦)

(௧௨௯.) தோடுறந் தருளா தவர்போ னின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
யாடுகோட் டிருந்த வசைநடை நாரை
நளியிருங் கங்கு னத்துய ரறியா
௫ தளியின்று பிணியின்று விளியாது நரலுங்
கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை யென்றி யாயி
னனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டியான் செய்தது கேளினி;

௧௦ அலந்தாங் கமையலெ னென்றானைப் பற்றியென்
னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்
கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்;

௧௪ முலையிடைத் துயிலு மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தே னழுவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்;

௧௮ கோதை கோலா விறைஞ்சி நின்ற
வூதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்
யாதென் பிழைப்பென நடுங்கி யாங்கே
பேதையை பெரிதெனத் தெளிப்பான் போலவும்;

ஆங்கு;

௧. "துறைவன் றுறந்தமை தூற்றாகொன் முன்கை, யிறையிறவா நின்ற வளை" குறள். ௧௧௫௭.

முன்னர்ப் பலரும் வருகவென்று சாற்றுதலிற் பல ஏறுகளும் விடப் பலருந் தழுவித் தோற்ரு *ரென்ருர்.

௨௭ அவருள்,(௧)மலர்மலி †புகலெழ வலர்மலிர்மணிபுரைநிமிர்தோள்
‡பிணைஇ
§யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் ருென்றி
வருத்தினன் மன்ற||வவ் வேறு

எ - து: அங்ஙனம் ஏறுதழுவ ÷ வந்தவர்களுட் பாத்தல் மிக்க விருப்பம் எழுதலாலே பூமலிந்த நீலமணியையொக்கும் நிறத்தையுடைய நெடிய தோள்களாலே ஏற்றின் கழுத்தை இறுகத் தழுவிக் கழுத்தோடேகூடக் கிடக்கின்ற (௨)குட்டேற்றிடத்தே தோன்றினன்; அங்ஙனந் ∴தோன்றிப் பின்னர் அறுதியாக அவ்வேற்றை வருத்தினனென்ருர். எ - று.

௨௮ =ஏறெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ
×வேறுடை நல்லார் பகை

எ-து: ஏற்றையுடைய நல்லவர்கள் தங்கள் ஏற்றினுடைய வருத்தத்தைக் கண்டு எழுந்திருந்தார்; அவன் தழுவினவாற்றிற்கு மகிழ்வதன்றிப் + பகையாதல் என்னபயன் தருமென்ருர். எ - று.

கொல்லும் ஓவும், அசை.

௩௦ மடவரே நல்லாயர் மக்க **ளொருந
லடலேற் றெருத்திறுத்தார்க் ††கண்டுமேற் றின்று
முடலேறு கோட்சாற் றுவார்

எ - து: முன்னொருநாளிலே கொல்லுதலையுடைய ஏற்றின் கழுத்திலே தங்கினவர்களைக் கண்டு வைத்தும்‡‡ இன்றும் உடலுகின்ற ஏற்றைத் தழுவச் சாற்றுவாராகிய நல்ல ஆயர் மக்கள் அறியாதவர்களேயென்ருர். எ - று.

௩௩ ||||ஆங்கு
தண்ணுமைப் பாணி தளரா ++தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்

---

௧. அறுசீரடி முடுகி வந்ததற்கு "மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ" என்பது மேற். தொல். செய். சூ. ௬௯. பேர்.

௨. குட்டேறு-ஏற்றின்முதுகில் புறக்கழுத்தையடுத்துத் திரண்டு உயர்ந்து தோன்றும் ஒருறுப்பு; இச்சொல் இவ்வுரைநடையில் பயின்று வரும்.

(பிரதிபேதம்) *என்ருள், † புகழெழ அலர்மலி மணிபுரை நிரைதோள், ‡ பிணைஇ, வினைஇ. § எருத்தோட்டிமில், || இவ்வேறு, ÷ வந்தவர்கள் பார்த்தன்மிக்க, ∴தோன்றிய பின்னரறுதியாகவேற்றை, = ஏற்றெவ்வம், × ஏற்றுடை நல்லார்ப்பகை, + பகையாதலால்என்ன, ** நெருநையடல், நெருநலையடல், †† கண்டுமேற்றின்று முடலேற்றுக்கோட், ‡‡ மீண்டுமுடலு. |||| ஆங்கு தண். ++ எழுவுகப்ப

௨௫. களவினாற் கண்டேன் றோழி காண்டகக்
கனவின் வந்த கானலஞ் சேர்ப்ப
னனவின் வருதலு முண்டென
வனைவரை நின்றதென் னரும்பெற லுயிரே.

**இது வரைவிடையாற்றளாய்ச் செல்கின்ற தலைவியது கவின்கண்டு வினாயதோழிக்கு அவள் தான்கண்ட கனவுநிலையுரைத்தது.**

**இதன் பொருள்.**

தோடுறந் தருளா தவர்போ னின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
யாடுகோட் டிருந்த வசைநடை நாரை
நளியிருங் கங்கு னந்துய ரறியா
தளியின்று பிணியின்று விளியாது நரலுங்
கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை யென்றி யாயி
னனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டியான் செய்தது கேளினி

எ - து: வாடைக்காற்று அசைக்கையினாலே வளைந்த தாழையின் அசைகின்ற கொம்பிலே இருந்த அசைந்தநடையினையுடைய நாரை நம் தோளைத் துறந்து நமக்கு அருளாதவரைப்போலே நின்று பெருமையையுடைய கங்குலிடத்து நந் துயரை அறியாமல் நம்மேலளித்தலின்றாய்த் (௧)தனக்குக் காமநோயாலே வருத்தமின்றாய் மாறாமற் கூப்பிடுங் கானலையுடைய அழகிய சேர்ப்பினையுடையவனைக் கண்டு (௨) கூடினாய்போலே புதிதாக ஓர் அழகினை

---

௧. "தேற றேங்குழிக், களிப்பவுண் டிளவனங் கன்னி நாரையைத், திளைத்தலின்" (சீவக. ௬௦.) என்பதற்கு, 'தேறல் மிக்குச் செறிந்த இடத்தே, காமவின்பம் அறிந்த அன்னம் அதனையுண்டு காமவின்ப நுகர்ந்தறியாத நாரையைப் புணர்தலின்' என இவ்வுரையாசிரியர் எழுதியிருப்பது இங்கே அறிதற்பாலது.

௨. (அ) "ஆரிடை யென்னாய்நீ யாவஞ்சாய் வந்தக்கா, னீரற்ற புலமே போற் புல்லென்றாள் வைகறை, கார்பெற்ற புலமேபோற் கவின் பெறும்" (கலி. ௩௮: ௧௦ - ௧௨) என்பதும் (ஆ) இந்நூற்பக்கம் ௨௧௨: ௧-ஆம் குறிப்பும் (இ) "நாடன், புணரிற் புணருமா ரெழிலே பிரியின், மணிமிடை பொன்னின் மாமை சாயவென், னணிநலஞ் சிதைக்குமார் பசலை" என்பதும் இங்கே அறிதற்பாலன.

யுடையையாளுயென்று கூறுகின்றாயாயின் வெளியாக வாராத உறவில்லாத வினைக் கனவிடத்தே கண்டு யான் செய்த காரியத்தை இப்பொழுது கேள். எ - று.

கO அலந்தாங் (க)கமைபமெல (உ)னென்றானைப் பற்றி(ங)யென்
னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்
*கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்

எ - து: நின்னைப் பிரிந்த இடத்து வருந்தி உயிர்வாழேனென்று கூறின வனைப் பிடித்துக்கொண்டு நீகொண்ட என் நலத்தை இனித் தாராயென்று வளைத்துக்கொள்வேன்போலேயும், அவ்விடத்தே என்னுடையகழிந்த அழகை யான் பெறும்படி புல்லிக் கூடி இனி வருந்தாதேகொள்ளென்று கூறி என்னையும் அளிப்பான்போலேயும். எ - று.

கச (ச)முலையிடைத் துயிலு மறந்தீத் தோயென
நிலைபழி நெஞ்சத்தே னழுவேன் போலவும்

---

க. "நின்னின்றி யமையலேன் யானென்னு மவனாயின்" கலி சஎ: கூ.

உ. (அ) "தந்தனை சென்மோ... .....தண்கடற் சேர்ப்பநீ யுண்டவென் னலக்கே" (ஆ) "என்னலந் தந்து, கொண்டனை சென்மோ" (இ) "தண்ணந் துறைவற் றொடுத்து நந்நலங், கொள்வா மென்றி தோழீ" குறுந். உஙசு; உஙஅ; ஙசகூ. (ஈ) "நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த, பன்மீ னுணங்கல் கவரும் துறைவனைக், கண்ணினாற் காண வமையுங்கொ லென்றோழி, வண்ணந்தா வென்கந் தொடுத்து" ஐந் - எழு. சுகூ. எனவும் (உ) "இரவுகந்தருளு கனவினிர், பகலிழந்த நிறை பெறமுயன்றுமொழி பதறுமாதர்" கலிங்க. உஎ. எனவும். வருவன காண்க.

ங. கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாதனவற்றை இரத் தற்கண் தாவென் கிளவி வருவதற்கு, "என்னலந்தாராய்" என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. ருO. நச்.

ச. (அ) "நீயுந், தேம்பா யோதி திருநுத லீவிக், கோங்குமுகைத்தன்ன குவிமுலையாகத், தின்றுயி லமர்ந்தனை" அகம். உசO: கூ - கஉ. (ஆ) "அவர்நம், மேந்துமுலை யாகத்துச் சார்ந்துகண் படுப்பவும்" தொல். கற். சூ. சு.நச். மேற்.(இ)"விரிந்த பைத்தலை வெள்ளிவெம் பாப்பணைத் துயின்ற, கருந்துழாய் முகில் கார்நிறக்கட்செவிச்சேக்கை, பொருந்தி யாங்கொரு புரிகுழல் புணர்முலைக் கோட்டி, னாந்த மூழ்கிய நறு மலர்ப் பிணையன்மேற்றுயிலும்" பாக. பதினாறுயிர் திருவிளை. ஙஉ.

(பிரதிபேதம்) * கலந்தாங்கே.

ளறிவித்து நீநீங்கக் கருதியாய்க் கப்பொருள்
சிறுவித்த மிட்டான்போற் செறிதுய ருழப்பவோ

---

(1) "வெண்டிரை பொருத வேலை வாலுகத்துக், குண்டுநீ ரடைகரைக் குலைவயிரும்,புன்னை" (2)"முதுநீர்ப், புணரிதிளைக்கும் புள்ளிமிழ்கானல், விணரவிழ் புன்னை யெக்கர் நீழல்" (3) "உரவுத்திரை பொருத தணி மணலடைகரை, நனைந்த புன்னை மாச்சினை" (4) "ஓங்கல் வெண் மணற் றாழ்ந்த புன்னைத், தாதுசேர் நிகர்மலர்" (5) "வான்கடற் பரப் பிற் றூவற் கெதிரிய, மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த, முடவு முதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப், புள்ளிறை கூரு மெல்லம் புலம்ப" (6)"பாரரைப் புன்னைச் சேரி" (7) "நுரைபிதிர்ப் படுதிரைப், பாரரைப் புன்னை வாங்குசினை" (8) "முடக்காற் புன்னையும்" (9) "கொடுங்காற் புன்னை" (10) "நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்ப வும்" (11) "எல்லி யன்ன விருணிறப் புன்னை, நல்லரை முழுமுத வ்வயிற் றொடுத்த, தூங்க லம்பி" (12) "கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில்"(13)"நெடுஞ்சினைப்'புன்னை" (14)"குறுஞ்சினைப் புன்னை நறுந்தாது" (15) "பைங்கோட்டு மலர்ப் 'புன்னை" (16) "இரும்பி னன்ன கருங்கோட்டுப்புன்னை, பொன்னினன்ன நுண்டாதிறைக்குஞ் சிறுகுடி" (17)"பெருங்காற் புன்னைக் கருங்கோட் டணைத்த, நாவாய்" (18) "கடலே, காறந்த கலனெண் ணுவோர், கானற் புன்னைச் சினை நிலைக் குந்து"(19)"குவவுமண லடைகரை, நின்ற புன்னை நிலந்தோய் படுசினை, வம்பநாரை சேக்குந், தண்கடற் சேர்ப்ப" (20) "புன்னை, யலங்குசினை யிருந்த வஞ்சிறை நாரை" (21) "கன்னியம் புன்னைமே லன்னங்காள்" (22) "பெருங்கடற் 'கரையது சிறுவெண் காக்கை, கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்கு" (23)"வதிகுரு குறங்கு மின்னிலைப் புன்னை" (24) "இறுநுசுப்பி னஞ்சலா ரேந்துவள்ளத் தேந்திய, நறவங்கொப்புளித்தலி னருகு புன்னை பூத்தன, சிறகர் வண்டு செவ்வழி பாடமாடத் தூடெலா, மிறைகொள்வானின் மீனென" (25) "அலம்புமணி மேகலையு மரிக்குரற்கிண் கிணியுமணிச் சிலம்பு மார்ப்பக், கலம்படுபொற் குயமடவா ராடுதலு மாட்டமைதி கவினக் கண்டு, நலம்படுபொற் பரிசிலெதிர் வீசுவபோ லிளம்புன்னை நறிய வீயின், குலம்புதிது பூத்துகுப்ப விம்மிதராய்ச் சிலரிவர்ந்து குற்று நின்றார்" (26) "பொன்னென நன்மலர் நறவீ தாஅம் புன்னை நறும் பொழில்" (27) "பொங்கிரும் புன்னைப் பூம்பொழில்" (28) "எழிற்பூம் புன்னைப் பொழில்" (29) "இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை, நீலத்தன்ன பாசிலையகத்தொறும், வெள்ளியன்னவிளங்கிணர்நாப்பட், பொன்னினன்ன நறுந்தா துதிர" (30) "அகலிலைப் புன்னைப் புகரி னீழல்" (31)"புன்னை, வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளு, மல்குறு கானல்"(32) "மண்ணு முத்த மரும்பிய புன்னை" (33) "மண்ணுப்

எ-து: நறியதாகிய பூத்தங்கின புன்னைக்கீழே நீ விரும்பிக்கூட இருகாற் (௧) சிறுதாயம் இடவேண்டின அளவிலே ஒருகாலன்றியே இருகாலாவதும்

---

பசுமுத்தேய்ப்பக் குவியிணர்ப், புன்னை யரும்பிய புலவுநீர்ச் சேர்ப்ப" (34)"பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை" (35)"பல்லி, சொரித்த சினைபோலு நீளிரும் புன்னைப், பொரிப்பூ விதழுறைக்கும் பொங்கு நீர்ச் சேர்ப்ப" (36) "புன்னைய மலர்ப்பொழில்க ளக்கினொளி காட்ட" (37)"வெண்முத்தரும்பிப் பசும்பொன் மலர்ந்து, கடைந்தசெம் பவளத் தொத்துடன் காட்டு, மிரும்புகவைத் தன்ன கருங்கோட்டுப் புன்னை" (38) "பவழமும் பொன்னுங் குவைஇய முத்திற், றிகழரும் பீன்றது புன்னை" (39) "முத்தரும்பிப் பைம்பொன் மலர்ந்து முருகுயிர்த்துத், தொத்தலருங் கானற் றுறையேய்" (40)"படுமுத்தம் புன்னை யரும்பும் புகாஅர்" (41) "புன்னைகண் முகிழ்த்தென வரும்ப" (42) "புன்னையின் முகைநிதி பொதியவிழ் பொழிலணி புறவமே" (43) "புன்னைவெண் கிழியிற் பவளம் புரை பூந்தாய்" (44) "ஒள்ளொளிப் பவளத் துள்ளொளி யடக்கி, வெள்ளிப் பூந்தா தொள்ளுந் தோற்றத்துப், போது பொறை யாற்றுப் புன்னையம் பொதும்பர்" (45) "புன்னை, பொன் னிறம் விரியும் பூக்கெழு துறைவனை" (46) "தூமலர்ப் புன்னை" (47)"தாவற் கலித்ததேம்பாய் புன்னை, மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்" (48)"கருங்கோட்டுப் புன்னை மலரிற் றாதருந்தி, யிருங்களிப் பிரச மூத" (49) "கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசை தொறுஞ், சுரும்பார்க்குங் குரவினோ டிருந்தும்பி யியைபூத" (50) "உள்ளூர்க்குரீஇக் கருவுடைத் தன்ன, பெரும்போதவிழ்ந்த கருந்தாட் புன்னை" (51) "புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல், பொன்படு மணி யிற் பொற்பத் தோன்று, மெல்லம் புலம்பன்" (52) "பொன்னேர் நுண்டாது புன்னை தாஉம்" (53) "பொன்னேர் தாதிற் புன்னையொடு" (54) "புன்னை பொன்று துதிர்மல்கு மந்தண் புகலிந் நகர்" (55) "புன்னைநன்மாமலர் பொன்னுதிர்க்கும்புனவாயிலே" (56)"பொன்னி னன்ன புன்னை நுண்டாது" (57) "புன்னை நறுமலரின் பூந்தா திடை யொதுங்குங், கன்னி யிளமேதிக் காற்குளம்பு - பொன்னுரைத்த, கல் லேய்க்கு நாடன்" (58) "புன்னை நறுந் தாது ..........கதிர்நகையா யோமாலி கை" (59) "இன்னிணர்ப் புன்னையம் புகர் நிழல்" (60) "கடன்மீன் றந்து கானற் குவைஇ, யோங்கிரும் புன்னை வரிநிழ லிருந்து, தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்திப், பெரிய மகிழுந் துறைவன்" (61) "நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇ" (62) "மன்றப் புன்னை மாச்சினை நறவீ" (63)"மன்றத்துப் புன்னை போல"

௧. வித்தம் - சிறுதாயமென்னும் பொருளில் இச்செய்யுளில் மூன்னும் வந்துள்ளது; இது கவறாடலின் வழி வந்த ஆட்டங்களில் 'விருத்தம்'

சிறுதாயம் இட்டவன் மனம்போலே ஆக்கம்*பெறுகினவள், நீ பிரிந்து வந்து வரைவேனென்று எமக்கறிவித்துப் பிரியக் கருதின நின்பொருட்டு அக்கவறு இருகாற் சிறுதாயம் இட வேண்டின அளவிலே ஒருகாற் சிறுதாயம் இடப் பட்டவனைப்போலே செறிந்த துயரிலே அழுந்தவோ? எ - று.

இது †தகவாகாது காணெனக் கூறிப் பின்னும்.

ஆங்கு, அசை.

௧௮ (௧)கொண்டு ‡பலர்தூற்றுங் கௌவை யஞ்சாய்
ஈண்டாற் கருளித் திறனறிந் தெழீஇப்
பாண்டியஞ் செய்வான் பொருளினு
மீண்டுக விவணல மேறுக தேரே

எ-து: நீ பலரும் மேற்கொண்டு தூற்றும் அலருக்கு அஞ்சாய்; இதனைக் கைவிட்டு இவளை வரைந்துகொண்டு கூடுதற்கு அருள்பண்ணி, அதற்கான் திறத்தை அறிந்து எழுந்திருந்து தேரை ஏறுவாயாக; அங்ஙனம் வரைந்தால் ||இவள்நலம் உழவாடியாகி யிருப்பானி[ருவரி]டத்துப் பெரும்பொருளினும் ஈண்டுவதாக என வரைவுகடாயினாள். எ - று.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (௧௧)

(௧௩௭.) அரிதே தோழிநா ணிறப்பாமென் றுணர்தல்
பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே
பலவே யாமம் பையுளு முடைய
சிலவே நம்மோ டுசாவு மன்றி
லழலவிர் வயங்கிழை யொலிப்ப வுலமந்
தெழிலெஞ்சு மயிலி னடுங்கிச் சேக்கையி
னழலா கின்றவர் நக்கதன் பயனே;

அ மெல்லிய நெஞ்சு பையுள் கூரத்தஞ்
சொல்லினா னெய்தமை யல்ல தவர்நம்மை
வல்லவன் றைஇய வாக்கமை கடிவிசை

'விருத்தம்' என வழங்கும் சொல்லின் சிதைவுபோலும்; அன்றி வித்தென்பது அம்சாரியை பெற்றுவந்ததெனினும் இயையும்; வித்தாயமென இச்செய்யுளுள் வருதலும் நோக்குக.

௧. எதுகை நோக்கி 'கோண்டு' எனக்கொள்ளின், நீட்டல் விகாரமாம்.

(பிரதிபேதம்) * பெருமினவளணிபிரிந்து, †தாவகதாது, தாவாகாது, ‡ பழிதூற்றும், || இவ ளலமும் வாடியாகி யிருப்பானிருவரிடத்தும்பெறும்பொருளினுமீண்வேதாக.

வில்லினு னெய்தலோ விலர்ம னாயிழை
வில்லினுங் கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய்;

௧௩ நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையி னலித லல்ல தவர்நம்மை
வகைமையி னெழுந்த தொன்முரண் முதலாகப்
பகைமையி னலிதலோ விலர்ம னாயிழை
பகைமையிற் கடிதவர் தகைமையி னலியுநோய்;

௧௮ நீயலே னென்றென்னை யன்பினாற் பிணித்துத்தஞ்
சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப்
பாயிரு ளறநீக்கு நோய்தபு நெடுஞ்சுடர்த்
தீயினாற் சுடுதலோ விலர்ம னாயிழை
தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்;

ஆங்கு;

உ௪ அன்னர் காதல ராக வவர்நமக்
கின்னுயிர் போத்தரு மருத்துவ ராயின்
யாங்கா வதுகொ றோழி யெனையதூஉந்
தாங்குதல் வலித்தன் றாயி
னீங்கரி தூற்றன்றவ ருறீஇய நோயே.

இது வரைவுநீட ஆற்றளாயின இடத்துத் தலைவி யாற்றாமையை அவடன்னானே தலைவற்கு அறிவிக்கலுற்ற தோழி, தலைவன் சிறைப்புறத் தானாகத் தலைவியை வற்புறுக்க, அவள் *வன்புறை எதிரழிந்து கூறியது.

இதன் பொருள்.

அரிதே தோழிநா ணிறுப்பாமென் றுணர்தல்
(க)பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே
(உ)பலவே யாமம் பையுளு முடைய
சிலவே †நம்மோ டுசாவு (௩)மன்றி

---

க. "இவளுயிர் தவச்சிறிது காமமோ பெரிதே" குறுந். ௧௮.
உ. "ஊழி பலவோ ரிரவாயிற் றோவென்னும்" நள. சுயம். ௧௦௮.
௩. அன்றிலின் இயல்பு இந்நூற்பக்கம் ௮௦௧: ௩-ஆம் குறிப்பால் அறியலாகும்.

(பிரதிபேதம்) * வன்பொறை. † எம்மோடு.

லழலவிர் வயங்கிழை யொலிப்ப *வுலமந்
தெழிலெஞ்சு மயிலி னடுங்கிச் †சேக்கையி
னழலா கின் ‡றவர் நக்கதன் பயனே

எ-து: தோழீ! நம்முடைய(க)நாணே நம்மிடத்தே நிறுத்துதலைச் செய்வா மென்று உணர்ந்திருத்தல் அரிது; அதற்குக் காரணமென்னெனில் வேட்கை பெரிதாயிராநின்றது; அதனாற் றேய்ந்த உயிர் மிகச் சிறிதாயிராநின்றது; நமக்கு வருத்தத்தைத் தருதலையுடைய யாமங்களும் பலவாயிராநின்றன; அவ்வியாமங்களிற் றுயிலாதபடி துணையைப் பிரிந்து வருந்தி நம்மோடு உசாவும் அன்றில்களும் சில உளவாயிராநின்றன; ஆதலான் அவ்வுயிர் தாங்குதல் அரிது; முடிவில் அவர் நம்மோடு கூடியதனாற் பெற்றபயன் (உ)பீலி உதிர்ந்த மயில்போலே பொலிவழிந்த நாணத்தால் நாம் நடுங்கச் சேக்கையிலேகிடந்து ||உடம்பு நெருப்பிலே ஓடவைத்த பொன்னாற்செய்த சிலம்புமுதலியன ஒலிக்கும்படி உலமர நமக்குக் காமத்தீ உண்டாகாநின்றதொன்றுமே. எ - று.

உலமர, நடுங்க எனத் ÷திரிக்க.

அ மெல்லிய நெஞ்சு மையுள் கூரத்தந்
சொல்லினு னெய்தமை +யல்ல தவர்நம்மை
(ந)வல்லவன் றைஇய வாக்கமை கடுவிசை
வில்லினு னெய்தலோ விலர்ம ணுயிழை
வில்லினுங் ×கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய்

எ-து: அவர் நெஞ்சுபோல் வலியுடைத்தன்றி நம்முடைய வலியில்லாத நெஞ்சு வருத்தம் மிகும்படி தாம் நின்னிற்பிரியே னென்று தெளிவித்த சொல்லால் வருத்தினமையல்லாது அவர் நம்மைப் பண்ணவல்லவனாலே பண்ணப்பட்ட(ச)வடிவமைந்த கடிய விசையையுடைய (ரு)வில்லினல் எய்தற்றொழிலைச் செய்தலோ உடையரல்லர்; ஆயினும் ஆயிழாய்! அவர் தெளிவித்த சொல்லாற் பிறந்தநோய் மிகவும் வில்லினுங் கடிதாயிராநின்றது. எ-று.

---

க. "எழுந்த நாணு மிச்சையுந் தினம்போ ராடி, யகழ்தர நாணந் தோற்ற தாசையே வென்றதம்மா" திருக்குற்றலத். புராணவியல்பும். கந.

உ. "காமர் பீலி யாய் மயில்" அகம். ந௲அ: உ.

ந. "வல்லவன் றைஇய பாவைகொல்" கலி. ௲சு: எ.

ச. வடிவு-வார்த்தல்; "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே" புறம். நகஉ: ந.

ரு. வில், ஆகுபெயராய் அம்பை உணர்த்திற்றெனினும் ஆம்; "வில்லின் மாரியின் வீரன் விலக்கினன்" கம்ப. தாடகைவதை. கஎ.

(பிரதிபேதம்) * உலம் வந்து, † சேக்கையுள், ‡ அவனக்கதன், || உடம்பு சிலம்பு முதலியன, ÷ திரிக்க, அழலவிர் வயங்கிழை - நெருப்பிலே யோடவைத்த பொன்னாற்செய்தவிழைமெல்லிய, + அல்லாதவர் நம்மை, × கொடிதவர்.

சொல்லர் சுடரும் (௧)கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை

எ - து: பலபசுவையுடைய பொதுவர் கல்லிடத்தனவுங் காட்டிடத்தனவு மாகிய மெல்லியகொத்தினையுடைய (௨)கொன்றைப்பூவாலும் மெல்லியமலரை யுடைய காயாம்பூவாலும் புல்லியஇலையையுடைய வெட்சிப்பூவாலும் பிடவம் பூவாலும் முல்லைப்பூவாலும் (௩) கஞ்சங்குல்லைப் பூவாலும் குருந்தம்பூவாலும் கோடற்பூவாலும் *பாங்கர்ப்பூவாலுஞ்செய்த கமழுங்கண்ணியைச் சூடினராய் விரைந்தஎற்றைத்தழுவுதலைக்காணவேண்டிமுல்லைமுகையும்(௪)பீலிமுருந்தும் நிரைத்தாலொத்த பல்லினையுடையாராய்ப் பெரிய குளிர்ச்சியையுடைத்தாகிய கண்ணினையுடையாராய் மடப்பம் பொருந்தின சொல்லினையுடையாராய் விளங் கும் பொன்னாற்செய்த மகரக்குழையையணிந்த காதினராய் ஆயர்மகளிர் வந்து பரணைக் கைக்கொண்டார். எ - று.

மிடை - பரண்.

௪0 அவர்மிடைகொள,
(௫)மணிவரை மருங்கி னருவி போல
வணிவரம் பறுத்த வெண்காற் காரியு
மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையுங்

போன்று..............நகைக்குமென் னகையாள்” சீறு. நபுவ்வத்துக். தசைக்கட்டியை. உரு.

௧. இந்நூற்பக்கம் ௬௦௨: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௨. (அ) "மன்றலங் கொன்றை மலர்மலைந்து ௦௦௦, என்று திரியு மிடை மகனே" எனவும், (ஆ) "மணிநிரை யோம்பி நேரும் வல்விடை தழுவித் தோய்ந்த, வணிநிரை மகளிர் கூத்த லலங்கலங் கொன்றை சூட்டிப், பிணிதபு மாயர்செய்கை" எனவும், (இ) "வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக், கொன்றையம் பூங்குழ லாள்" எனவும் வருஞ் செய்யுட்களை நோக்குக.

௩. கஞ்சங் குல்லை - கஞ்சா; இச்சொல், கஞ்சம், குல்லையென இரண் டாகவும் கொள்ளப்படும்.

௪. பீலிமுருந்து - மயிலிறகின் அடி.

௫. (அ) "மணிவரை யிழிதரு மணிகிள ரருவி" தொல். செய். சூ. எஅ. பேர். மேற்கோள். (ஆ) மணிவரை யென்பதற்கு, இங்கே எழுதியிருக் கும் பொருளோடு "மணிதிகழ் விறன்மலை" (கலி. ௨0: ௫.) என்பதும் இந்நூற் பக்கம் ௨௪௬: ௪ - ஆம் குறிப்பில் பொருந்துவனவும் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * பாங்கற்பூவாலும்.

௧௩ நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையி *னலித லல்ல தவர்நம்மை
†வகைமையி னெழுந்த தொன்முரண் ‡முதலாகப்
பகைமையி னலிதலோ விலர்ம ணுயிழை
பகைமையிற் கடிதவர் ||தகைமையி னலியுநோய்

எ-து: (௧)நகுநயமறைத்தலென்னும் மெய்ப்பாடுகாரணமாக நாங்கொண்ட நட்பிலே ÷தோன்றிய தமது தகுதிப்பாடுகளாலே வருத்துதலொழிய அவர் நம்மைப் பொருள்களின் கூறுபாட்டாலே தோன்றிய பழைதாகிய மாறுபாடு காரணமாக வந்த பகையாலே வருத்துதலோ உடையரல்லர்; ஆயினும் ஆயிழாய்! அவர் ╋தமது தகுதிப்பாடுகளாலே வருத்துதலொழிய அவர் நம்மை வருத்துநோய் பகைமையினுங் கடிதாயிராநின்றது. எ - று.

(௨)முதல் - காரணம். பொருள்கள், ஈண்டு மனப்பொருள் முதலியன.

௧௮ ×நீயலே னென்றென்னை **யன்பினாற் பிணித்துத்தஞ்
சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப்
††பாயிரு ளறநீக்கு நோய்தபு நெடுஞ்சுடர்த்
தீயினாற் ‡‡சுடுதலோ விலர்ம ணுயிழை
தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்

எ - து: நின்னிற் பிரியேனென்றுசொல்லி, என்னைத் தனக்குண்டாகிய அன்பினாலே வயகப்படுத்தித் தமது மென்மையாலே சுடுதலொழிய அவர் நம்மைப்பரந்த(௩)இருளை அவ்விடத்தினின்றும்போம்படி நீக்கும் நெடியதாகிய கொழுந்தினையுடைய நெருப்பாற் சுடுதற்றொழிலோ உடையரல்லர்; ஆயினும்

---

௧. தொல். மெய்ப். சூ. ௧௩.

௨. "இருமுதலின்" (தொல். பாயிரம்) என்பதற்கு 'இரண்டு காரணத்தான்' என்று இளம்பூரணரும், 'பெரிய காரணத்தான்' என்று சிவஞான முனிவரும் "நோய் முதல்" (குறள். ௬௪௮) என்பதற்கு, 'நோய் வருதற் காரணம்' என்று பரிமேலழகரும் எழுதியிருக்கும் உரை இங்கே அறிதற்பாலன.

௩. "பகையிருட் பிழம்பு சீக்கும் பல்சுட ருமிழும் வாளான்" நைடதம். சுயம். ௧௩௪.

(பிரதிபேதம்) * னலியதல்லது, † வகைமையுள, ‡ முதலாப். || தகையினலியு, ÷ தோன்றித் தமது, ╋ நமது தகுதிப்பாடுகளாலே நம்மை வருத்துநோய், × நீயலே மென்றெம்மை, நீயலனென்றென்னை, ** அன்பினிற் பிணித்ததஞ், †† பாயிருணீக்கு. ‡‡ சுடுவதோ.

ஆயிழாய்! அவர் ஆண்டுச் * செய்த காமநோய் கெடுதற்குக் காரணமான † மென்மையால்நின்று எரியுங்காமநோய் தீயினுங்கடிதாயிரா‡நின்றது.எ-று. நோய்தபு சாயலென்க.

||ஆங்கு, அசை.

உ௪ அன்னர் காதல ராக வவர்நமக்
இன்னுயிர் போத்தரு மருத்துவ ராயின்
யாங்கா வதுகொ றோழி யெனைய தூஉந்
தாங்குதல் வலித்தன் றாயி
னீங்கரி துற்றன்றவ ருறீஇய நோயே

எ-து: தோழீ! நெஞ்சு அத்தன்மையவர் நம்மிடத்துக் காதலையுடையவராகக் கருதி முன்பு நம்மை நீங்குதலருமையுற்ற அவ்வியற்கைப் புணர்ச்சியினன்று அவர் நம்மையுறுத்தின நோயைத் தான் பொறுத்தலைத்துணிந்த துணிவை ஆராய்ந்துபார்க்கில் அத்துணிவு எப்படியும் நம் இனிய உயிரைப் போக்கும்; அவர் நமக்கு (க) உயிரைப் போகாமல்மீட்கும் மருத்துவராய் இருப்பாராயின், அந்நிலை ÷எக்காலத்து அவர்க்கு உண்டாவது கொல்லென +வன்புறை எதிரழிந்து கூறினள். எ - று.

(உ) வலித்தன்று என்பது வலித்ததன்றென்னும் மறைப்பொருள் தாராமை உணர்க.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது "இடைநிலைப்பாட்டு" (ந)என்றதனும் × தாழம்பட்ட ஓசையின்றி ஐந்தடியான் இடைநிலைப்பாட்டுவந்த ஒத்தாழிசைக்கலி. (உ0)

---

க. இந்நூற்பக்கம் ௪௪: உ - ஆம் குறிப்புப் பார்க்க.

உ. வலித்தன்று=வலித்தது - துணிந்தது; இஃது இங்கே வினையாலணையும் பெயராய் நின்றது. "காண்டல் வலித்தன்று" என்பது பு - வெ. கைக்கிளை. பெண்பாற். கொளு. ௬. இவ்வகை ஆட்சியே அந்நூற் கொளுவில் மலிந்து கிடக்கின்றது. இதனை வினைத்திரிசொல்லென்று முற்காலத்தவரும், அகரச்சாரியை பெறாது அன்சாரியை பெற்று வந்த சொல்லென்று பகுபத முடிபு கூறும் இக்காலத்தவரும் வழங்குவர்.

ந. தொல். செய். சூ. ௧௩௪. இச்சூத்திரத்தின் உரையில் "நகைமுதலாக..........தகைமையி னலியுநோய்" என்னும் பகுதியைப் பேராசிரியரும், (தொல். செய். சூ. ௧௩௭) இச்செய்யுள் முழுவதையும் நச்சினார்க்கினியரும் இடைநிலைப்பாட்டு ஐந்தடியான் வந்ததற்கு மேற்கோள் காட்டியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * செய்தமென்மையால், †மென்மையாய்.‡ நின்றது நோய்தபுசாயல் - காமநோய் கெடுத்தற்குக் காரணமான சாயலென்க ஆங்கு,||ஆங்கஅசை. ÷எக்கிலத்தே, +வன்பொறை, × தாழப்பட்ட.

(௧௫-வது.) எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தாற்
றொழின்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்
கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்
௫ மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி
யென்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொலோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
யணிப்பூளை யாவிரை யெருக்கொடு பிணித்தியாத்து
௧௦ மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு மிஃதொத்த
னெல்லீருங் கேட்டீமி னென்று;

௧௨ படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
நல்கியா ணல்கி யவை;

௧௪ பொறையென் வரைத்தன்றிப் பூநுத லீத்த
நிறையழி காமநோய் நீந்தி யறையுற்ற
வுப்பியல் பாவை யுறையுற் றதுபோல
வுக்கு விடுமென் னுயிர்;

௧௮ பூளை பொலமல ராவிரை வேய்வென்ற
தோளா ளெமக்கீத்த பூ;

௨௦ உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த
பரிசழி பைதனோய் மூழ்கி யெரிபரந்த
நெய்யுண் மெழுகி னிலையாது பைபயத்
தேயு மளித்தென் னுயிர்;

௨௪ இளையாரு மேதி லவரு முளையயா
னுற்ற துசாவுந் துணை;

௨௬ என்றியான் பாடக் கேட்டு
அன்புறு கிளவியா ளருளிவந் தளித்தலிற்
றுன்பத்திற் றுணையாய மடலினி யிவட்பெற
வின்பத்து ளிடம்படலென் றிரங்கின ளன்புற்
றடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்தம்
முடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே.

**இது (க)மடலூர்ந்து தலைவியையெய்திய தலைவன் தான் மடலூர்ந்த வாறும் அவளை எய்தியவாறும் தனக்குப் பாங்காயினோர்க்குக் கூறியது.**

**இதன் பொருள்.**

(உ)எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தாற்
றொழின்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்
கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்
(ங)மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி
யென்னெஞ்ச மென்னோடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா *றெவன்கொலோ
(ச)மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
யணிப்பூளை (ரு)யாவிரை பெருக்கொடு பிணித்தியாத்து

---

க. புணர்ந்தபின் நிகழ்வதாகிய பெருந்திணைக் குறிப்புள் தலைமகற்கே யுரித்தாகிய ஏறிய மடற்றிறத்துக்கு இச்செய்யுள்மேற்கோள்; தொல். அகத். சூ. ருச. இளம். சூ. கங. நச்.

உ. "நெய்தற்றிணையோடு பெருந்திணையும் மயங்கி வந்ததற்கு "எழின் மருப் பெழில்வேழம்............கேட்டீமினென்று" என்னும் பகுதி மேற்கோள்; இ - வி. சூ. ௩௧௫.

ங. "துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி, யொளியோ டுரு வென்னைக் காட்டி யளியளென், னெஞ்சாறு கொண்டா ளதற்கொண் டுந் துஞ்சே, னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின், பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப, வோங்கிரும் பெண்ணை மடலூர்ந் தென் னெவ்வநோய், தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக, வீங் கிழை மாதர் திறத்தொன்று நீங்காது, பாடுவேன் பாய்மா நிறுத்து" கலி. ௧௩௯: ரு - ௧௩.

ச. (அ) "மணிநிற வுருவின தோகையும்" (ஆ) "மரகதக் கதிர்தழைத்த கலாப மஞ்ஞை"

ரு. (அ)"குனிகா யெருக்கின் குவிமுகிழ்விண்டலொடு. பனிவா ராவிரைப் பன்மலர் சேர்த்தித், தாருங் கண்ணியுந் தைஇத் தன்னிட, மீளு மட லோன் வரவென் கொல்லென, நீர்த்துறைப் பெண்டிர் நெஞ்சழிந் திரங்கு............றணிமடற் கலிமா மன்றத் தேறித்தன், னணிநலம் பாடினு மறியாள்" தூதுநாற்பது.(ஆ)"மறவல் வாழிதோழி துறைவர், கடல்புரை பெருங்கிளை நாப்பண், மடல்புனைந் தேறிநிற் பாடும் பொழுதே" தொல். கள. சூ.௨௩. மேற்.

(பிரதிபேதம்) * எவன்கொல்லோ.

மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு (க)மிஃதொத்த
னெல்லீரும் கேட்டீமி *னென்று

எ-து: மின் விளங்குகின்ற நுடக்கமும் கனவினது தோற்றமும்போலே தன்வடிவைக் காட்டி என்னுடனே முற்படக் கூடிப் பின்னர்ப் பிறர் என்னை (உ)இகழ்ந்து சிரிப்பனவற்றையும் எனக்குக் காட்டி எனக்குரிய நெஞ்சம் என்னோடே கூடி நில்லாமல் அழகினையுடைய மருப்பினையும் அழகினையுமுடைய (௩)வேழம் சொரிதலைச்செய்யுமதத்தாலே பாகனுக்குச் செய்யுந்தொழில்களைத் தவிர்ந்து தான்வேண்டியவாறொழுகாதபடி தன்னை விலக்குந் தோட்டியையுங் கைகடந்தாற்போலத் தன்மேற் சென்ற வேட்கையினாலே என்னேவலைச் செய்தலைத் தவிர்ந்து தான் வேண்டியவாறொழுகாதபடி (௪) தனக்குக் காவலாகிய அறிவும்நம்(௫)அறிவாலேஆராய்ந்த அடக்கமும் இயல்பாகத்தோன்றிய (௬)நாணுடனே வறிதாக அவற்றைக் கைகடக்கும்படி †மிகவும் என்னெஞ்சைக் கைக்கொண்டு தன்னலத்தை யான் காணாமல் மறைத்தவளைக் கூடும்வழி எவ்வழிதானென்றுஆராய்ந்து இனி(எ)மடலேறுதலே கூடும்வழியென்று கருதி

க. இந்நூற்பக்கம் ௩௮௬: ௩-ஆங் குறிப்புப் பார்க்க.

உ. "பல்லார்நக் கெள்ளப் படுமடன் மாவேறி" கலி. ௬௧. உஉ.

௩. "பிறையெனு நுதலவள் பெண்மை யென்பதோர், நறைகம ழலங்கலா னயன கோசர, மறைதலு மனமெனு மத்த யானையி, னிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே" கம்ப. மிதிலைக்காட்சி. ௪0.

௪. "சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ, நன்றின்பா லுய்ப்ப தறிவு" குறள். ௪உ௨.

௫. (அ) "கற்றறிந்தார் கண்ட அடக்கம்" பழ. உ௪௩. (ஆ) "கற்றறிவு குலமேன்மை கருணைபெரும் புகழ்செல்வங் கைம்மா றெண்ணா, துற்றுதவுங் கொடைசீர்மை யொழுக்கமருந் தவநியம முறவின் கேண்மை, மற்றெதிரி லாத்திண்மை வாய்மைமிகுந் தூய்மைகுண வனப்பி யாவும், பெற்றிடினு மடக்கமில்லாப் பெருமிதத்தா லத்தனைக்கும் பிழையுண் டாமால்" பிரபோத. விவேகன்சேனை. ௩௩.

௬. "நோனா வுடம்பு முயிரு மடலேறு, நாணினை நீக்கி நிறுத்து" குறள். ௧௧௩௨.

எ. "மடலேறலாவது:—தலைவன் ஒவ்வாக் காமத்தால் பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவி லுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ் செய்து அக்குதிரையின்மேலேறுவது; மடலேறுவான் திகம்பரனாய் உடலெங்கும் நீறுபூசிக் (1)கிழி ஒலியர்கைப்படாது தானேநீட்டிக் கிழியின் தலைப்புறத்தில் அவள [illegible] வரைந்து கைப்பிடித்து

(பிரதிபேதம்) * இன்று, † மிகவுமன்னெஞ்சை.

(க)மடன்மாவிலே சூட்டவேண்டி நூலாலே நீலமணிபோலும் நிறத்தையுடைய (உ)பீலியையும் மற்றை அழகையுடைய பூளைப்பூவையும் ஆவிரம்பூவையும் எருக்கம்பூவோடே தொடுத்து அம்மடன்மாவிலே கட்டி வளப்பத்தையுடைய ஊரின் மறுகின்கண்ணே இவனொருத்தன் (ங) இவளைப் பாடும்; பாட்டை எல்லீரும் கேட்பீராக என்று சொல்லிப் பாடத் *தொடங்கி. எ - று.

---

ஊர்ந்துவே நாற்சந்தியில் ஆகார நித்திரையின்றி அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையு மிருத்தி வேட்கைவயத்தனாய் வேறுணர்வின்றி (2)ஆவூரினும் அழன்மேற்படினும் அறிதலின்றி மழை வெயில் காற்றால் மயங்காதிருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங் கூடிவந்து, (3) 'நீ மடலேறுதியோ, அவளைத்தருதும் சோதனைதருதியோ' என்றவழி, இயைந்தானாயின் அரசனுக்கு அறிவித்து அவனேவலால் அவன் இளைத்துநையத்தந்து 'மடலேறு' என்றவழி, ஏறு முறைமை:—பூளை எலும்பு எருக்கு இவைகளாற் கட்டிய மாலையணிந்துகொண்டு அம்மாவில் ஏற அவ்வடத்தை வீதியில் ஈர்த்தலும் அவ்வுருளை உருண்டோடும்பொழுது, பனங்கருக்கு அறுத்தவிடமெல்லாம் இரத்தந் தோன்றாது வீரியந்தோன்றின் அப்போது அவளை அலங்கரித்துக் கொடுப்பது. இரத்தங்கண்டுழி அவனைக் கொலைசெய்து விடுவது. இவை புலவரால் காட்டிய வழக்கென்றுணர்க" என்பது தந்தை. கoக. உரையில் உள்ளது. இது துலோத்துங்க. கஉஅ. குறிப்பில் (1) தான் காமித்த தலைவியினுருவை ஒரு படத்தில் தன் கையாலெழுதி யென்றும் (2) ஆவுரிஞ்சினுமென்றும் (3) நீ மடலேறிச் சோதனைதந்தால் நீ இச்சித்த பெண்ணைக் கொடுக்கச் செய்வோமென்று கூற அதற்கு அவனிசைந்தானாயி னென்றும் விளக்கத்தோடும் சிறிது சொல் வேறுபாட்டோடும் உளது. ஆவிரம்பூவும் அணிவதுண்டு.

க. சிலப். எo - எக-ஆம் அடிகளும் அவற்றினுரையும் பார்க்க.

உ. "பூவல்ல பூளை யுழிஞையொடியாத்த, புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி, பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி" கலி. க௪o: ச - சு.

ங. (அ) "கழிகின்ற வென்னையு நின்றநின் கார்மயி றன்னையும்யான், கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டு" (கோவையார். எசு.) என்பதன்விசேடவுரையில், 'தனக்கு அவளயலென் னுங்கருத்தினனாய், நின் கார்மயிலென்றான். என்னையும் நின் கார்மயிறன்னையும் மடலிடத்தெழுதுவேனென் றதென்னை? கார்மயிலை யெழுதுவதன்றித் தன்னை யுமெழுதுமோவெனின், மடலெழுதிக் கையிற்கொண்டால் உரையாடுகையின்றி இவனும் ஓவியமாகலின், மடலின்றலையிலே தன்னூரையுந்தன்பேரையும் அவளூரையு மவள்பேரையும் எழுதுகையால் என்னையு மென்றான்' என்றுள்ள குறிப்பால் மடலூர்பவற்கு உரையாடாமை உண்டென்றறியப்படுமாயினும் (ஆ) " என்றியான் பாடக் கேட்டு" (இ) "பாடுவேன் பாய்மா நிறுத்து" (ஈ)"பாடெனிற் பாடவும்

பிரதிபேதம்) * 'தொடங்கியென்க ஈல்லனவற்றையும்.

நகுவனவற்றையுங்காட்டி என்றான், மடலேறுதல்(க)வரைபாய்தலாகிய இரண்டினையுந் தான் பின்புகருதுதலின். இவனொருத்தன் எனத் தன்னைப் *பிறர்போற் கூறினான். அஃது உலகத்தார் பாடும் பாட்டன்மையுந் தோற்று வித்துநின்றது.

இவளென்று சுட்டிற்று, கையில் (உ)எழுதிப்பிடித்த கிழியிலவளை.

கஉ (௩)படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
(௪)நல்கியா ணல்கி யவை

எ-து: விளங்குகின்ற இழையினையுடைய, என்னாலே காமிக்கப்பட்டவள் எனக்குக் காதலித்துத் தந்தவை, வருத்தமும் வருத்தத்தாலுண்டான பனை யீன்ற மடலாற் செய்த குதிரையும். எ - று.

---

வல்லேன் சிறிதாங்கே, யாமெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ" (உ) "அணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி, யணிநலம் பாடி வரற்கு" (௭) "வருந்தமா வூர்ந்து மறுகின்கட் பாட" (கலி. க௩அ: உசு, க௩க: க௩, க௪0: க௩ - க௯, க௪க: ௫ - ௬, உஉ.) என இந் நூலுட் பலவிடத்தும் வருதலால், அவளைக் குறித்துப் பாடுதலாகிய உரையாடலுண்டென்பது தெளிவாம். இந்நூற்பக்கம் அ௫௬: ௫-ஆம் குறிப்பும் பார்க்க.

க. (அ) "விரையூர் குழலியர் தந்தசிந் தாகுல வெள்ளநிறைக், கரையூர் பொழுதிளங் காளையர் தாங்கிழி கைப்பிடித்துத், தரையூர் தொறும் பெண்ணை மாமட லூர்வர் தவிர்ந்துபின்னும், வரையூர்வர் தஞ்சையர் கோன் வாணன் மாறையில் வாணுதலே" தஞ்சை. க0உ. (ஆ) "முன்னேன் றிருக்கொடி யேற்றத்தி னான்முயங் காதொழிந்தாற், பின்னேன் மழைக்குடை வீழ்ந்தொழி வார்............வசுதேவன் பெற்ற விருவரிலே" (இ) "பரசன் சொரூப மெடுப்பது வோமலை பாய்ந்துகடன், முரசன் சொரூப மெடுப்பதுவோ..............அன்பர் பேரெண்ணமே" மாறன். கஉசு, க௫௪. (ஈ) "மடவார் காம வெள்ளத் தின் மோதலுற்றார், கிழியொன்று கைப்பிடித் தேமட லேறுவர் கேண்மையற்றார், பழியொன்று மெண்ணில ராய்ப் பறம் பேறியும் பாய்வர்களே" திருவாவடுதுறைக். கககூ.

உ. இந்நூற்பக்கம் அ௫அ: ௭ - ஆம் குறிப்பில், முதலிலுள்ள செய்யுளாலும் "திடம்பெற்ற காசினி யோர்யானு மங்கையுஞ் சித்திரஞ்சேர், படம் பெற் றிருக்கிலன் றேதிரு மாலெனப்பாவிப்பரே" (மயூரகிரி. க௪க.) என்பதனாலும் தலைவனுருவும் எழுதுவதுண்டென்று தெரிகிறது.

௩. "தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு, மாலை யுழக்குந் துயர்" குறள். கக௩௫.

௪. (அ) "நல்கினு நல்கா னாயினும்" புறம். அ0: ௫; (ஆ) "நல்கினை கேளாய்" மணி. கஉ: ௫௬.(இ) "நமக்குநீர் நல்குநி ராயின்"

(பிரதிபேதம்) * பிறன்போற்.

௧௭ (௧)பொறையென் வரைத்தன்றிப் பூநுத லீத்த
(௨)நிறைஅழி காமநோய் நீந்தி யறையுற்ற
(௩)வுப்பியல்*பாவை யுறையுற் றதுபோல
வுக்கு விடுமென் னுயிர்

இ-ள்: என்னுடைய உயிர்தான் †பொறுத்தல் என் எல்லைத்தன்றாகப் பொலிவுபெற்ற நுதலினையுடையாள் தந்த, நிறையென்னுங் குணம் அழிதற்குக் காரணமான காமநோயை நீந்தி உப்புப் பாத்தியிலே கிடந்த உப்பால் இயன்ற பாவை மழைத்துளியை உற்ற தன்மைபோலக் கரைந்துவிடாநின்றது. எ - று.

௧௮ பூளை (௪)‡பொலமல ராவிரை (௫)வேய்வென்ற
தோளா ளெ[ம](ன)க்‖கீத்த பூ

எ - து: வேயை வென்ற தோளையுடையாள் எனக்குத் தந்த பூக்கள் பூளைப்பூவும் பொன்போன்ற பூவையுடைய ஆவிரம்பூவும். எ - று.

எனவே, தான் + கொடுத்தன நல்லபூ என்றான். ÷பொலமல ரென்னும் முடிவு "தொடரியலான" (௬)என்னும் இலேசான் முடித்தாம்.

---

௧. "இந்நோய், பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயின்" (கலி. ௬௮: ௨௦-௨௧) என்பதும் அதன் குறிப்பும் "பொறுக்கல்லா நோய்செய்தாய்" (கலி. ௧௪: ௧௧) என்பதும் ஒப்புநோக்கற்பாலன.

௨. (அ) "நிறையு முண்டோ காமங் காழ்கொளின்" மணி. ௫: ௨௦. (ஆ) "நிறையென்ப தில்லைக் காம நேர்நின்று சிறக்கு மாயின்" சூளாமணி. கல்யாண. ௧௫௫.

௩. (அ) "நெடுவெள் ளுப்பி னிரம்பாக் குப்பை, பெரும்பெயற் குருகி யாஅங்கு" (ஆ) "மிகுபெய, லுப்புச்சிறை நில்லா வெள்ளம் போல, நாணுவரை நில்லாக் காம நண்ணி, நல்கினள்" அகம். ௨௦௬: ௧௪-௧௫. ௨௦௮: ௧௮ - ௨௧. (இ) "உப்பின் பெருங்குப்பை நீர்படியி னில்லாகும்" திரி. அ௩. (ஈ) "கடும்புன னெருங்க வுடைந்துநிலை யாற்றா, வுப்புச் சிறைபோ லுண்ணெகிழ்ந் துருகி" பெருங். (௩) ௨௦: ௧௨௦ - ௧௨௧.

௪. "பொன்னேரா வீரைப் புதுமலர்" குறுந். ௧௭௩.

௫. வென்றவென்பது மரபுபற்றி உவமச்சொல்லாய் வருதற்கு, "வேய் வென்ற தோள்" என்பது மேற்கோள்; தொல். உவம. ௫. ௧௭. இளம்.

௬. தொல். புள்ளிமய. ௫.௬௧.இச்சூத்திரத்தின் இளம். நச். உரைகளிலும் ஒன்றின முடித்தலால் மென்கணம் வந்தவிடத்தும் பொன் என்பது

(பிரதிபேதம்) *பாறை, † பொறுத்ததென் னெல்லை, ‡ பொனமல ராவிரம். ‖ அளித்தபூ. + தொடுத்தன நல்ல, ÷ பொனமலரென் னுமுடிபு 'தொடரியல்' 'ஆவிரை' என்னு மிலேசான்முடித்தாம்.

உ0 (க)உரிதென் வரைத்தகிறி யொள்ளிழை தந்த
*பரிசழி (உ)பைதனோய் மூழ்கி (ங)யெரிபரந்த
நெய்யுண் மெழுகி னிலையாது பையயத்
(ச)தேயு மளித்தென் னுயிர்

எ - து: ஒள்ளிய இழையினையுடையாள் என்றற் பொறுக்குமெல்லைத் தன்றாக எனக்குரித்தாகத் தந்த, என்னியல்புகள் அழிதற்குக் காரணமான, வருத்தத்தையுடைய காமநோயிலே என்னுயிர் அழுந்தி, நெருப்புப் பரந்த நெய்யுள்ளே கிடந்த மெழுகு மெத்தென உருகித் தேயுமாறுபோல †நிலையில் லாதே மெத்தென மெத்தெனத் தேயாநின்றது; இஃது எல்லாரானும் அளிக் குந்தன்மையுடைத்து. எ - று.

உச இளையாரு மேதி லவரு ‡முளையயா
னுற்ற துசாவுந் துணை

எ - து: யானுற்ற காமநோய்க்கு யான் உளையும்படி உசாவுந் துணை இளையபிள்ளைகளும் இக் காமநோய்க்கு அயலாருமே; பிறரில்லை. எ - று.

உரு என்றியான் பாடக் கேட்டு
அன்புறு கிளவியா ளருளிவந் தளித்தலிற்
றுன்பத்திற் றுணையாய ||மடலினி யிவட்பெற
வின்பத்து ளிடம்படலென் றிரங்கின ளன்புற்

---

பொலமெனத் திரிந்து வருதலுண்டென்பதற்கு, "பொலமலராவிரை" என்பது மேற்கோள்.

க. உரிது. அகம். க0: எ; சூளா. மந்திர. ஙசு, அரசியல். ஙகூஎ; கலி. எசு: கஎ; அதன் குறிப்பும் பார்க்க.

உ. "பைதனோய்" கலி. ஙஉ:கச, கங0: கஅ.

ங. (அ) "அருநா ணளிய வழல்சேர் மெழுகொத் தழிகின்றதே" கோவையார். சச. (ஆ) "காதல ராயினுங் காதல் கையிகந், தேதில ராயின மடிகட் கின்றென; வூதுலை மெழுகினின் றுருகினார்" சூளா. முத்திச். ஙச. (இ) "உண்ணேறை யழிய வுலையிடு மெழுகொத் தொருமொழி தோழியர்க் குரைத்தாள்" பிரமோத். பிரதோட. ஙஎ. (ஈ) "அழல்படு மெழுகே யென்னக், கொம்மென வுருக வுள்ளங் குதுகலித்து" (உ) "தீசேர் மெழுகென வுள்ளம் விள்ள" கந்த. திருநகர். கஉஉமேரு. ச. (ஊ) "உலையின் மீது மெழுகொத் துருகினாள்" அரிச். மயான. சச. (எ) "மெழுகா ரழலுற் றெனவிளகி" (ஏ) "மெழு கொள்ளெரிக்கதுவி யாங்குளநெகிழ்ந் துருகினாள்" விநாயக. முக்கலர். இ; கிருச்சமதரு. உ.

ச. "துடியிடையீ, ரருளா தொழியி னொழியா தழியுமென் னாருயிரே" கோவையார். எங.

பிரதிபேதம்) * பரியழி. † நிலையில்லாதே. ‡ உளையயானுற்றதுசாறுக், || மடலினிவட்பெற.

றடங்கருந் தோற்றத் தருந்(க)தவ *முயன்றோர்தம்
முடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே

எ - து: இப்படி இப்படி யான்பாட அன்புறுகிளவியாள் அதனைக்கேட்டு அருள்பண்ணி அதன் மேலே அன்புற்று வந்து என்னை அளிக்கையினாலே, மனவேட்கை அடங்கின அரிய விளக்கத்தையுடைய செய்தற்கரிய தவத்தை முயன்றோர் தம்முடம்பை இவ்வுலகிலேபோகட்டுச் சுவர்க்கத்தை †இனிதாகப் பெற்றாற்போல, துன்பத்திற்குத் துணையாய் நின்ற மடல் இனி ‡இவளைப் பெறும்படியாக இன்பத்துக்கு இடம்படக்கடவா (?) னென்று இரங்கினா ||னென்றான் எ - று.

இது பூளையாவிரை எனத் தளைவிரவின, பாட்டிடைமிடைந்த, ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வாராது தரவும்போக்கும் வந்த, கலிவெண்பாட்டு. (உக)

(க௩௯.) சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனா லிவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பேன் மான்ற
ரு துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப

க. (அ) "உடம்பொழிய வேண்டி னுயர்தவ மாற்று" (ஆ) "தவத்தாற் சுவர்க்கமாய்" சிறுபஞ்ச. சு; ௩௬. (இ) "சுவர்க்கந் தவத்தால்" ஏலாதி. எஎ. (ஈ) "ஒழுக்கிய வருந்தவத் துடம்பு நீங்கினா, ரழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே" சீவக. ௩உரு. (உ) "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" கம்ப. நகரப். ரு. என்பவையும் (ஊ) "தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅது, ததன்பய மெய்திய வளவை மான" பொருந. ௯க - ௯உ. (எ) "உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்" (ஏ) "உறையும் விண்ணக முடலொடு மெய்தின ரொத்தார்" (ஐ) "துறந்த செல்வ னினையத் துறக்கந்தான், பறந்து வந்து படிந்தது பல்சனர், பிறந்து வேறொருலகுபெற் றானென, மறந்து வைகினர் முன்னைத்தம் வாழ்வெலாம்" (ஓ) "மெய்யினோடருந் துறக்கமுற் றானென" கம்ப. கடிமணப். க. மந்திர. எகு. கிளைகண்டு நீங்கு. எ. மீட்சி. க௫௪. என்பவையும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * முயன்றோருடம், † இனிதாற்பெற்றும், ‡ இவள் பெறும்படியாக, || னின்றான்.

(௧)கொலைவன் சூடிய (௨)குழவித் திங்கள்போல்
*வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் (௩) புகலேறு பலபெய்
தரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்
(௪)பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
(௫)படு(௬)மழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ

எ-து: அவர் தத்தம்மிடையைக் கைக்கொள்ள ஆயர் (௭)மணிகளையுடைய (௮)மலையிடத்தினின்றும் வீழ்கின்ற அருவிகள்போல அழகினது எல்லையைப்

---

௧. "எற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை, மாற்றருங் கணிச்சி மணி மிடற்றோனும்...... ...நால்வ ருள்ளுங், கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்" புறம். ௫௬: ௧- ௧௧. என்புழி 'மணிமிடற்றோனைக் கூற்றமென்றது அழித்தற்றொழிலுடைமையான்' என்னும்விசேடவுரைப் பொருளாட்சியும், "கொலைவன் யார்கொலோ கொலைவன்மற்றிவன்" புறம். ௧௫௨: ௮. "கொலைவனல்லையோ கொற்றவை யெயினே" மணி. ௨௫. ௧௭௪. என்னும் சொல்லாட்சியும் ஈண்டு அறிதற் பாலன.

௨. குழவி யென்பது சூத்திரத்துக் கூறப்படாத பிறிதின்மேலும் வருமென்பதற்கு, "குழவித் திங்கள்" என்பது மேற்கோள்; தொல். மர. சூ. ௨௪. பேர்; மயிலைநாதர் குழவியென்பது மதிக்கும் உரித்தாய்வரு மரபிற்றென்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது; நன். பொது. சூ. ௩௭.

௩. "போர்புக லேற்றுப் பிணரெருத்தில்" கலி. ௧0௩: ௩௪.

௪. (அ) "பெருமலை விடரகத்து" (ஆ) "பெருமலை விடரகத் தருமிசை" புறம். ௩௭: ௪; ௧௧: ௮.

௫. படுதல் என்பது பெய்தல் என்னும் பொருளில் வருதல், (அ) "படுமழை யடுக்கத்த" (ஆ) "பாடுபெயல்" கலி. ௪௮: ௪; ௬0: ௬. என்பவற்றாலும் 'பாட்டம்' என இருவகைவழக்கினும்வழங்கும் சொல்லாலும் அறியலாகும்.

௬. "ஊர்பெழு கிளர்புளர் புயர்மங்குலி னறைபொங்க" கலி. ௧0௫: ௨௫.

௭. மணிவரை என்பதற்கு நீலமணி போன்றமலை யெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

௮. (அ) "அயமிழி யருவிய வணிமலை" (ஆ) "இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலை" (இ) "ஆமிழி யணிமலை" (ஈ) "அயனந்தி யணிபெற வருவியார்த் திழிதரும், பயமழை தலைஇய பாடுசால் விறல்

(பிரதிபேதம்) * வளைபுமலிந்த.

க0 வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து;

கச யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;

கஅ உய்யா வருநோய்க் குயவாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா;

உ0 காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை;

உச காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா;

உஅ அகைபெரி யானுதென் னாருயி ரெஞ்சும்
வகையினா லுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு;

௩0 அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா;

ஆங்கதை;

௩௩ அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே.

**இது மடலேறுகின்ற தலைவன் சான்றோர்க்குக் கூறியது.**

**இதன் பொருள்.**

(௧)சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
(௨)பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி (௩)யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனா (௪)லிவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பேன் மான்ற
துளியிடை (௫)மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து (௬)மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன் றுநீங்காது
(௭)பாடுவேன் பாய்மா நிறுத்து

எ - து: நற்குணங்கள் எல்லாம் அமைந்தீர்! நற்குணங்களெல்லாம் அமைந்தீர்! நீர் வாழ்வீராக! பிறருடைய நோயும் தம்முடைய நோய்போலே எந்நாளும் பேணி அதனாற் பெறும் அறனை அறிந்து போதுதல் உலகத்துள்ள சான்றவர்க்கெல்லாம் * முறைமையானால், நமக்கும் அது முறைமையென்று கருதி நமக்கொரு காரியத்தினைக் கூறுவேன்; அஃதியாதெனின், ஒருத்தி

---

௧. "சான்றவிர் வாழியோ சான்றவிரென்னும்" என்பது கண்டோர் கேட்பாராகத் தலைமகன் கூற்று நிகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். செய். சூ. ௧௯௬. பேர்; நச்.

௨. "அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய், தந்நோய்போற் போற்றாக் கடை" குறள். ௩௧௫.

௩. "தோன்றிமாய்ந் துலக மூன்றிற் றுயரெய்து முயிர்க டம்மை, யீன்ற தாய் போல வோம்பி யின்பத்து ளிருத்தி நாதன், மூன்றுலகிற்கு மாக்கி முடிவிலாத் தன்மை நல்கு, மான்றநல் லறத்தைப்போலு மரிய தொன்றில்லை கண்டாய்"

௪. "அவ்வெதிர்" (கலி. ௧௦: ௧௩) என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

௫. கலி. ௧௩௮: ௫ - ௧௧ - ஆம் அடிகள் ஒப்புநோக்குக.

௬. "பனைபடு கலிமாப், பூண்மணி கறங்க வேறி" குறுந். ௧௭௩.

௭. இந்நூற்பக்கம் ௮௫௮: ௨-ஆம் குறிப்பில் (ஆ) முதலியவை பார்க்க.

(பிரதிபேதம்) * முறைமையானும்.

மயங்கினமழைக்கு நடுவில் மின்போலே வந்துதோன்றித் தன்னொளியோடே தன்னுருவையும் என்னைக் காணப்பண்ணி என்னை அளிக்குந்தன்மையளாய் அளித்துப் *பின்னர் என்னெஞ்சைத் தான்வரும்வழியாகக்கொண்டுவிட்டாள்; அதனை முதலாகக்கொண்டு துயில்கொள்ளேனாய் அசைகின்ற அழகினையுடைய (க)ஆவிரையினது பூவோடே எருக்கினது கட்டுதலையுடைய அழகினையுடைய கண்ணியையுஞ் சூடி வளருங் கரிய பனைமடலாற் செய்த குதிரையை மணிகள் ஆரவாரிப்ப ஏறி அப்பாய்மாவை (௨)மனத்தே நிறுத்தி யான் நீங்காமனின்று வருத்தத்தைத் தருகின்ற என் காமநோயைத் தாங்கமாட்டாமையால் உண்டான †மனவருத்தத்திற்கு இளைப்பாறுதலாக இறுகின பூணினையுடைய மாதர் என்னை வருத்தின கூற்றிலே ஒருகூற்றினைப் (௩) பாடுவேன்; அதனை இவ்விடத்திருந்த சான்றீர்! கேளுமென்றான். எ - று.

பலராதலிற் சான்றீர் சான்றீரென்றான். ஈர் என்று விளியேலாது (௪) குறுகிநின்றது. ஓ, அசை. பின்பு சான்றீர் என்றது தான் பின்பு கூறுகின்றதற்கு எதிர்முகமாக. ‡கொண்டும் என்னும் உம்மை இசைநிறை. ‖ "ஒருத்தியொளியோடு ..........துஞ்சேன்" என்றது (௫)தன்கட்டோன்றிய அசைவு பற்றி அவலம் பிறந்தது.

கச (௬)யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
(எ) ÷ மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்

---

க. இந்நூற்பக்கம் அடிஎ: எ-ஆம் குறிப்புப் பார்க்க.

௨. (அ) "மன்றத்து மடலேறி, நிறக்குவென் போல்வல்யா னீடு பழியே" கலி. ருஅ: ௨௨ - ௨௩. (ஆ) "மடற் கலிமா மன்றத் தேறித்தன், னணி நலம் பாடினு மறியாள்" குறள். என்பவற்றை நோக்க, 'மனத்தே' என்பது 'மன்றத்தே' என்று இருக்கவேண்டியதென்று தோற்றுகிறது.

௩. இந்நூற்பக்கம் அடிஅ: ௩ - ஆம் குறிப்பில் (ஆ) முதலியவை பார்க்க.

௪. 'அர்' ஈறாய் விளியேற்கும்; தொல். விளி. சூ. ௨௧.

௫. இச்செய்திக்கே "துளிபிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி... ......துஞ்சேன்" என்னும் அடிகள் மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ரு; நச்; இ - வி. சூ. ருஎஅ.

௬. "யாமத்து மெல்லையும்" என்னும் பகுதி (தொல். அகத். சூ. ருச. நச்) சுட்டி ஒருவர்பெயர்கொள்ளாப் பெருந்திணைக்கும் "காம மேநுகர் வார்தம காதலால், யாம மும்பக லும்மறி யாமையால்" (சீவக. கஙரு.) என்புழி யாமம் இரவென்னும் பொருளில் வருமென்பதற்கும் மேற்.

எ. "மாமேலேனென்று.........பட்டு" என வருதலின் இச்செய்யுள் ஏறியமடற்றிறமான பெருந்திணையென்பர் நச்சினார்க்கினியர்; தொல்.

(பிரதிபேதம்) * பின்னர் நெஞ்சை, † மனம் வருத்த, ‡ கொண்டும்: உம்மை, ‖ ஒத்தி, ÷ மாமேலி னின்று.

றேமொழி மாத ருறாஅ துறீஇய "
(௧)காமக் கடலகப் பட்டு

எ - து: தேன்போலும் மொழியினையுடைய மாதர் *தான் காமுறாதே என்னைக்காமுறுத்தின காமமாகிய கடலிலே அகப்பட்டு (௨)உசாத்துணை இல்லாத நடுவியாமத்தும் உசாத்துணையுள்ள பகலிடத்தும் † மனவருத்த மாகிய திரைகள் வந்து அலைக்கையினாலே மாவின்மேல் இருக்கின்றேனிருக்கின்றேனென்று மனத்தாற்கருதியிருந்து அம்(௩)மடன்மாவொருதெப்பமாக அக்கடலை நீந்துவேன்; அஃது என்னிலை; என்றான். எ - று.

௧௮ (௪)உய்யா வருநோய்க் ‡குயலாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா

எ - து: என்னை மயக்கமுறுத்தினவள் அதற்கு மருந்தாகத் தந்த இம்மடன்மா யான் பிழையாமைக்குக் காரணமான அரிய காமநோய்க்குப் பிழைக்கும்படிக்குச் செய்வதொன்றாய் இராநின்றதென்றான். எ - று.

௨௦ (௫)காணுந ரெள்ளக் ||கலங்கித் தலைவந்தெ
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு

அகத். சூ. ௧௩, சூ. ௫௧. இ - வி நூலாரும் இச்செய்யுளை அதற்கே மேற்கோள் காட்டினர்; இ - வி. சூ. ௫௧௧.

௧. (அ) "காமக் கடல்" (ஆ) "காமக் கடும்புனல்" குறள். ௧௧௬௪. ௧௧௬௭.

௨. (அ) "மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா, வென்னல்ல தில்லை துணை" குறள். ௧௧௬௮. என்பதும் (ஆ) "மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற" குறள். ௧௧௩௬. என்பதற்கு, 'எல்லாருந் துயிலும் இடையாமத்தும் யானிருந்து மடலூர்தலையே கருதா நிற்பேன்' என்று பரிமேலழகர் எழுதியிருக்கும் உரையும் ஈண்டு அறிதற்பாலன.

௩. (அ) "துறைசையன்னார், கணையார் விழிதந்த காமக் கடலைக் கடக்க நெஞ்சே, புணையாகக் கோடன் மடலன்றி வேறு பொருளில்லையே" திருவாவடுதுறைக். ௧௧௮. (ஆ) "அடலான வேல்விழி யார்கைகொடாவிடி லாசைநெடுங், கடலானசோகச் சுழியூடகப்பட்ட காமுகர்தா, மடலான தோணிகொண் டேநீந்திச் சேர்வர் மணக்கரைக்கே" மாறன். ௧௨௫.

௪. (அ) "என்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக, நன்னுத லீத்த விம்மா" கலி. ௧௪௦: ௧௫ - ௧௬. (ஆ) "உயலாற்று, வுய்விஞெய்" குறள். ௧௧௭௪.

௫. (அ) "பிற ரெள்ளத் தோன்றி, யொருநாண் மருங்கிற், பெருநாணீக்கித், தெருவி னியலவுந் தருவது கொல்லோ" குறுந். ௧௮௨. (ஆ) "பல்லார்நக் கெள்ளப் படுமடன் மாவேறி" கலி. ௪௧: ௨௨.

(பிரதிபேதம்) *தாங் காமுறாதே, † மனம் வருத்த ‡ உயலாகும், || கலங்கத்.

மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
*தாணையால் வந்த படை

எ - து: மாட்சிமைப்பட்ட இழையினையுடைய மாதராள் ஏரால் வந்த வருத்தமென்று யான் கூறும்படியாகக்(க)காமனுடைய ஏவலாலே வந்த காம நோயாகிய படை என்னைக் கண்டார் இகழும்படி யான்கலங்க என்னிடத்தே வந்து என்னுடைய(உ)ஆண்டன்மையின் அழகாகிய மதிலைச் சூழவிட்டிருந்து புறத்தையெல்லாமுடைத்துப் பின்னர் உள்வாயை அழியா †நிற்குமென்றான். எ - று.

கலங்கி, கலங்க என்க.

உசு (ஙு)காமக் கடும்பகையிற் ‡றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா

எ - து: காமமாகிய கடியபகை ஆண்மையை உள்ளும்புறம்பும் அழித்த லாலே இங்ஙனம் வடிவுகொண்டு தோன்றினஎனக்கு அழகையுடைத்தாகிய நுதலினையுடையாள் தந்த இம்மடன்மா, பரிகாரமாயிற்றென்றான். எ - று.

உகூ அகையெரி யானுதென் று(ச)ருயி ரெஞ்சும்
||வகையினு ளுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட ÷நெஞ்சு

எ - து: முல்லைமுகையை ஒக்கும் இலங்குகின்ற எயிற்றையும் இனிய தாகிய மகிழ்ச்சியையுமுடைய மாதருடைய அழகாலே அவளிடத்தைப்பற்றிக்

---

க. (அ) "பீழைமை பலவுஞ் செய்து பிணிப்படை பரப்பி வந்து, வாழுயிர்ப் பொழித்து வவ்வி வலிந்துயிர் வாங்கி யுண்ணும், கூழைமை பயின்ற கூற்ற வரசனை" (சூளா. துறவு. கஅ) என்பதும் (ஆ) "காலனைச் சூழ்ந்த நோய்போ னபுலமா விபுலர் சூழ" (சீவக. ககசஅ) என்ப தற்கு, 'காலன் ஏவினவிடத்தே சேறற்கு அவனைச் சூழ்ந்த நோய் போல மாவின்மேலே நபுல விபுலர் சூழ்ந்துவர' என்றெழுதியிருக்கும் உரையும் இதன் நிழலாக இருக்கின்றன.

உ. (அ)"நாணொடுநல்லாண்மைபண்டுடையே னின்றுடையேன், காமுற்று ரேறு மடல்" (ஆ) "காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு, நல்லாண் மை யென்னும் புணை" குறள். ககஙங. ககங௪.

ங. "காம முழந்து வருந்தினார்க் கேம, மடலல்ல தில்லை வலி" குறள். ககஙக.

௪. "உயிரெஞ்சு துயர்செய்தல்" கலி. கூ0: கூ.

(பிரதிபேதம்) * ஆணையான். † நிற்குமேயென்றான். ‡ தோன்றினோர்க்கு, || வகையினுள், ÷ நோய்.

கொண்ட என்னுடைய நெஞ்சிடத்து உள்ளத்தைச் சுடப்பட்டு எரிகின்ற காமத்தீ என் அரிய உயிர்போங் கூற்றாலே அமையாதே நின்று (௧)சுடுதலைச் செய்யும்; ஐயோ! யான் எங்ஙனம் ஆற்றுவேனென்றான். எ - று.

(௨)உறுப்புடையதுபோலே நெஞ்சுக்கு உள்ளமுண்டென்றான்.

அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா

எ - து: காமமாகிய பொறுத்தற்கரியநோய் அறுதியாக நெருப்பு; ஒத்த இழையினையுடையாள் அதற்குப் பரிகாரமாகத்தந்த இம்மடன்மா அறுதியாக அதற்கொரு நிழலாய்இருந்ததென்றான். எ - று.

ஆங்கதை

அறிந்தனி ராயிற் சான்றவிர் (௩)*தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ

---

௧. "ஊர்தலைக்கொண்டு...........காமத்தீ, நீருட் புகினுஞ் சுடும்" (கலி. ௧௪௪: ௫௧ - ௬௨) என்பதும் அதன் குறிப்புள் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் ஒப்புநோக்கற்பாலன.

௨. தொல். பொருளி. சூ. ௨.

௩. இந்திரன், விண்ணுலகில் தன்பால் வந்த யயாதியரசனை நோக்கிப் பலவும்வினவுங்கால், 'தவத்தில் நீ யாருக்கு ஒப்பாயினை' என்றதற்கு அவன், 'தவத்தில் எனக்கு ஒப்பானொருவனையும் நான் காணவில்லை' என, இந்திரன், 'பிறரை அவர் பெருமையை அறியாமலே அவமதித்த இத்தவற்றால் நீ மேலுலக வாழ்வொழியக் கீழே விழுவாய்' என, 'அவ்வாறாயின் நல்லோரிடையே விழவேண்டுகிறேன்' என்று அவ் விந்திரன்பால் அவ்வரம்பெற்று விழுமரசன் சிலர் வேள்விசெய்யு மிடத்துக்கு நேரே இறங்குகையில் அங்கிருந்த அஷ்டகன் மிகப் பல செய்திவினவ, அவற்றுக்குவிடைகள்கூறிக் கீழேவீழ விரைந்தபோது, அவனும் பிரதர்த்தனனும் வஸுமனஸும் சிபியும் தமக்கு மேலுலக முண்டென்று கேட்டறிந்து அவ்வுலகங்களை யயாதிக்குக் கொடுப்ப, அவன் கொள்ளேனெனமறுத்துப் பின்பு அங்குவந்த தவமகளை அவள் கூற்றால் தன்மகள் மாதவியென்றும் அவர்களை அவள்பெற்ற பிள்ளைக ளென்றும் தெளிந்து அவள் கூறிய நியாயத்தால் அவளும் அந்நால்வர் களும் அளித்த தவப்பயனைமாற்றவொண்ணாதுஏற்று, மேலுலகினின்று அங்குவந்த ஐந்து பொற்றேர்களில் தனித்தனியே அந்நால்வர்க ளுடன்ஏறி மேலுலகடைந்தனனென்று ஸ்ரீமஹாபாரதம். ஆதிபர்வம்.

பிரதிபேதம்) * தான்றவ மொரீஇ.

(க)ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை *தீர்த்த னுந்தலைக் கடனே

எ - து: என்று கூறி என்னிடத்துச் செல்கின்ற வருத்தத்தை நீர் அறிந்தீராயிற் சான்றீராயுள்ளீர்! அமைந்த சான்றோர் இவன் தவஞ்செய்தற்கு உரியனென்று தவத்துள்ளே †கூட்டிக்கொள்ளப்பட்ட அரசனை, அவன் தான் தவஞ்செய்தலினீங்கித் துறக்கத்திற் சேறலை வழுவுகையினாலே, அவ்வழுவுதலை அவர் மீட்டுத், தவஞ் செய்வித்து, உயர்ந்த நிலைமையையுடைய சுவர்க்கத்தேபோகவிட்டுத் துயர் ‡தீர்த்தாற்போல, (உ)என் துயரினது தன்மையைப் போக்குதலும் நும்மிடத்து முறைமை; எனச் சான்றோரைநோக்கிக் கூறினான். எ - று.

இது தன்கட் டோன்றிய அசைவுபற்றி அவலம் பிறந்தது.

இது(ங)தரவும் போக்கும் ||பாட்டிடைமிடைந்த கலிவெண்பாட்டு. (உஉ)

(க௪O.) கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல நோக்குவீர் கொண்டது
மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை
பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
நெடியோன் மகனயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
மிடிய விடைக்கொள்ளுநஞ் சாய லொருத்திக்
கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னே னொருவனேன் யான்;

---

அO - அஎ-ஆம் அத்தியாயத்துள்ள செய்தி இம்மூலத்துக்கு ஒருவாறு பொருந்துமென்று தோற்றுகிறது.

க. (அ) "உயர்நிலை யுலகம்" மது. ககஎ. (ஆ) "உயர்நிலை யுலகத்து" புறம். ருO: கரு.

உ. "சான்றோ ரிருந்த வவையத் துற்றோ, னாசாகென்னும் பூசல்போல, வல்லே களைமதி யத்தை" புறம். உசுசு: அ - கO.

ங. தரவும் போக்கும் பாட்டிடைமிடைந்த கலிவெண்பாட்டு ஆசிரியச் சுரிதகத்தான் வந்ததற்கு இச்செய்யுள் மேற்கோள்; தொல். செய். சூ. கருச. பேர்; நச்.

(பிரதிபேதம்) *தீர்த்தலுந்தலை, †கூடிக்கொள், ‡ தீர்ந்தாப்போல, ||பாட்டுமிடைமிடைந்த.

கஈ என்னும், பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ
வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா;

கஎ திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய
லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்;

உக தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும்
பாம்பு மவைப்படி லுய்யுமாம் பூங்கண்
வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர்;

உரு வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்
றஞ்சலென் றாலு முயிர்ப்புண்டா மஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காம
மறிந்து மறியாதிவ் வூர்;

ஆங்க;

ஈ0 என்க ணிடும்பை யறீஇயினெ னுங்கட்
டெருளுற நோக்கித் தெரியுங்கா லின்ன
மருளுறு நோயொடு மம்ம ரகல
விருளுறு கூந்தலா ளென்னை
யருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே.

(க)இது மடலேறுவேனென்ற தலைவன் கண்டார்க்குக் கூறியது.

இதன் பொருள்.

(உ)*கண்டவி ரெல்லாங் †கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல ‡நோக்குவீர் கொண்டது

---

க. இச்செய்யுளையும் ஏறிய மடற்றிறமான பெருந்திணையென்று (தொல். அகத். சூ. கஈ. உரையில்) இவர் கூறியிருக்கிறார்.

உ. "கண்டவிரெல்லாம்...........நோக்குவீர்" என்பது எல்லாமென்னுஞ் சொல் சிறபான்மை முன்னிலைப் பன்மைக்கண் வருமென்பதற்கு மேற்கோள்; தொல். பெயரி. சூ. ஈஈ. இ - வி. சூ. கககு.

(பிரதிபேதம்) * கண்டனிர், † கதுமெனவாங்கே, ‡ நோக்குதிர்

(க)மாவென் றுணர்மின், மடலன்று மற்றிவை
பூவல்ல (உ)பூளை யுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
(ங)நெடியோன் மக*னயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
மிடிய †விடைக்கொள்ளுஞ் சாய லொருத்திக்
(ச)கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னை னொருவனேன் யான்

எ - து: என்னைக்கண்ட நீங்களெல்லாம் (ரு) கடுகவந்து அவ்வூரிடத்து என்னைப் பண்டு அறியாதீர்போலப் பாராநின்றீர்; நாப்பெய்தமணியைக்கழுத்திலே கட்டிக் கையாற் பிடித்தலமைந்த வாய்க்கயிற்றோடே யான் கையிற் கொண்டது மடன்மாவன்று, ஏறுவார் ஏறப்படுங் குதிரையென்றும் பின்னைத் தலையினும் மார்பினுங் கிடக்கின்ற இவை தகடாகிய பொன்னினது விளக்கத்தைஒக்கும் ஆவிரம்பூவாற்செய்த கண்ணியும்(சு) உழிஞைப் பூவோடே

---

க. (அ) "மாவென மடலூ மூர்ப" குறுந். கஎ. (ஆ) "மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்" வளையாபதி.

உ. இந்நூற்பக்கம் அருஎ: எ-ஆம் குறிப்புப் பார்க்க.

ங. (அ) "மதனற்குமெழுத வொண்ணாச், சீதையைத் தருதலாலே" (ஆ) "இந்தத் தோன்றலை, யெழுதலாங்கொலிம் மன்மதனாலென்றாள்" கம்ப. மிதிலைக்காட்சி. ரு. உலாவியல். உரு. என்பவற்றால் காமன், ஓவியத்துறை கைபோயவனெனப்படுதலும் இங்கே நோக்கற்பாலது.

ச. "அடியுறை" கலி. ருச: ச. அதன் குறிப்பும் பார்க்க.

ரு. (அ) "கதுமெனக் கண்டவர்க்கு" (ஆ) "கதுமென நோக்கன்மின்" கலி. சுo: ரு, கசஎ: கஎ. (இ) "கதுமெனத் தாணோக்கி" குறள். ககஎங. (ஈ) இந்நூற்பக்கம் சஉஉ: எ-ஆம் குறிப்பும்பார்க்க.

சு. (அ) 'உழிஞை - கொற்றான்; அது குடநாட்டார் வழக்கு' என்பது புறம். ருo. விசேடவுரை. (ஆ) இது கொடியை யுடையதென்று "நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு" (புறம். எசு: ரு, எஎ: ங) என்பதனால் தெரிகிறது. (இ) இதன் பூ மதில்வளைப்பவருக் குரித்தென்று சிலரும் (ஈ) அவருக்கும் மதில் காப்பவருக்கு முரித்தென்று சிலரும் கூறுவர்; (உ) இது பூளையின்வகையு ளொன்றென்றும் கூறப்படும்.

(பிரதிபேதம்) * நயந் தகந்தாங்கு, † இடைகொள்ளும்.

பூளைப்பூவும் புனத்தையுடைய மலையிலே மயிலுதிர்த்த பீலியும் விளங்குகின்ற [தனமல்ல,] (தாமல்ல) என் மனத்தாலே நன்றென்று கருதி யான் கட்டின பூந்தாரென்றும் உணர்வீராக; திருமால் மகனாகிய காமன் என் தலைமையை அழித்தலை விரும்பிக் கொடுக்கப்பட்டுத் தன்மெய்யிடத்தே அத்தன்மையவாகிய நன்மைகளெல்லாந் தோன்றிய வனப்பாலும் சாயலாலும் வடுவகிரின்றன்மையையுடைய கண்களாலும் என்னெஞ்சாகிய அரண் இடிந்துபோம்படி நடுவேவந்து என்னைக் கைக்கொள்ளும் ஒப்பிலாதவளுக்கு யான் வழிபட்டு உறைதலை உலகத்தார்க்குக் காட்டவேண்டிச் செல்லா நின்றேன்; இதனைக் கண்டு நீர் மனத்தே வெறுத்துக் குவிந்திராதேகொள்ளும்; யான் அத்தன்மையையுடையேன் ஒருவனென்றான். எ - று.

அன்னேயென்றது தான் இவ்வாறுதற்கு முன்செய்த தீவினையை. நூல் ஆகுபெயர். தந்தென்பது "செலவினும் வரவினும்" என்னும் (க)சூத்திரப் பொதுவிதியான் ஈண்டுக் கொடுத்தலை உணர்த்திற்று. அனைய என்றது நெஞ்சறி சுட்டாய் நின்றது. வடிய என்றது வடுவகிரின் தன்மையையுடைய கண்களை உணர்த்திற்று. அடியிலே யுறைதல் வழிபாடென்னும் பொருடந்து நிற்றலின், அதனோடே ஒருத்திக்கு என்னும் நான்கனுருபு முடிந்தது.

என்னானும், (உ)பாடெனிற் *பாடவும் வல்லேன் சிறிதாங்கே
பாடெனி லாடலு மாற்றுவேன் பாடுகோ
(௩)வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா

எ-து: நீ ஒன்றுபாடென்று கூறுவீராயில் எப்படியால் எப்படி†யாயினுஞ் சிறிது பாடவும் வல்லேன்; அம்மடன்மா மேலே இருந்து அஃது (௪)இடவாய் வலவாய் பெயரும்படி நின்மெய்யை(௫) அசைப்பாயென்பீராயின் அத்தொழிலை யான் ஆளுதலையும் வல்லேன்; இப்பொழுது என்னெஞ்சிடத்துக் காமநோயை யான் ஆற்றும் மருந்தாக நன்னுதல் தந்த இக்குதிரையினைப் பாடுவேனோ என்றான். எ - று.

அவர் பாடென்னாமையின், மேல் தன்னை வருத்தினமையைக் கூறுகின்றான்.

---

க. தொல். களவி. சூ. ௨௮.

உ. இந்நூற்பக்கம் ௮௱௮: ௩-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "உய்யா வருநோய்க் குயலாகு மைய, லுறீஇயா ளீத் . விம்மா" கலி. ௧௩௯: ௧௮ - ௧௯.

௪. 'இடவாய் வலவாயாகிய இடத்தை' புறம். ௪: ௭. உரை.

௫. "சங்கரணை நெருக்கமாந் தாடித் தனித்து நின்றே" என்று மடலேறுவார்க்கு ஆடுதலும் கூறப்படுதல் காண்க.

(பிரதிபேதம்) *பாடலும் வல்லேன், † ஆயினும்.

*போக்கின வெள்ளிய கால்களையுடைய காரியாகிய ஏற்றினையும் மீன் பொலிவு பெற்று விளங்குதல்வரும் அந்திக்காலத்து மேகத்தையுடைய சிவந்த ஆகாயம்போலே அழகிய ஒளிபரந்த புள்ளிகள் வெள்ளையாயிருக்கின்ற சிவந்த ஏற்றையும் கொலைத் தொழிலையுடைய இறைவன் சூடிய இளையதாகிய திங்களைப்போல வளைந்து நிறைந்த கொம்பை அணிந்த சிவந்த ஏற்றையும் பொருகின்ற†மாறுபாட்டினையும் வலியினையுமுடைய கொண்டாடுகின்ற பிற ஏறுகள் பலவற்றையும் தொழுவினுள்ளே விடுகையினாலே ஒழுங்குபட்ட புகைசூழ்ந்த அத்தொழு, சிங்கமாகிய மாவும் குதிரையாகிய மாவும் களிறுகளும் (க)முதலையிலொருசாதியாகிய கராமும் பெரிய மலையின் முழையிடத்திலே சேரத் திரளப்பட்டுப் பெய்கின்ற மழை ஒருங்குகிரியும் மலையிடத்தை யொக்கும். எ - று.

௨௨ தொழுவினுள், (௨)புரிபு புரிபு புக்க பொதுவரைத்
(௩)தெரிபு தெரிபு குத்தின வேறு

எ - து: அத்தொழுவினுள்ளே அவ்வேறுகளைத் தழுவுதற்கு விரும்பி விரும்பிக் குதித்த பொதுவரைத் தெரிந்து தெரிந்து அவ்வேறுகள் குத்தின. எ - று.

௨௪ ஏற்றின், (௪)அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்க

---

வெற்ப" (கலி. ௪௯: ௧. ௨௫; ௪௮: ௧; ௫௩: ௬ - ௭.) என்பவற்றால் மலையை அருவி அழகுறுத்துவதாகக் கூறுதல்அறியப்படும்.

௧. (அ) "ஒடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்குங், கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமும்" (குறிஞ்சி. ௨௫௬ - ௨௫௭.) என்பதனால், கராம் முதலைச்சாதி விசேடமென்பது அறியலாகும்.

௨. "எழுசீ ரடியே முடுகிய னடக்கும்" என்பதன் பின்னுள்ள 'முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்' என்னும் (தொல். செய். ௬௬) சூத்திரத்தி னுரையில் முதலீரடிக்குமென்ற வும்மை எச்சவும்மை யாதலால், நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்று கூறி, "புரிபு புரிபு புக்க பொதுவரைத், தெரிபு தெரிபு குத்தின வேறு" என்பதை மேற்கோள் காட்டுவர். பேர்.

௩. 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தன் வினைமுதல் வினை கொண்டு முடிந்ததற்கு, "தெரிபுதெரிபு குத்தினவேறு" என்பது மேற்கோள்; நன்.வினை. சூ. ௨௫. மயிலை. விருத்தி: இரா. இ-வி. சூ. ௨௪௬.

௪. கலிப்பாவுறுப்பில் முதலடி முடுகியலாயும் முதலடியும் மூன்றுமடியும் முச்சீராயும் வந்ததற்கு, "அரிபரிபு..........குடர்வலந்தன" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௭௦. நச்.

(பிரதிபேதம்) * போக்கினவெள்ளிய. † மாறுபாட்டினையுமுடைய.

௧௭ (௧)திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய
லொண்டொடி *நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்

எ - து: சான்றோர் திங்களைப் பாம்புசென்று மறைக்குங்கால் அதனை வருத்தத்தைத் தீர்க்கமாட்டாராயினும் அதன்மேல் தமக்குள்ள காதலைக் காட்டித் துன்புறுவர்; அதுபோல இனிய மென்மையினையுடைய ஒண்டொடியது (உ)நோய்செய்யும் நோக்கிலே அகப்பட்ட என்னுடைய நெஞ்சிடத்துக் காமநோயைக் கண்ணாற் கண்டுவைத்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்க்க மாட்டாராயினும் (௩)கண்ணோட்டமாயினுஞ் செய்தலிலர். எ - று.

௨௧ தாங்காச் சினத்தொடு காட்டி (௪)யுயிர்செகுக்கும்
(௫)பாம்பு மவைப்படி லுய்யுமாம் பூங்கண்
(௬)வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர்

---

௧. (அ) "அங்கண்மதிய மரவின்வாய்ப் பட்டெனப், பூசல்வாயாப் புலம்பு மனைக் கலங்கி, யேதின்மாக்களு நோவர் தோழி, யொன்று நோவாரில்லைத், தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே" (தொல். அகத். சூ. ௩. நச். மேற்கோள்.) என்பதும் (ஆ)"அழலுடைக் கடவுளை யரவு சேர்ந்தென, விழவுடை முதுநகர் விலாவிக் கின்றதே" (சீவக. ௧0௧௨.) என்பதும் ஒப்புநோக்கற்பாலன.

௨. "ஒருநோக்கு நோய்நோக்கு" குறள். ௧0௯௧.

௩. (அ) குறள். ௫௭௧ - ௫௮௦ - ஆம் செய்யுட்களும் (ஆ) "கண்ணுக் கணிகலங் கண்ணோட்டம்" திரிகடுகம். ௫௨. (இ) "தெற்றப் பகைவ ரிடர்ப்பாடு கண்டக்கான், மற்றுங்கண் ணோடுவார் மேன்மக்கள்" பழ. ௩௧௩. (ஈ) "கண்வனப்புக் கண்ணோட்டம்" சிறுபஞ்ச. ௧. (உ) "ஒன்று நரம்பென்கோ வொன்றுத வென்பென்கோ, வின்றவை தானென்கோ யாதென்கோ - மென்றோடையாழ்ப், பண்ணோட்டு மின்சொற் பணைத்தோளாய் சேர்ந்தவர்பாற், கண்ணோட்டமில்லாத கண்" (ஊ)"யாவர் வரினு மெதிரேற்குந் தெய்வமடப், பாவை யகத்திருந்தும் பாடின்றே-மேவினர்பாற்.........கண்ணோட்டமில்லாதகண்" பாரதம். (எ) "கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்ணோட்ட மென்பதெலாங் கருணையன்றே" வில்லி. அருச்சுனன்றவ. ௪௩. என்பவைகளும் இங்கே அறிதற்பாலன.

௪. "பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடும்" நாலடி. ௨௨0.

௫. "சான்றோ, ரவைப்படிற் சாவாதாம் பாம்பு" பழ. ௩௧௩.

(பிரதிபேதம்) * ஓர்நோக்கின்.

மயங்கினு ளென்று *மருடீர் கலங்கன்மின்
(க)னின்னுயி ரன்றாற் கெனைத்தொன் றாந் தீதின்மை
யென்னுயிர் காட்டாதோ மற்று

௨௨ (உ)பழிதபு ஞாயிறே பாடறியா தார்கட்
கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின்னை
வழிபட் டிரக்குவேன் †வந்தேனென் னெஞ்ச
மழியத் துறந்தானைச் சீறுங்கா லென்னை
யொழிய விடாதீமோ வென்று

௨௩ அழிதக, (௩)மாஅந் தளிர்கொண்ட ‡போழ்தினு ளிவ்வூரார்
தாஅந் தளிர்சூடித் தந்நலம் பாடுப
வாஅந் ‖ தளிர்க்கு மிடைச்சென்றார் மீடரின்
யாஅந் ÷தளிர்க்குவே மன்

௩௪ நெய்த னெறிக்கவும் வல்லன் னெடுமென்(ச)றோட்
பெய்கரும் பீர்க்கவும் வல்ல ×னிள(ரு)முலைமேற்
றொய்யி லெழுதவும் வல்லன்றன் கையிற்

க. "மதுமுகத் தலர்ந்த கோதை மாற்றமைந் தற்குரைப்பாள், கொதிமுகக் குருதி வைவேற் குரிசிலோ நம்மை யுள்ளான், விதிமுக மணங்க ளெய்தி வீற்றிருந் தின்ப முய்ப்ப, மதிமுக மறியு நாமே வாடுவ தென்னை யென்றாள்" சீவக. ௧௭௦௮.

௨. (அ) ஆங்கு நெஞ்சழிதல் என்னும் மெய்ப்பாட்டுக்கு, "பழிதபு ஞாயிறே ...... ......விடாதீமோ வென்று" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப்பாட். சூ. ௨௨; இ - வி. சூ. ௫௮௦. (ஆ) ஞாயிறு முதலிய சில பொருள்கள் சொல்லுவனபோலவும் கேட்குநபோலவும் சொல்லப்படு மென்று கூறி, "பழிதபுஞாயிறே பாடறியாதார்கண்" என்னும் அடியை ஞாயிறு அவ்வாறே சொல்லப்படுவதற்கு மேற்கோள்காட்டினர், இளம் பூரணர்; தொல். செய். சூ. ௧௯௦. 'ஞாயிறு'

௩. "மலைமாந் தளிரே" கலி. ௧௪௨: ௪௭.

௪. (அ) "நற்றோ ளிழைத்த கரும்புக்கு" (ஆ) "தாளீர்த்த கரும்பணி வாட வென், மென்றோ ளெழுதித்தான்" கலி. ௮௪: ௧௯, ௧௩௩: ௨௯ - ௩௦.

௫. இந்நூற்பக்கம் ௪௯௦: ௨-ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * மருடிர் கயங்கன்மின், † வந்தனனென்னெஞ் சழிய, ‡ பொழுதினுள், ‖ தளிக்குமிடை, ÷ தளிர்க்குமொயன். × இனமுலைமேல்.

(௧)சிலைவல்லான் போலுஞ் செறிவினு னல்ல
பலவல்லன் றோளாள் பவன்

௩௯ நினையு(௨)மென் னுள்ளம்போ னெடுங்கழி மலர்கூம்ப
வினையுமென்(௩)னெஞ்சம்போ லினங்காப்பார் குழறோன்றச்
சாயவென் (௪)கிளவிபோற் செவ்வழியா ழிசைநிற்பப்
போயவென் னொளிபேபோ லொருநிலையே பகன்மாயக்
(௫)காலன்போல் வந்த கலக்கத்தோ டென்றலை
மாலையும் வந்தன் றினி

௪௰ இருளொடியா னீந்தும்ப வென்னின்றிப் பட்டா
யருளிலை வாழி சுடர்

௧. (அ)"அரிவையை யரம்பை நாண வணிந்தன னனங்க னன்னோன்" (சீவக. கூஎ௪) என்புழி, 'அனங்க னன்னோன்' என்பதற்கு, 'இவளைத் தீண்டவும் வேட்கை நிகழாமையின் அனங்க னன்றோன் என்றார்' என்று விசேடவுரை கூறி, "சிலைவல்லான் போலுஞ் செறிவினான்" என்பதனைமேற்கோள்காட்டினர் இவ்வுரையாசிரியர். (ஆ)"வில்லாண் மையினால் வெண்கருப்பு வில்லோன்றனக்கே நிகரொன்ன" வில்லி. திரௌபதிமாலையிட்ட. ௪௬. (இ) "வேயெனத் தகைய தோளி யிராகவன் மேனி நோக்கித், தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டா; ளோயெனத் தகுதுயன்றே காமனு நாமு மெல்லாம்" கம்ப. கும்ப. ௩0. (ஈ) "திருமலி கருப்புவென்றிச் சிலையினு லுலகமெல்லாம், பொருதுசெங் கோன டாத்திப் புகழ்விளை யேக வீரன்" எனவும் (உ)"காமனும் விழையுங் காமர் காரிகைக், கலையுணர் மகளிர்" பெருங். (க) ௪0: ௧அ௩ - ௧அ௪. (ஊ) "காமனும்.........காமுறு மொப்பில் வனப்பினுள்" திருவிளை. மாபாதகந். ௩. எனவும் வருவன நோக்குக.

௨. "இம்மாலை, இருங்கழி மாமலர் கூம்ப வரோவென், னரும்படர்நெஞ்ச மழிவொடு கூம்பும்" கலி. ௧௩0: ௧௧ - ௧௩.

௩. "இம்மாலை, கோவலர் தீங்குழ லினைய வரோவென், பூவெழி லுண்கண் புலம்புகொண் டினையும்" கலி. ௧௩0: ௧௪ - ௧௬.

௪ (அ) "செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார்" கலி. ௧௧அ: ௧௫; (ஆ) "செவ்வழி நல்யா, ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி, யணங்குசா லரிவையை" அகம். ௨௧௨: ௬ - அ.

௫. "பிறைநுதி யெயிறாக, நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக், கூற்றுநக் கதுபோலு முட்குவரு கமாலை" (கலி. ௧௨0: எ - ௯) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪௪ (௧)ஈண்டுநீர் ஞாலத்து ளெங்கேள்வ ரில்லாயின்
மாண்ட மனம்பெற்றார் மாசி றறக்கத்து
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாயெனின்
யாண்டு முடையே னிசை

௪௮ ஊரலர் தூற்றுமிவ் வுய்யா விழுமத்துப்
(௨)பீரலர் போலப் பெரிய பசந்தன
(௩)சீரலர் (௪)நீல மெனவவர்க் கஞ்ஞான்று
பேரஞர் செய்தவென் கண்

௫௨ (௫)தன்னுயிர் போலத் தழீஇ *யுலகத்து
மன்னுயிர் காக்குமிம் மன்னனு †மென்கொலோ
வின்னுயி ரன்னானைக் காட்டி யெனைத்தொன்று
மென்னுயிர் காவா தது

எனவாங்கு

---

௧. "ஈண்டுநீர் மிசை" கலி. ௧௦௦: ௧.

௨. இந்நூற்பக்கம் ௨௭௬: ௫, ௩௨௨: ௩ - ஆம் குறிப்புக்கள் இங்கே அறிதற்பாலன.

௩. "நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை, கோடை யொற்றினும் வாடா தாகும்" குறுந். ௩௮௮.

௪. (அ) "நீலத் தலர்வென்ற வமருண்கண், ..........வேலிற், சேந்து நீ யினையையா லொத்ததோ சின்மொழி ..............லணையினு நோய் செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்" கலி. ௫௭: ௯-௧௫. (ஆ) "பூவொத் தலமருந் தகைய வேவொத் தெல்லாரு மறிய நோயசெய் தனவே" குறுந். ௭௨.

௫. (அ) "அறனிழ லெனக்கொண்டா யாய்குடை யக்குடைப், புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா, பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை" கலி. ௯௯: ௮ - ௧௦. என்பதும் (ஆ) அதன் குறிப்பும் (இ) "நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்தயா, னென்றுணைக்குலமங்கையொ ரேந்திழை, தன்றுயர்க்குந் தகவிலெனாயினே, னன்று நன்றென் வலியென நாணுமால்" கம்ப. அயோமுகி. ௧௬. (ஈ) "தன்னுயிர்போல மன்னுயிர்க் கிரக்குந் தயவிலேன்" மச்ச. பிரயாகையிற் பலசொரூப கதன. ௧௨.

(பிரதிபேதம்) * யுலகத்து, † என்கொலெம்முன்னுயிரன்.

போலே தோன்றுகின்றவன் பசுத்திரளையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால், இவன் இங்ஙனம் செலுத்துந் தொழிலை ஒழியான்; இளையோளே! இஃதொரு வலியைப் பாராய்; இவனொருத்தன் காணென்று காட்டினுள்.

எ - று: காண்டற் றொழிலை யுடையவளே. எ-று.
இஃது "அளபெடை மிகூஉ மிகரவிறுபெயர்". (க);

(உ)காற்றுப்போல் வந்த †கதழ்விடைக் காரியை
யூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
(௩)யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்

க. தொல். விளி. சூ. அ. இச்சூத்திர வுரையில் 'இவ்வளபெடைப் பெயர் விளியேற்கும்போது தன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரைபெற்று நிற்கும்; என்றது ழகர வீகாரத்தின் பின் இரண்டு இகரவுயிரும் மூன்று இகரவுயிரு மெழுதப்படவேண்டுமென் பதை' என்றுகூறுவர், சே. கல். நச். இசசொல்லுக்குத் தொழில் செய்கின்றவளேயெனப் பொருளும் எழுதுவர் நச்சினர்க்கினியரும் இ-வி. உரையாசிரியரும். இ - வி சூ. உO௭. இச்சூத்திரத்திறுரையும் மேற்கோளும் எழுதுவோராலும் அவற்றை ஊன்றிப்பாராது அச்சிடுவோராலும் எளிதின் உண்மையறிய இயலாதவாறிருக்கின்றன. இச்சூத்திர வுரையில் "தொழீஇஇ என்பது பெயர்; விளிப மஃதே யெனக்கொள்க. இஃதியல்பு. இயற்கைய வென்று பன்மை கூறிய வாதனன், இவ்வளபெடை மூன்று மாத்திரையின் நிமிர்ந்து நிற்கு மென்பது கொள்ளப் படும். செயற்கையவென்றதனன் இவ்வளபெடைப்பெயர் எழுதும்வழி ஐந்தெழுத்திட்டும் எழுதுப" என்பர் கல்லாடர். ஏனைய உரைகள் அச்சிடப் பட்டுள்ளன. "தொழீஇஇ" கலி. கO௪: ௯அ. "தொழீஇ யுடனுண்ணூர்"சிறுபஞ்ச. ௩அ. என இச்சொல் பிறவிடத்து வருதலும் காண்க.

உ. "ஏற்று மருப்பு மிலங்கிழையாகத் திபமருப்புங், கூற்று மருப்பெழுங் கோலத்தக் தாட்கொரு கோடிசுரும், பாற்று மருப்பொலி தாரண்ண லார்முன் னணிந்து விட்டார், காற்று நெருப்புங் கலந்த தென் றைவருங் காரிகைத்தே" அம்பிகா. உகௌ.

௩. (அ)எருமைச்சாதியின் ஆண் ஏறெனப்படுமென்பதற்கு "ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டு" என்பதுமேற்கோள்; தொல். மரபு. சூ. ௩க. பேர். சூ. ௩அ. நச். (ஆ) இந்நூற்பக்கம் ௯உ௩: ௬-ஆங் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * தொழீஇஇ, (என்பது முன்பதிப்பு), † கழுவிடை.

நிள மன்னிய நோயொடு மருள்கொண்ட மனத்தவள்
பன்மலை யிறந்தவன் பணிந்துவந் தடிசேரத்
*தென்னவற் றெளித்த தேஎம்போல
வின்னகை யெய்தின ளிழந்ததன் னலனே

எ - து: அங்ஙனம் † கூறியவள் அது கொண்டுவருதலுங் கூடும்; அதனோடே நீருங் கூடி (௧) நவகண்டமெனக் கூறுபடுத்தின ‡ உலகத்தின் கண்ணே அவனை ஆராய்ந்து நீர் பிடித்துக்கொண்டு எனக்குத் தரப்பெறில் யானும் || பிறமகளிரைப் போல அறநிபாக (௨) நிறையென்னுங்குணமுடையே னாவேன் ÷ என்றுங் கூறினாள்; அதுகேட்டவர்கள் அதற்கு மறுமொழி கொடாமற் பின்னே வந்தமையின், இவள் ஒருநாளிலேயாயினும் அவனைப் பொருந்தி + முயங்குமென்று கருதி. என்பின்னே வாராநின்றீர்; பின்னை இவள் அப்பொழுதே முன்புபோலன்றி மிகவும் வருந்தினாள் என்று கருதி அவ்விடத்தே நின்று அவனுக்கு ஓர் தீங்கு நிகழ்ந்ததோவென்று உசாவா நின்றீர்; அவ்வருத்தமேயன்றி ஐயோ இவள் கையறவு எய்தினாளென்று மருளாநின்றீர்; இங்ஙனம் உண்மையுணராமற் கலங்காதேகொள்ளும்; பின்னை என் இனிய உயிரை ஒப்பானுக் கியாதொன்றுந் தீதின்றி அவனுள னாயிருக்கின்றமையை (௩) அவனுயிரோடு ஒன்றாகிய என்னுயிர் ஈண்டுக் காட்டாதொழியுமோ? அதுதான் இறந்துபடாது அவனிருந்தமை காட்டிற் றில்லையோ என்றாள்; அதுகேட்டவர்கள் தனக்கு ஓரேதமின்றி நின்று நின்னை இங்ஙனம் வருத்தினவனை நடுவாக நோக்கி நின்ற ஞாயிறு தான் வருத்துங்காண் என்றார்; அது கேட்டு நடுவுநிலைசெய்யாமல் உண்டாம்பழி நீங்கும் ஞாயிறே! உலகியல் அறியாதாரிடத்துக் கழியச்சீறுதற்கு விரைந்து × செல்லையென்று இவர்கள் கூறக்கேட்டு நின்னை வழிபட்டு நீ அவரை மிகச் சீறுதபடி இரந்துகொள்வேனாக வந்தேன்; நீ என்னெஞ்சங் கெடும்படி என்னைக்கைவிட்டவனைக் ∴ கண்டுசீறுமிடத்து என்னை நீங்கவிடாதே கொள்;

௧. (அ) "வடபால்விதேகந் தென்பால்விதேகங், கீழ்பால்விதேக மேல்பால் விதேகம், வடபாலிரேவதந் தென்பாலிரேவதம், வடபாற்பரதந் தென் பாற்பரத, மத்திமகண்டமென் றித்திற மென்ப, நாவலந் தீவி னவ கண்டப்பெயரே" சேந்தன்றிவாகரம். (ஆ) "நவத்தாரணி யாதிகட்கு" திருவானைக்காப். திருநீற்றுத்திருமதிற். ௮.

௨. இந்நூற்பக்கம் ௬௧௧: ௩-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "காவிபோற் கண்ணிக்குங் கண்ணியர்தோட் காளைக்கு, மாவிபோ லாடையுமொன் றானதே" நள கலிதொடர். ௮௪.

(பாடபேதம்) * தென்னவர்த தெளிந்த. † கூறியவள் கொண்டு, ‡ உலகத்தின்கண்ணே. || பிறர்மகளிரை, ÷ என்று கூறினாள். + முயங்குமேயென்று. × செல்லை யன்றியவர்கள்; செல்லையென்றவர்கள், ∴ கண்டு நீ சீறுமிடத்து.

*அஃது என்னெனில் நீ அக்காலத்து அவனை †மிகச்சீறில் யான் இறக்கும்படி நேரும் ‡ என்றுங் கூறினாள்; அங்ஙனங் கூறின அளவிலே ஞாயிறு படுகின்றமையைக் கண்டு பிரிந்தார்க்கு வருத்தந்தரும்படியாக மாந்தளிர்போலும் நிறத்தைக்கொண்ட மாலைக்குமுன்னாகிய இக்காலத்தே இவ்வூரின் மகளிர் தாம் (௧)தளிர்விரவின மாலைகளைச் சூடி ஆடவர்மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறவர்கள்; அவர்களைப்போல ஆச்சாமரந்தளிர்க்குங் காட்டிடைச்சென்றவர் || மீண்டுவரின் யாம் மனமகிழுவேம்; அதனாற்பெற்றதென்? அவர்வரக் கண்டிலேம் என்றுங் கூறினாள்; கூறி, யாம் தளிர்க்குமாறு எங்ஙனே என்பீராயின், என்றோளைத் தொழில் கொள்கின்ற அவன் செய்தற் பூவைப் புறவிதழொடித்து மாலை கட்டிச் சூடவும் வல்லன்; நெடிதாகிய மென்றோளிலே காமன்சிலையாகிய எழுதுகரும்பையெழுதவும்வல்லன்; இளமுலைமேல் தொய்யிற் குழம்பாற் கொடி எழுதவும்வல்லன்; இவையொழிந்து நீங்கியிருந்து மனம் வேட்கையடக்கியிருக்குமிடத்துத் தன்கையில் வில்லைத் தொழில்கொள்ள வல்ல காமனை ஒக்கும்; அதுவன்றி, வேட்கை நிகழ்ந்து கூடுங்காலத்து ஆண்டு நிகழ்த்தும் நல்ல தொழில்கள் பலவற்றையும் வல்லன்; இவ்வாற்றான் என் மனந் தளிர்க்குமென்றுகூறினாள்; அங்ஙனங் கூறின அளவிலே மாலைக் காலம் வருகின்றதனைக் கண்டு அவனை நினையும் என்னுள்ளங் குவியுமாறு போல நெடிய கழியின் மலர்கள் குவிய, இரங்கும் என்னெஞ்சுபோலே கோவலர் குழலோசைதோன்ற, அலைவுபெற்றஎன்மொழிகள்போல(௨)வண்டுகளின்(௩)செவ்வழிப்பாட்டு அடங்க, கெட்டுப்போன என் அழகுபோலப் பகற்

௧. (அ) "தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழு மலர்க், காமரு குவளைக் கழுநீர்மாமலர்ப், பைந்தளிர்ப்படலை" சிலப் ௪:௩௯-௪௧.(ஆ) "முறி மிடை படலை மாலை" சீவக. ௪௮௩, ௧௮௮௯. (இ) "பைந் தளிர்ப்படலை" பெருங்.(௩) ௨௭: ௧௪. (ஈ)"கொய்தளிர்த் தண்படலை" (உ) இது படலை மாலை எனவும் இலை மாலை எனவும் வழங்கும்.

௨. (அ)"செவ்வழிப் பண்ணிற் சிறைவண்டரற்றுந், தடந்தாழ் வயலொடு" சிலப். ௧௧: ௮௮-௮௯.(ஆ) "பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான் மறைந்தனனே,..........துறந்தார்நாட் டுளதாங்கொன், மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை" சிலப். ௭: ௪௨.

௩. (அ) "இருள்வரச், சீறியாழ் செவ்வழி பண்ணி" (ஆ) "மாலை மருதம் பண்ணிக் காலைக், கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி, வரவெமர் மறந்தனர்" (புறம். ௧௪௯:௧-௨., ௧௪௯: ௨-௪) என்பவற்றால், செவ்வழிப் பண் மாலைக்குரித்தென்று கூறப்படுதலால் செவ்வழியாழிசைநிற்பவென்பதற்கு, யாழிற் செவ்வழிப்பண்ணை வாசிப்பஎன்றலுமாம். இஃது இரங்கற்பண்ணாதலின், சாயகிளவிக்கு உவமையாகக் கூறப்பட்டது;

(பிரதிபேதம்) * அதுவென்னெனில், † மிகச் சீறுமல் யானிறக்கும்படி,‡என்று கூறினன், || மீண்டுவரின் மனமகிழுவோம். அதனால்.

காலத்தின் ஒளி மழுங்க, கலக்கத்தோடேவந்த காலனைப்போலே என்மேலே மாலைக் காலமும் வந்தது; இனி எங்ஙனம் ஆற்றுவேனென்று கூறினாள்; கூறி, அம்மாலையை வரவிட்ட ஞாயிற்றை நோக்கி, சுடரே! யானென்னப் தொரு தன்மையின்றி யான் இவ்விடத்தே இராக் காலத்தாலே வருந்தும்படி நீ போனாய்; அருளுடையையல்லையாயிருந்தாய்; * இத்தன்மையால் நீவாழ்வா யாக என்று கூறினாள்; கூறி, இவ்விரவால் இறந்துபட்டேனாயினும் நீங்கின் றுயிருந்ததென்று கருதி, மிகுகின்ற நீரையுடைய உலகத்துள் உறைகின்ற கேள்வருளரல்லாராயின், (க)தங்கணவர்மேலுள்ள வேட்கையோடே இறந்து படும் மாட்சிமைப்பட்ட மனத்தைப்பெற்றவர்கள் குற்றமில்லாத சுவர்க்கத்தே சென்று அவர்கள் நுகர விரும்பியவற்றைத் தாம் விரும்பியபடியே பெறுதல் மெய்யென்று நூல்கள் கூறியவென்னின் யானும் அங்ஙனம் அவன்மேல் விருப்பத்தோடே உயிர்போய் அவனைப் பெற்று எவ்விடத்தும் புகழுடையே னாவேன்; இனி † வருத்தமின்று; என்றுங்கூறினாள்; கூறி (உ) "முற்பகற் செய் தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் கண்டு விடும்" என்றுகூறிய பழமொழி உளதாகலின், அவ்வாறே நீரில் அலர்ந்த நீலமென்று அவர் புகழ அவர்க்கு அந்நாளிற் பெரியவருத்தத்தைச்செய்த என்கண்கள் இப்பொழுது பீரலர் போலப் பெரியவாகப் பசந்தன; ‡ அதனையும் என் வருத்தத்தையுங் கண்டும் அருளின்மையின் அவனை எனக்குக் காட்டாமல் இவ்வூர் நின்று அலர் தூற்று கிற்கும்; இனி இவ்(ங)வுய்யா விடும்பையிடத்து உயிர்களைக் காத்தற்கு யான்

இஃது இரங்கற்பண்ணென்பது (இ) "பையுணல்லிபாழ் செவ்வழி பிறப்ப" அகம். ஙகஎ: கஉ என்பதனாலும் (ஈ) இக்குறிப்பில் முதலாவதற்கு,'மாலைக்காலம் வந்தவளவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணாகிய செவ்வழியென்னும் பண்ணிலே வாசிக்கும் பரிசுபண்ணி' என்று எழுதியிருக்கும் உரையாலும் அறியலாகும்.

க. 'அதுவன்றிப் புகழ்வேண்டியும் கணவனொடு செத்தார் சுவர்க்கம் புகுவரென்னும் உரைகேட்டு அதுவேட்கையானும் சாம்; அப்பரிசன்றி அன்பினானும் சாம்' என்பது இறை. சூ. க. உரை.

உ. (அ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். ஙகக. (ஆ) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன் கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" சிலப். உக: ங-ச. (இ) "முற்பகற்செய்யிற் பிற்பகல் விளையும்" கொன்றைவேந்தன். (ஈ) "முற்பகற் செய்வினை பிற்பக லுறுநரின்" பெருங். (க) ருச: உருக. (உ) "முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே" கந்த. இரண்டாநாட்சூர. ஙகரு.

ங. உய்யா இடும்பை - பிழையாமைக்குக் காரணமான துன்பம்; கலி. கஙக:கஅ. கடக்க முடியாததுன்பம்; குறள். ஙகங. பரி. ஒழியாததுன் பம்; பு-வெ. உழிஞை. உரு. போக்க முடியாத துன்பம்; சிலப். எ: அ.

(பிரதிபேதம்) * இத்தன்மையான நீ, † வருத்தமென்றென்றுங். ‡ இதனையும் வருத்தத்தையும்.

*அஃது என்னெனில் நீ அக்காலத்து அவனை †மிகச்சீறில் யான் இறக்கும்படி நேரும் ‡ என்றுங் கூறினாள்; அங்ஙனங் கூறின அளவிலே ஞாயிறு படுகின்ற மையைக் கண்டு பிரிந்தார்க்கு வருத்தந்தரும்படியாக மரத்தளிர் போலும் நிறத்தைக்கொண்ட மாலைக்குமுன்னாகிய இக்காலத்தே இவ்வூரின் மகளிர் தாம் (க)தளிர்விரவின மாலைகளைச் சூடி ஆடவர்மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறுவர்கள்; அவர்களைப்போல ஆச்சாமரந்தளிர்க்குங் காட்டிடைச்சென்றவர் || மீண்டுவரின் யாம் மனமகிழுவேம்; அதனாற்பெற்றதென்? அவர்வரக் கண்டிலேம் என்றுங் கூறினாள்; கூறி, யாம் தளிர்க்குமாறு எங்ஙனே என்பீராயின், என்றோளைத் தொழில் கொள்கின்ற அவன் செய்தற் பூவைப் புறவிதழொடித்து மாலை கட்டிச் சூடவும் வல்லன்; நெடிதாகிய மென்றோளிலே காமன்சிலையாகிய எழுதுகரும்பை எழுதவும்வல்லன்; இளமுலைமேல் தொய்யிற் குழம்பாற் கொடி எழுதவும்வல்லன்; இவையொழிந்து நீங்கியிருந்து மனம் வேட்கையடக்கியிருக்குமிடத்துத் தன்கையில் வில்லைத் தொழில்கொள்ள வல்ல காமனை ஒக்கும்; அதுவன்றி, வேட்கை நிகழ்ந்து கூடுங்காலத்து ஆண்டு நிகழ்த்தும் நல்ல தொழில்கள் பலவற்றையும் வல்லவன்; இவ்வாற்றான் என் மனந் தளிர்க்குமென்றுகூறினாள்; அங்ஙனங் கூறின அளவிலே மாலைக் காலம் வருகின்றதனைக் கண்டு அவனை நினைபும் என்னுள்ளங் குவியுமாறு போல நெடிய கழியின் மலர்கள் குவிய, இரங்கும் என்னெஞ்சுபோலே கோவலர் குழலோசைதோன்ற, அலைவுபெற்றஎன் மொழிகள்போல(உ)வண்டுகளின்(ங)செவ்வழிப்பாட்டு அடங்க, கெட்டுப்போன என் அழகுபோலப் பகற்

---

க. (அ) "தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழு மலர்க், காமரு குவளைக் கழுநீர்மாமலர்ப், பைந்தளிர்ப்படலை" சிலப். ௪:ங௯-௪௧. (ஆ) "முறி மிடை படலை மாலை" சீவக. ௪அங, ௧அ௯. (இ) "பைந்தளிர்ப்படலை" பெருங். (ங.) உஎ: ௧௪. (ஈ) "கொப்பதளிர்த் தண்படலை" (உ) இது படலை மாலை எனவும் இலை மாலை எனவும் வழங்கும்.

உ. (அ) "செவ்வழிப் பண்ணிற் சிறைவண்டரற்றுந், தடந்தாழ் வயலொடு" சிலப். ௧௧:அஅ-அ௯. (ஆ) "பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான் மறைந்தனனே,............துறந்தார்நாட் டுளதாங்கொன், மறவையாயென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை" சிலப். எ: ௪உ.

ங. (அ) "இருள்வரச், சீறியாழ் செவ்வழி பண்ணி" (ஆ) "மாலை மருதம் பண்ணிக் காலைக், கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி, வரவெமர் மறந்தனர்" (புறம். ௧௪௯:௧-உ., ௧௪௧: உ-௪) என்பவற்றால், செவ்வழிப் பண் மாலைக்குரித்தென்று கூறப்படுதலால் செவ்வழியாழிசைநிற்ப வென்பதற்கு, யாழிற் செவ்வழிப்பண்ணை வாசிப்பஎன்றலுமாம். இஃது இரங்கற்பண்ணாதலின், சாயகிளவிக்கு உவமையாகக் கூறப்பட்டது;

(பிரதிபேதம்) * அதுவென்னெனில், † மிகச் சீறாமல் யானிறக்கும்படி,‡என்று கூறினாள், || மீண்டுவரின் மனமகிழுவோம். அதனால்.

காலத்தின் ஒளி மழுங்க, கலக்கத்தோடேவந்த காலனைப்போலே என்மேலே மாலைக் காலமும் வந்தது; இனி எங்ஙனம் ஆற்றுவேனென்று கூறினாள்; கூறி, அம்மாலையை வரவிட்ட ஞாயிற்றை நோக்கி, சுடரே! யானென்பதொரு தன்மையின்றி யான் இவ்விடத்தே இராக் காலத்தாலே வருந்தும்படி நீ போனாய்; அருளுடையையல்லையாயிருந்தாய்; * இத்தன்மையால் நீவாழ்வாயாக என்று கூறினாள்; கூறி, இவ்விரவால் இறந்துபட்டேனாயினும் நீங்கின்றுயிருந்ததென்று கருதி, மிகுகின்ற நீரையுடைய உலகத்துள் உறைகின்ற கேள்வருளரல்லாராயின், (௧)தங்கணவர்மேலுள்ள வேட்கையோடே இறந்துபடும் மாட்சிமைப்பட்ட மனத்தைப்பெற்றவர்கள் குற்றமில்லாத சுவர்க்கத்தே சென்று அவர்கள் நுகர விரும்பியவற்றைத் தாம் விரும்பியபடியே பெறுதல் மெய்யென்று நூல்கள் கூறியவென்னின் யானும் அங்ஙனம் அவன்மேல் விருப்பத்தோடே உயிர்போய் அவனைப் பெற்று எவ்விடத்தும் புகழுடையேனாவேன்; இனி † வருத்தமின்று; என்றுங்கூறினாள்; கூறி (௨) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் கண்டு விடும்" என்றுகூறிய பழமொழி உளதாகலின், அவ்வாறே நீரில் அலர்ந்த நீலமென்று அவர் புகழ அவர்க்கு அந்நாளிற் பெரியவருத்தத்தைச்செய்த என்கண்கள் இப்பொழுது பீரலர் போலப் பெரியவாகப் பசந்தன; ‡ அதனையும் என் வருத்தத்தையுங் கண்டும் அருளின்மையின் அவனை எனக்குக் காட்டாமல் இவ்வூர் நின்று அலர் தூற்றுநிற்கும்; இனி இவ்(௩)வுய்யா விடும்பையிடத்து உயிர்களைக் காத்தற்கு யான்

இஃது இரங்கற்பண்ணென்பது (இ) "பையுணல்லியாழ் செவ்வழி பிறப்ப" அகம். ௩௧௪: ௧௨ என்பதனாலும் (ஈ) இக்குறிப்பில் முதலாவதற்கு, 'மாலைக்காலம் வந்தவளவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணாகிய செவ்வழியென்னும் பண்ணிலே வாசிக்கும் பரிசுபண்ணி' என்று எழுதியிருக்கும் உரையாலும் அறியலாகும்.

௧. 'அதுவன்றிப் புகழ்வேண்டியும் கணவனொடு செத்தார் சுவர்க்கம் புகுவரென்னும் உரைகேட்டு அதுவேட்கையானும் சாம்; அப்பரிசன்றி அன்பினானும் சாம்' என்பது இறை. சூ. ௧. உரை.

௨. (அ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். ௩௧௯. (ஆ) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" சிலப். ௨௧: ௩-௪. (இ) "முற்பகற்செய்யிற் பிற்பகல் விளையும்" கொன்றைவேந்தன். (ஈ) "முற்பகற் செய்வினை பிற்பக லுறுநரின்" பெருங். (௧) ௫௬: ௨௫௧. (உ) "முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே" கந்த. இரண்டாநாட்சூர. ௩௧௫.

௩. உய்யா இடும்பை - பிழையாமைக்குக் காரணமான துன்பம்; கலி. ௧௩௯:௧௮. கடக்க முடியாததுன்பம்; குறள். ௩௧௩. பரி. ஒழியாததுன்பம்; பு-வெ. உழிஞை. ௨௫. போக்க முடியாத துன்பம்; சிலப். ௭: ௮.

(பிரதிபேதம்) * இத்தன்மையான நீ, † வருத்தமொன்றென்றங். ‡ இதனையும் வருத்தத்தையும்.

அரசனே என்று கருதித் தன்னுயிரைப் பாதுகாக்குமாறு போல உலகத்துப் (க)பெரிய உயிர்களெல்லாம் தழீஇப்பாதுகாக்கும் இம்மன்னனும் எனக்கினிய உயிரை ஒப்பானைக் காட்டி என்னுயிரைச் சிறிதொன்றுங் காவாதிருக்கின்ற தன்மை என்னபயனைக் கருதியோ*வென்றுங் கூறினளென்று கூறும்படியாக நிலைபெற்றகாமநோயாலே†அங்ஙனம் மயக்கங்கொண்ட மனத்தையுடையவள் பலமலைகளைக் கடந்துபோனவன் வரைவொடுவந்து பணிந்து தன்னடியைச் சேர்கையினாலே பாண்டியனை உறவாக அவன் மனத்தைத் தெளிவித்த தேயத்திலுள்ளவர் இன்பமுற்று வாழுமாறுபோல அவனால் இழந்த நலத்தை ‡இனிய அகமகிழ்ச்சியோடு எய்தினள்; இஃதென்னவியப்போஎனக் கண்டார் கொண்டு கூறிற்றாக உரைக்க. எ - று.

'சென்றசேட்பட்ட தென்னெஞ்சு' என்னுந் துணையும் கூறத்தகாதன கூறலின் மடனிறந்தவாறும் 'நெடுமென்றோள்' 'நீரலர் நீலம்' 'இளமுலை' என்பனவற்றான் மிகுதியிறந்தவாறும் 'வழிபட் டிரக்குவேன் வந்தேன்' என் (பதனால்)வருத்தமிறந்தவாறும் 'யாண்டுமுடையே னிசை' என்பதனால் வியவாமையின் மருட்கையிறந்தவாறும் உணர்க.

இது கண்டார்க்கு ||அவளாக்கங்கண்டு மருட்கை பிறந்தது.

நெய்தனெறித்தல் முதலியன (உ)திருவினாற் காமக்குறிப்புப்பிறந்த ஒப்பு; இவை குடிப்பிறப்பினை அறிவித்துக் காமக் குறிப்பினை நிகழ்த்தலின்.

இஃது ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டு. (உகூ)

(கசச.) நன்னுதால் காணாய் நினையா நெடிதுயிரா
வென்னுற்றாள் கொல்லோ விஃதொத்தி புன்மா
ணருகதருந் தன்னுணுக் கைவிட் டிருகதருங்
கண்ணீர் துடையாக் கவிழ்ந்து நிலனோக்கி
ரு. யன்ன விடும்பை பலசெய்து தன்னை
யின்னவுவார்க் கேதில சொல்லிக் கனவுபோற்
றெருளு மருளு மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ சென்று;

க. "பெரியத னாவி பெரிது" பழமொழி. க.

உ. "நெய்தனெறிக்கவும்............றோளாள் பவ னென்பது திருவினாற் காமக்குறிப்புப் பிறந்தவாறு; என்னை? இவையன வல்லனுதல் செல்வக்குடிப்பிறந்தாரை அறிவிக்குமாகலின்; அது காமக்குறிப்பினை நிகழ்த்துமென்பது. இது தலைமகட்கும் ஒக்கும்" என்பது தொல். மெய்ப். சூ. உகூ. பேராசிரியருரையிலும் காணப் படுகின்றது.

(பிரதிபேதம்) * என்று கூறினள், † இங்ஙனம், ‡ இனியமகிட்சி, || அவளாக்கம் பிறந்தது மருட்கை,

௯ எல்லாநீ, என்னணங் குற்றனை யார்நின் னிதுசெய்தார்
நின்னுற்ற வல்ல லுரையென வென்னை
வினவுவீர் தேற்றெனக் கேண்மி னொருவன்
குரற்கூந்தா லென்னுற்ற வெவ்வ நினக்கியா
னுரைப்பனைத் தங்கிற்றெ னின்னுயி ரென்று
மருவூட்டி மாறி யதற்கொண் டெனக்கு
மருவுழிப் பட்டதென் னெஞ்சு;
௧௪ எங்குந் தெரிந்தது கொள்வே னவனுள் வழி;

௧௭ பொங்கிரு முந்நீ ரகமெல்லா நோக்கினை
திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயா
லெங்கே ளிதனகத் துள்வழிக் காட்டீமோ
காட்டீயா யாயிற் கதநாய் கொளுவுவேன்
வேட்டுவ ருள்வழிச் செப்புவே னாட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த
வென்னல்ல றீரா யெனின்;

௨௪ என்றாங்கே, உண்ணின்ற வெவ்வ முரைப்ப மதியொடு
வெண்மழை போடிப் புகுதி சிறிதென்னைக்
கண்ணோடி யைப்போறி நீ;

௨௭ நீடிலைத் தாழைத் துவர்மணற் கானலு
ளோடுவே னோடி யொளிப்பேன் பொழிறொறு
நாடுவேன் கள்வன் கரந்திருக்கற் பாலன்கொ
லாய்பூ வடும்பி னலர்கொண் டுதுக்காணெங்
கோதை புனைந்த வழி;

௩௨ உதுக்காண், சாஅய் மலர்காட்டிச் சால்பிலான் யாமாடும்
பாவைகொண் டோடி யுழி;

௩௪ உதுக்கா[ணங்](ண்) தொய்யில் பொறித்த வழி;

௩௫ உதுக்காண், தையா றேறெனத் தேற்றி யறனில்லான்
பைய முயங்கி யுழி;

௩௭ அளியவென் னுள்ளத் துயவுத்தே ரூர்ந்து
விளியாநோய் செய்திறந்த வன்பி லவனைத்

தெளிய விசும்பினு ஞாலத் தகத்தும்
வளியே யெதிர்போம் பலகதிர் ஞாயிற்
றொளியுள் வழியெல்லாஞ் சென்று முனிபெம்மை
யுண்மை நலனுண் டொளித்தானைக் காட்டீமோ
காட்டாயேன், மண்ணக மெல்லா மொருங்கு சுடுவேனென்
கண்ணீ ரழலாற் றெளித்து;

சரு பேணான், துறந்தானை நாடி யிடம்விடா யாயிற்
பிறங்கிரு முந்நீர் வெறுமணை லாகப்
புறங்காலிற் போக விறைப்பேன் முயலி
னறம்புணை யாகலு முண்டு;

சசு துறந்தானை, நாடித் தருகிற்பா யாயி னினக்கொன்று
பாடுவே னென்னோ யுரைத்து;

ருக புல்லிய கேளிர் புணரும் பொழுதுணரே
னெல்லியா கெல்லையென் றுங்கே பகன்முனிவ
னெல்லிய காலை யிராமுனிவன் யானுற்ற
வல்லல் களைவா ரிலேன்;

ருரு ஓலுகடலே, தெற்றெனக்கண் ணுள்ளேதோன்றவிமையெடுத்துப்
பற்றுவே னென்றியான் விழிக்குங்கா னற்றுமென்
னெஞ்சத்து ளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யு மறனில் லவன்;

ருசு ஓலுகடலே, ஊர்தலைக் கொண்டு கனலுங் கடுந்தீயு
ணீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ
வீரமில் கேள்வ னுறீஇய காமத்தீ
நீருட் புகினுஞ் சுடும்;

சுஉ ஓலுகடலே, எற்றமி லாட்டியென் னேமுற்று ளென்றிந்நோ
யுற்றறியா தாரோ நகுக நயந்தாங்கே
யிற்று வறியின் முயங்கலேன் மற்றென்னை
யற்றத்திட் டாற்றறுத்தான் மார்பு;

ஆங்கு;

௬அ கடலொடு புலம்புவோள் கலங்களுர் தீரக்
கெடலருங் காதலர் துணைதரப் பிணிநீங்கி
யறனறிந் தொழுகு மங்க ளாளைத்
திறனிலா ரெடுத்த தீமொழி யெல்லா
நல்லவை யுட்படக் கெட்டாங்
கில்லா கின்றவ ளாய்நுதற் பசப்பே.

(க)இதுவுமது. இதற்கும் (உ)அவ்வுரை கூறிக்கொள்க.

இதன் பொருள்.

நன்னுதால் காண்டை நினையா நெடிதுயிரா
வென்னுற்றாள் கொல்லோ (ங)விஃதொத்தி (௪)பன்மா
ணாகுதருந் தன்னாணுக் கைவிட் டிருதரும்
கண்ணீர் துடையாக் கவிழ்ந்து நிலநோக்கி
ரு யன்ன விடும்பை பலசெய்து தன்னை
வினவுவார்க் கேதில சொல்லிக் கனவுபோற்
றெருளு மருளு மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ சென்று

எ - து: நன்றாகிய நுதலினையுடையாய்! இவளொருத்தி (ரு)தனக்குரிய நாணினைக் கைவிட்டுத் * தன் மனத்தே ஒன்றை நினைத்து நெட்டுயிர்ப்புக் கொண்டு வீழ்கின்ற கண்ணீரைத் துடைத்துப் பிறரை நோக்காது நிலத்தைக் கவிழ்ந்து நோக்கித் தன்னை நீ உற்றது என்னென்பார்க்குக் கனவின்கண் வாய்வெருவிக் கூறுவாரைப்போலே உத்தரமல்லாதன சில சொல்லிப் பல காலும் நகுதலைச் செய்யும்; இங்ஙனந் தெளிவும் மயக்கமுமாய் மயங்கி வேறும் அத்தன்மையவாகிய இடும்பைகள் பலவற்றையுந் தன்னிடத்தே உண்டாகக் கொண்டு வருகின்றவள் என்ன துன்பமுற்றாளோதான்? இவளைக் காண்பா

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந் திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. கரு. நச்.

உ. இந்நூற் பக்கம் அஅரு-அஅசு. பார்க்க.

ங. "இஃதொத்தி" கலி. கசங: அ; "இஃதொத்தன்" (கலி. கச: அ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. இந்நூற்பக்கம் உஅஅ: ங-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. "சிறந்ததன் ஞாணும்" (கலி. கசரு: க0.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * தான் மனத்தே.

யாக; யாஞ் சென்று இவள்கூறும் வார்த்தைகளைக் கேட்டலைச் *செய்யாமோ என்றாரென்று கூறினள். எ - று.

கூ எல்லாநீ, என்னணங் குற்றனை யார்நின் னிதுசெய்தார்
நின்னுற்ற வல்ல லுரையென வென்னை
வினவுவீர் தெற்றெனக் கேண்மி னொருவன்
(க)†குரற்கூந்தா லென்னுற்ற வெவ்வ நினக்கியா
னுரைப்பனைத் தங்கிற்றெ னின்னுயி ரென்று
மருவூட்டி மாறி யதற்கொண் டெனக்கு
மருவழிப் பட்டதென் ‡னெஞ்சு
கரு எங்குந் தெரிந்தது கொள்வே னவனுள் வழி

எ - து. அங்ஙனம் ||கூறியவள், கேட்கக் கடவேமென்று நம்மிலே கூறி வந்து, ஏடீ! நீ என்ன வருத்தமுற்றாய்? யார்தான் நினக்கு இவ்வருத்தஞ் செய்தார்? நினக்கு உற்ற வருத்தத்தை எங்கட்கு உரையென்று சொல்லி என்னைக் கேட்கின்றவர்களே! அது வந்தவாற்றை என்பக்கலிலே தெளியக் கேண்மின்; ஒருவன் கொத்தான கூந்தலையுடையாய்! எனக்கு உற்ற வருத்தத்தை யான் நினக்கு வந்துஉரைக்குமளவும் என் இன்னுயிர் போகாமற் றங்கிற்றுக்காண் என்று இங்ஙனம் தன்னோடு யான் மருவுதலை உறுத்தி அம்மருவுதலைஅவன்மாறிப் போனஅக்காலந்தொடங்கி என்னெஞ்சு ÷எனக்கு அவன் மருவின இடத்தே அகப்பட்டு நின்றுவிட்டது; இனி அவனுள்ள இடமெங்குந் தேடித் தெரிந்து என்னெஞ்சினைக் கூட்டிக்கொள்வேன் என்று கூறினள். எ - று.

உரைப்பனை, திசைச்சொல்.

கஎ (உ)பொங்கிரு முந்நீ ரகமெல்லா ×நோக்கினை

---

க. "குரற் கூந்தல்" கலி. எஉ: உO, கூஈ: உஉ; என இந்நூலுள் வருதல் காண்க; குரலென்பது கூந்தற்கு அடையாய் வருதலன்றியும் மயிர் (கூந்தல்) என்னும் பொருட்டாயும், "குரனுற்றத் துற்ற, முடியுதிர் பூந்தாது" (கலி. அஅ: க - உ.) என்புழி வருதல் காண்க.

உ. (அ)கலக்கம்-மனங்கலங்குதல்; மேலே கலங்கி மொழிதலென்பது ஒருகாற் சொல்லின்கண் வந்து பெயர்வது; இது மனங்கலங்கி நிற்கு நிலையென்றுகூறி, "பொங்கிரு முந்நீர் ........ தீராயெனின்" என்னும் பகுதியைப் பெருந்திணைக்குரிய கலக்கமென்னு மெய்ப்பாட்டுக்கு (தொல். மெய்ப்.கூ. உஉ. 'இன்பத்தை') மேற்கோள்காட்டினர் இளம்பூரணர்(ஆ) நச்சினார்க்கினியர் "பொங்கிரு முந்நீர்.........காட்டீமோ"

(பிரதிபேதம்) * செய்யாமோவென்று கூறினள, † குரற் கூந்தல், ‡ நெஞ்சு தெரிந்தது, || கூறியவர், ÷ எனக்குத்தான் மருவின × நோக்குபு.

சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு

எ - து: ஏறுகிய எருமையையேறுகின்ற கூற்றுவனுடைய நெஞ்சை (க) வடிம்பாலே பிளந்துபோகட்டுச் சினத்தோடே அரிய உயிரை வாங்கின அஞ்ஞான்றை, இறைவன் இத்தன்மையையுடையவன்கொலென்று கூறும் படியாகக் காற்றின் விசைபோல ஓடிவந்த விரைந்த ஏறுகிய காரியதனைப் பலரும்வந்து சேர்தலையுடைய களத்தே வலியடங்கத் தழுவி வருத்தி அதன்மேலே தோன்றிநின்ற பொதுவனது அழகைப் பாராய்; அதனைக் கண்டு என் நெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள் எ - று.

சசு இருளை *யிலைதொன்று கண்டை யிலைதொத்தன்
(உ)புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கள்
மறுப்போற் பொருந்தி யவன்

எ - து: மற்றைப் புள்ளிகள் செறிந்த †வலியையுடைய வெள்ளேற்றினது அழகையுடைய பக்கத்தே திங்களிற் கிடக்கின்ற மறுப்போலே பொருந்திக் கிடந்தவன் ஆட்டினத்தையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால் இவ னொருத்தன்காண்; இளையோளே! ‡ இலைதொரு வலியைப் பாராயெனக் காட்டினாள். எ - று.

ருo ஓவா வேகமோ டொருத்துத்தன் மேற்சென்ற
||சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
(ந)காயாம்பூங் கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த(ச)கூந்தற் குதிரையை

க. வடிம்பு - கால் விளிம்பு; (அ) "மா வுடற்றிய வடிம்பு," (ஆ) கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்" (இ) "ஆழி வடிம்பலம்ப நின்றானும்" (ஈ)"வேலைவடிம்பலம்ப நின்றான்" (உ) "கடல்வடிம்பலம்ப நின்ற கைதவன்" என வருவனநோக்குக.

உ. (அ) "புல்லினத் தார்க்கும்" (ஆ) "புல்லினத் தாயர் மகளிரோடு" (இ) "புல்லினத் தாயர் மகனேன்" (ஈ) "புல்லினத் தாயனை" கலி. கOஎ: உ; ககக: ரு; ககந: எ, அ.

ந. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை" கலி. கOஅ: கO.

ச. "கூந்த லென்னும் பெயரொடு கூந்தல், லெரிசினங் கொன்றோய்" (பரி. ந: நக-நஉ.) என்பதும் 'கூந்தன்மா என்றகண்டார்சொல்லும் வடிவொடு வந்த கேசியது கனல்கின்ற சினத்தை யழித்தோய்;

(பிரதிபேதம்) * இருதொன்று, † வலியையுடையவேற்றினதழகை, ‡ இலைதொரு. || சேஎசெவி,

(க) திங்களுட் *டோன்றி யிருந்த குறுமுயா
லெங்கே ளிதனகத் †துள்வழிக் காட்டீமோ
காட்டீயா யாயிற் கதநாய் கொளுவுவேன்
வேட்டுவ ருள்வழிச் செப்புவே னாட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த
வென்னல்லல் தீரா யெனின்
உச என்றாங்கே, உண்ணின்ற வெவ்வ முரைப்ப மதியொடு
வெண்மழை யோடிப் புகுதி சிறிதென்னைக்
கண்ணோடி னாய்போறி நீ

எ - து: அங்ஙனங் கூறி, அந்திக்காலத்தே கையறவெய்தி உரைத்தவள் இனி ‡இக்காலத்துத் தன்னைத்தேடுதல் அரிதென்று கருதி, திங்களைக் கண்டு இதனோடு செறிந்த முயல் தேடித் தருமெனக் கருதி, மிக்கு எழுகின்ற கரிதாகிய கடல்சூழ்ந்த உலகமெல்லாம் பார்த்துத் திங்களினுள்ளே விளங்கி இருந்த குறிய முயலே! அறிவு வேறுபட்ட என்னுடைய நெஞ்சை யான் தேடிக் கூட்டிக்கொள்ளக் கருதின வருத்தத்தை நீ அதனைக் கூட்டித் தீராயாயின் யான் வாங்கிக் கொள்ளும்படி இவ்வுலகத்தில் எங்கேள்வன் இருக்கின்ற இடத்தைக் காட்டுவாய்; அவனிருக்கின்ற இடத்தைக் காட்டாயாயின், நினக்குப் பகையாகிய கோபத்தையுடைய நாயை நின்னிடத்தே கொளுத்துவேன்; அதுவன்றி வேட்டுவருள்ள இடத்தேசென்று ஒருமுயல் உண்டென்று கூறுவேன்; அதுவேயன்றி நீ அரணாக உறைகின்ற திங்களோடே நின்னை அலைத்துவிழுங்கும்படி மதிக்குப் பகையாகிய பாம்பைச்செலுத்துவேனென்று அவ்வந்திக்காலஞ் செல்கின்ற காலத்தே தன்னெஞ்சினின்ற வருத்தத்தைச்

என்னும் அடிகளை ஞாயிறுமுதல் நெஞ்சீறாக் கூறியவையேயன்றி, பிறவும் கூறுவனபோலவுங் கேட்பனபோலவும் கூறுமா றமையுமென்பதற்கு மேற்கோள் காட்டினர்; தொல். செய். சூ. உ௦௦.

க. (அ) முயல் என்பது முயால் என விளியேற்றதற்கு, "திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயால்" என்பது மேற்கோள்; தொல். விளி மரபு. சூ, ௩௪. ந். இ-வி. சூ. உகச. (ஆ) இந்திரன் புத்தன்மேலுள்ள அன்பினாற் சந்திரமண்டிலத்து முயல்பொறித்தானென்பதுபவுத்தநூற் றுணிபு. (இ) "குடைப்புறந் துஞ்சு மிகல - னிடைப்பொலிந்த, திங்களிற் றோன்றும் குறுமுயல்போற் செம்பியன், செங்கண் சிவந்த களத்து" கள. (ஈ) "குறுமுய லொளிக்கு மரணினை, யிரவிரு ளகற்று நிலவினை" சிலப். சு: ௩எ. உரை மேற்கோள். (உ) "நிலவு பொழியு முயற்கூடு" உத்தரகோச. பாயிரம். உரு.

(பிரதிபேதம்) * தோன்றவிருந்த, † உள்வழி காட்டீமோ, காட்டீயாயின், ‡ இக்காலத்தென்றும்.

சொல்ல, அது வெண்மேகத்தே மறைந்ததனைக்கண்டு, நீ மதியோடே வெண் மேகத்தே ஓடிச் சென்று புகாநின்றாய்; ஆகையினாலே சிறிதென்னைக் கண்ணோட்டஞ் செய்து நீ என்னைத் தேடிப்போகின்றாய்போலே இராநின்றா யென்று கூறினாள். எ - று.

உஎ நீடிலைத் தாழைத் (க)துவர்மணற் கானலு
ளோடுவே ளோடி யொளிப்பேன் பொழிலொரு
நாடுவேன் கள்வன் கரந்திருக்கற் பாலன்கொ
லாய்பூ (உ)*வடும்பி னலர்கொண் டுதுக்காணெங்
கோதை புனைந்த வழி

---

க. "துவர்மணல்" என்ற தொடர் (கலி. கூஉ. உ) வந்துள்ளது.

உ. அடும்பென்பது அடம்பென்றும் சிலவிடத்து வழங்கப்படுகிறது; இது நெய்தனிலத்துக்கு உரியதொரு வார்கொடி; இக்கொடியிற் செந்நிற முடையதும் கருநிறமுடையது முள; இதன் இலை கவடுடைமையால் அதற்கு மானடி உவமையாகக் கூறப்படுகிறது. இதன் பூ வெண்ணிற முடையதென்று செய்யுளால் அறியப்படுகிறது. அப்பூவுக்குத் தார் மணியும் கொட்டமும் உவமையாக்கப்பட்டுள்ளன. இதனை மகளிர் கொழுதி விளையாடுவதும் வேறு மலரொடு விரவக்கட்டிச் சூடுவது முண்டு. இதன்கொடியைத்தலைவன் தேருருளை துணிப்பதாகக்கூறுவது பெருவழக்கு; இவையும் பிறவும் (அ) "கருங்கொடி யடம்பு" கல். கக: கச. (ஆ) "ஓங்குதிரை விரைபுதன், கரையமலடும்பளித் தாஅங்கு" (இ) "அடும்பிவ ரணியெக்கர்" கலி. கஉஎ, உ0-உக, கங்உ: கக. (ஈ) "அடும்பாரணி கானற் சேர்ப்ப" (உ) "எக்க, ரடும்பலருஞ் சேர்ப்ப" பழ. கககூ, உ0உ. (ஊ) "முதுநீ ரடைகரை, யொண்பன் மலர கவட்டிலை யடும்பின், செங்கேழ் மென்கொடி யாழியறுப்ப, வினமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ" அகம். அ0: எ-க0. (எ) "ஏர்கொடிப் பா சடும்பு" ஐங். க0க. (ஏ) "ஆய்கொடிப் பாசடும்பு" அகம். கூகூ0: கச. (ஐ) "கான லடம்பின் கவட்டிலைகண் - மானின், குளம்பேய்க்கு நன்றுடன்" நள. கலிதொடர். அஅ. (ஒ) "மானடியன்ன கவட்டிலை யடும்பின், றார்மணி யன்ன வெண்பூக் கொழுதி, யொண்டொடி மகளிர் வண்ட லயரும்" குறுந். உசகூ. (ஓ) "கொட்டக மலர்ந்த கொழுங் கொடி யடும்பி, னற்றுறை யணிநீர்ச் சேர்ப்ப" தொல். அகத். சூ. உச. இளம். மேற். (ஔ) "இருங்கழி பொருதவீர வெண்மணன், மாக் கொடி யடும்பின் மாயித ழலரி, கூந்தன் மகளிர் கோதைக் கூட்டுங், காமர் கொண்கன்" நற். கசரு: க-ச. (ஃ) "அடும்பி னாய்மலர் விரைஇ

(பிரதிபேதம்) * அடம்பின்.

௩௨ உதுக்காண், சாஅய் மலர்காட்டிச் சால்பிலான் யாமாடும்
(௧)பாவைகொண் டோடி யுழி
௩௪ உதுக்கா[ணாங்](ண்),தொய்யில் பொறித்த வழி
௩௫ உதுக்காண், தையா றேறெனத் தேற்றி யறனில்லான்
பைய முயங்கி யுழி
௩௭ அளியவென் னுள்ளத் துயவுத்தே றோர்ந்து
விளியாநோய் செய்திறந்த வன்பி லவனைத்
தெளிய விசும்பினு ஞாலத் தகத்தும்
வளியே யெதிர்போம் பலகதிர் ஞாயிற்
றொளியுள் வழியெல்லாஞ் சென்று முனிபெம்மை
யுண்மை நலனுண் டொளித்தானைக் காட்டீமோ
காட்டாயேல், மண்ணக மெல்லா மொருங்கு சுடுவேனென்
கண்ணீ ரழலாற் றொளித்து
௪௫ பேணான், துறந்தானை நாடு மிடம்விடா யாயிற்
(௨)பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப்

---

நெய்த, னெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்த, லோரை மகளிர்" குறுந். ௪௦௧. (அ) "அடும்புகொடி துமிய வாழி போழ்ந்தவர், நெடுந் தே ரின்னொலி யிரவுந் தோன்றும்" நற். ௩௩௮: ௨ - ௩. (ஆ) "படிவ மகளிர் கொடிகொய் தழித்த, பொம்ம லடும்பின்" நற். ௨௭௨: ௨ - ௩. என்பவற்றால் அறியலாகும். குந்தாணியென்று வழங்கும் கொடிக்கு இங்கே கூறிய இயல்புகளெல்லாம் இருத்தலால் இஃது அக்கொடி போலும்; அதிற் செம்பூவும் காணப்படுகிறது. (இ) "சுள்ளி சுனை நீலஞ் சோபா லிகைசெயலை, யள்ளி யளகத்தின் மேலாய்ந்து" (திணைமாலை. ௨) என்புழி, சோபாலிகை யென்பதற்கு, அடுப்பலர் என்று கையெழுத்துப் பிரதிகளிற் பொருள் காணப்படுதலால், சோபாலிகையென்பதும் இதன் பெயரேயாம். இதற்கு அடுப்பென்று காணப்படும் பொருள் தவறென்று தோற்றுகிறது.

௧. (அ) "வரிப்பந்து கொண்டொளித்தாய்" பு - வெ. பாடாண். ௫௦. (ஆ) "முற்றிலைப் பந்தைக் கழங்கைக்கொண் டோடினை" திருவேங் கடத்தந்தாதி. ௯௭. என வருபவை இதுபோல்வன.

௨. கலக்கமென்பது சொல்லத்தகாதன சொல்லுதலென்று கூறி அதற்கு, "பிறங்கிரு முந்நீர்........யாகலுமுண்டு" என்பதனை (தொல். மெய்ப். சூ. ௨௨) மேற்கோள்காட்டினர் பேராசிரியரும்; (இ-வி. சூ. ௫௮௦)

புறங்காலிற் போக விறைப்பேன் *முயலி
(௧)னறம்புணை யாகலு முண்டு

௪௯ துறந்தானை, நாடித் தருகிற்பா ரியாரி னினக்கொன்று
பாடுவே †னென்னோ யுரைத்து

௫௧ (௨)புல்லிய கேளிர் புணரும் பொழுதுணரே
‡னொல்லியா கெல்லையென் றாங்கே பகன்||முனிவ
னெல்லிய காலை யிரா ÷முனிவன் யானுற்ற
வல்லல் களைவா ரிலேன் [துப்

௫௫ ஓஒகடலே, தெற்றெனக்(௩)கண்ணுள்ளே தோன்றவிமையெடுத்
பற்றுவே னென்றியான் விழிக்குங்கா னற்றுமென்
னெஞ்சத்து ளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யு (௪)மறனில் லவன்

௫௯ ஓஒகடலே, (௫)ஊர்தலைக் கொண்டு கனலுங் கடுந்தீயு
ணீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ

---

இ - வி. நூலாரும் அவ்வாறே கூறினர். தலைவியின் கலக்கங் கூறு தற்கு, "பிறங்கிரு முந்நீர்............விறைப்பேன்" என்பதனை (சீவக. ௧௯௮ உரையில்) மேற்கோள்காட்டினர் இவ்வுரையாசிரியரும்.

௧. (அ) அறநெறியே வெற்றிக்கு முதலென்றும் (ஆ) அறம் பொருந்தாத முயற்சி பயன்படாது தொலையுமென்றும் (இ) அறந்தலை நின்றார்க்கழி வில்லையென்றும் (ஈ) அறம் வெல்லும் பாவந்தோற்கு மென்றும் (உ) அறத்தினாலன்றி வெல்லலரி தென்றும் பெரியோர் கூறுவன இங்கே அறிதற்பாலன.

௨. அழிவில் கூட்டத்திற்குரிய பொருள்களுள் பொழுது மறுப்பாதலென் பதற்கு, "புல்லிய கேளிர் ..........களைவா ரிலேன்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௨௪. 'தெய்வமஞ்சல்' இளம்.

௩. (அ) "கனவினாற், றோன்றினை னாகத் தொடுத்தேன்மன் யான்றன் னைப், பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய, கையுளே மாய்ந்தான் கரந்து" கலி. ௧௪௨: ௩௩ - ௩௬. (ஆ) "துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா, னெஞ்சத்த ராவர் விரைந்து" குறள். ௧௨௧௮.

௪. (அ)"அறனிலி"(ஆ)"அறனில்லா வன்பிலி" கலி. ௪௨:௪, ௮௬:௩௩-௩௪.

௫. (அ) "ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு, நீருட் குளித்து முயலாகு- நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ்

(பிறந்பேசம்) * முயலில், † என்னோவுரைத்து. ‡ அல்லியாகெல்லை. || ÷ முனிவேன்.

வீரமில் கேள்வ னுறீஇய காமத்தீ
நீருட் புகினுஞ் சுடும்

சுரு ஓலகடலே, (அ)எற்றமி லாட்டியென் னேமுற்ற னென்றிந்நோ
யுற்றறியா தாரோ நகுக நயந்தாங்கே
யிற்று வறியின் முயங்கலேன் மற்றென்னை
யற்றத்திட் (உ)டாற்றறுத்தான் *மார்பு

எ - து: அங்ஙனங் கூறி, அது கரிய மேகத்தே மறைந்து விடுதலின் அதனை நோக்கித் தேடுமாறு அதற்குக் கூறக் கருதி, அக்கள்வனுனவன் மறைந்திருக்கக்கடவனே என்று †காட்டும்படி, யான் நீண்ட இலையினையுடைய தாழை நிற்கின்ற சிவந்த மணலையுடைய கானலிற் பொழில்கடோறும் ஓடிச்

சுடும்" நாலடி. கூo. (ஆ)"அளிக்கு மெய்யுயிர் கான்றழ லஞ்சினள், குளிக்கு நீருங் கொதித்தெழக் கூசமால், விளிக்கும் வேலையை வெங்கணனங்கனை, யொளிக்க லாமிடம் யாதெனவுன்னுமால்" கம்ப.சூர்ப்ப. எக. (இ)"உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற், கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத், தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினற், கள்ளினுங் கொடியது காமத் தீயதே" கந்த. மாயைநீங்கு. கக. (ஈ)"கடலின் மூழ்கினுங் குன்றிடை யொளிப்பினுங் காம, முடல் விராயுயிர் சுடுவதே போலும்" விநாயக. இந்திரன் சாபம். நச.

க. (அ) எற்றமென்னு முரிச்சொல் துணிவாகிய குறிப்புணர்த்தற்கு, "எற்றமி லாட்டியென் னேமுற்றாள்" என்பது மேற்கோள்; தொல். உரிச். சூ. ருகூ.நச். நன். உரி. சூ. கஅ. இரா. மேற்கூறிய இடங்களிலெல்லாம் இச்சொல், ஏற்றமென்று பதிப்பிக்கப்பெற் றிருத்தல் பிழையே. அது பிழையென்பதும் எற்றமென்றலே திருத்தமென்பதும் தொல்காப்பியச் சூத்திரத்தை உய்த்துணர்வார்க்குப் புலனும். இதனை இங்கே காட்டப்படும் சான்றோர்கள் ஆட்சியும் வலியுறுத்தும். (ஆ) "எற்றிவரைந்தானை" கலி. கஎசு: கக. (இ) "எற்ற முடைமை யெதிர்கோளி னறிப" முதுமொழி. கரு. (ஈ)"எற்றமி லாள ராகி" திருவானைக்காப். நைமிசப். உக.

உ. (அ) "அரும்பிடி நம்மை யாற்றறுத் தன்றால்" (பெருங். (க) ருஉ: எ) என்பதும் (ஆ) "ஆற்றறுப்பார்" (குறள். எகஅ)என்பதன் விசேடவுரையில், 'ஆற்றென்பது முதனிலைத் தொழிற்பெயர்; முன்னெல்லாம் வலியராவார் போன்று ஒழிதலின் வலியறுப்பாரென்றார்' என்று பரிமேலழகர் எழுதியிருப்பதும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * மார்பு. ஆங்கு கடலொடு..........பசப்பே. எ-து: அங்ஙனம் கூறி அது கரிய, † காட்டக்கருதி யான்.

சென்று பார்ப்பேன்; அங்ஙனஞ் சென்று பார்த்துக் காணமையின், ஓடிச் சென்று அவனை ஒளித்திருந்து காணக் கடவேனென்று கருதி ஒளித்திருப் பேன்; நீயும் இங்ஙனம் ஒளித்திருந்தே தேடென்று கூறினாள்; அங்ஙனங் கூறிப் பின்பு அவனிருக்கும் இடங்களுங் கூறக்கருதி, பூவினையுடைய * அடும்பின்மலரைக்கொண்டு எமக்குத்தருங் கோதையைக் கட்டின இடத்தை உவ்விடத்தே பாராய்; அமைதியில்லாதான் யாங் கொண்டு விளையாடுஞ் (க) சாய்ப்பாவையையும் மலர்களையுங் கொண்டுவந்து நமக்குக் காட்டி யான் தன்பின்னே செல்லும்படி அவற்றைக் †கொண்டோடிய இடத்தை உவ்விடத்தே பாராய்; எமக்குத் தானெழுதுந் தொய்யிலை எழுதிய அவ்விடத்தை உவ்விடத் தேபாராய்; மனத்தில் அறனில்லாதவன், ஐயால்! நின்னைப் பிரியேன்; நீ தெளியென்று தெளிவித்துப் பின்னர் மெல்ல முயங்கிய அவ்விடத்தை உவ் விடத்தே பாராயென்று கூறினாள்; அங்ஙனங் கூறின அளவிலே அம்முயல் ‡கருமேகத்து மறைந்தேபோதலின் அதனைக் கைவிட்டு இடையே தன்மேல் வந்துற்ற வளியை நோக்கி, வளியாகிய தெய்வமே! [நீ] திங்களின் ஒளி போலன்றி விசும்பிடத்தும் ஞாலத்திடத்தும் பரக்கும் பல கதிர்களையுடைய ஞாயிற்றின் ஒளியுள்ள இடமெல்லாஞ்சென்று நாடுதற்குரிய நீ ||உயவுத்தேரை ஊர்ந்துவந்து தன்னால் அளிக்கத்தக்க என்னுள்ளத்திடத்தே கெடாத காம நோயைச்செய்து என்னைக் கைவிட்டுப்போன அன்பிலாதவனை அந்நோய் நீங்கி என்மனந் தெளியும்படியாக எதிர்ப்படுவாய்; அங்ஙனம் எதிர்ப்பட்டு வேட்கை மிகுதியான் எம்முடைய இயற்கை நலத்தை நுகர்ந்து பின்பு எம்மை ஒரு காரணமின்றி வெறுத்து அவ்வியற்கை நலத்தைக்கொண்டு இம்மண் ணகத்தே ஒளித்தவனைக் கொண்டுவந்து காட்டுவாய்; காட்டாயாகில் என்கண் ணீரைத் தெளித்து அதன்கண் எழுகின்ற அழலாலே நின் மேனியெல்லாஞ் சேரச் சுடுவேனென்றுங் கூறினாள்; அங்ஙனங் கூறி அதனைப் பின்னர்க் காணமையின், தான் அவனைத்தேடக்கருதி, கடலை நோக்கி, மிக்கு வருகின்ற கரிய கடற்றெய்வமே! என்னைப் பாதுகாவாதுத்துறந்தவனை யான் தேடிக் காணுமிடத்தை நீ விட்டுப் போகாமல் ஏறுவாயாயின் நின்னிடமெல்லாம் வெறுமணலாம்படி என் காற்புறத்தாலே நின்னுடைய நீரெல்லாம் போம்படி இறைப்பேன்; அது முடியுமோவெனின், அங்ஙனம் ÷முயலின் அதற்கு அறக்கடவுள் உதவியாதலு முண்டாயிருக்குமென்றுங் கூறினாள்; அங்ஙனங் கூறி, ஓதம் வடிந்ததனைக் கண்டு என்னைக் கைவிட்டுப்போனவனை நீ தேடிக் கொண்டுவந்து தருவையாயின் அதற்குக் கைம்மாறாக என்னுயைச்சொல்லி

க. சாய்ப்பாவை - தண்டான் கோரையைக் கிழித்துச்செய்த பொம்மை; (அ) "சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ" (கலி. ௭௯: ௭) என்பதும் அதனுரையும் (ஆ) "பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே" (ஐங். ௬௨) என்பதும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * அடம்பின், † கொண்டாடியவவிற்றை உவ்விடத்தே, ‡ கருத்தமேகத்து, || உரவுத்தேரை, ÷ முயலுவேன் அதற்குக் கடவுள்.

நினக்கு ஒரு பாட்டினைப் பாடுவேனென்றுங் கூறினள்; அங்ஙனங் கூறிப் பாடுகின்றவள் என்னைக் கூடின கேளிர் வந்து கூடுங் காலம் இரவோ பகலோ என்றறியேன்; ஆதலால் என்னை வருத்தும் பகற்பொழுதுபோய் இராப் பொழுதாவதாக என்று கருதிப் பகற் பொழுதை வெறுப்பேன்; அதுபோய் இராவான காலத்திடத்து அவ்விராக்காலத்தை * அப்பொழுதேவெறுப்பேன்; அப்படியே ஓஒ! யான் உற்ற வருத்தத்தைக் கடலே! நின்னை ஒழியப் போக்கு வாயை வேறுடையேனல்லேனென்றுங் † கூறினள்; அங்ஙனங் கூறிப் பின்னும், கடலே! அறனில்லாதவன் தெளிய என் கண்ணுள்ளேவந்து தோன்றுகையினாலே கூடின இமையை விழித்துப் பிடித்துக் கொள்வே னென்று கருதி யான்விழிக்கப் பின்னையும் ஓடிப்போய் என்னெஞ்சத்துள்ளே மறைந்துநின்று அப்பொழுதே யான் துயிலாத காமநோயைத் தாராநிற்கும்; கடலே! ஊரையெல்லாந் தனக்குள்ளாக்கிக்கொண்டு காந்துங் கடியநெருப்புத் தன்னை அவிக்குநீரைச் சொரியச் (க) ‡சினமாறும்; அதுபோலன்றி அருளில் லாத என்கேள்வன் என்னை உறுத்திய இந்தக் காமமாகிய நெருப்புத் தனக்குப் பகையாகிய நீருள்ளே புகினும்மோ வேமாறு சுடாநிற்கும்; கடலே! தன் மனத்து ஒரு துணிவில்லாதாள் என்ன பித்தேறினளென்று கூறி, இக்காம நோயுற்றறியாதவர்களோ என்னை இகழ்ந்து சிரிக்க; இக்காமநோய்க்குத் துணை யாவதோர் ஆளறுதியிலே பின்னை என்னை யிட்டுவைத்து என்வலியை அறுத் தவன் ||மார்பினை யான் விரும்பின அக்காலத்தே பின்பு இத்தன்மைத்தாக வருத்துமென்று அறியின் முயங்கேன்; அக்காலத்து அறிகலேன்காணென்றுங் ÷ கூறினள். எ - று.

ஓஒ, வருத்தக்குறிப்பு. ஓகாரம், பிரிநிலை. ஆற்றல், ஆற்றென விகார மாயிற்று.

ஆங்கு, அசை.

சுஅ கடலொடு புலம்புவோள் கலங்கஞர் தீரக்
கெடலருங் காதலர் துனைதரப் பிணிநீங்கி
யறனறிந் தொழுகு மங்க ணாளனைத்
(உ)திறனிலா ரெடுத்த தீமொழி யெல்லா
நல்லவை யுட்படக் கெட்டாங்
கில்லா கின்றவ ளாய்நுதற் பசப்பே

க. சினம் - வெம்மை. இந்நூற்பக்கம் க0உ: ங - ஆம் குறிப்புப் பார்க்க.

உ. "ஐயற் காங்கிளங் கோளரி யறிவிலா னுரைத்த, பொய்யிற் போம்படி போக்கினன் கடிதினிற் புக்கான்" கம்ப. பிரமாத்திர. எ0.

(பிரதிபேதம்) * அப்பொழுதென்றுவெறுப்பேன். † கூறினள். ஓஒ, வருத்தக்குறிப்பு. அங்ஙனங் கூறி, ‡ சினமாறுவதுபோலன்றி, || மார்பினையனை யான், ÷ கூறினள். ஓகாரம் பிரிநிலை. ஆற்றல் விகாரம் 'ஆங்கசை, அங்ஙனம் கடலோடே,

எ - து: அங்ஙனங் கடலோடே வருந்திக் கூறினவளுடைய மனங்கலங்கும் வருத்தந்தீரும்படி அவள் காதலர் விரைந்து வரக் கெடுதலரிய காமநோய் நீங்கி, இவளுடைய அழகிய நுதலிற் பசப்பு, அறநெறியறிந்து நடக்கும் கண்ணோட்டமுடையவனை அத்திறமில்லாதார் உண்டாக்கிச்சொன்ன * தீயமொழிகளெல்லாம் நன்மக்கள் இருக்கின்ற அவைக்குள்ளே ஆராய்ச்சிப்பட அவை கெட்டாற் போல, இல்லையாகாநின்றது; என்னவியப்போவெனக் கண்டார் கொண்டு கூறிற்றாக உரைக்க. எ - று.

இது கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

† 'மருவழிப் பட்டதென் னெஞ்சு' என்னுந் துணையுங் கூறத்தகாதனை கூறலின் மடனிறந்தவாறும் 'அறம்புணை யாகலு முண்டு' எனத் தன்னுடம்பும் உயிரும் வருந்திய நிலைதோன்றக் கூறுதலாற் கலக்கமெய்தியவாறுங் காண்க.

இஃது 'எங்குந் தெரிந்தது கொள்வோ னவனுள் வழி' என ஐஞ்சீரான் ஒன்றும் ‡ 'உதுக்காண், தொய்யில் பொறித்த வழி' என ஓரடியான் ஒன்றும் வருதலிற் கலிவெண்பாவின் வேறுபட்ட பாநிலைவகைக் கொச்சகம். (௨௭)

(௧௪௫.) துணையுநர் விழைதக்க சிறப்பும்போற் கண்டார்க்கு
நனவினு ணுதவாது நள்ளிருள் வேறாகுங்
கனவி னிலையின்றாற் காம மொருத்தி
யுயிர்க்கு முசாஅ முலம்வரு நோவாள்
கயல்புரை யுண்க ணரிப்ப வரிவாரப்
பெயல்சேர் மதிபோல வாண்முகந் தோன்றப்
பலவொலி கூந்தலாள் பண்பெல்லாந் துய்த்துத்
துறந்தானை யுள்ளி யழூஉ மவனை
மறந்தாள்போ லாலி நகூஉ மருளுஞ்
சிறந்ததன் னாணு நலனு நினையாது
காம முனைஇயா ளலந்தாளென் றெனைக்காண
நகான்மின் கூறுவேன் மாக்காள் மிகாஅது
மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலு
நீள்சுரம் போகியார் வல்லைவந் தளித்தலு
மூழ்செய் திரவும் பகலும்போல் வேறாகி
வீழ்வார்கட் டோன்றுந் தடுமாற்ற ஞாலத்துள்
வாழ்வார்கட் கெல்லாம் வரும்;
தாழ்பு, துறந்து தொடிநெகிழ்த் தான் போகிய கான
மிறந்தெரி நையாமற் பாஅய் முழங்கி

(பிரதிபேதம்) * தீமொழிகள். † அருவழிப், ‡ உதுக்காணந் தொய்யில்.

வறந்தென்னை செய்தியோ வானஞ் சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் கனைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து;

உ௯ நமக்கெவன் போலுமோ வூரீ ரெமக்குமெம
கண்பாயல் கொண்டுள்ளாக் காத லவன்செய்த
பண்பு தரவந்த வென்றொடர் நோய்வேது
கொள்வது போலுங் கடும்பகன் ஞாயிறே
யெல்லாக் கதிரும் பரப்பிப் பகலொடு
செல்லாது நின்றீயல் வேண்டுவ னீசெல்லிற்
புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக்
கொல்லாது போத லரிதா லதனொடியான்
செல்லாது நிற்ற லிலேன்;

௩௨ ஒல்லையெங், காதலர்க் கொண்டு கடலூர்ந்து காலைநாட
போதரிற் காண்குவேன் மன்றே பனியொடு
மாலைப் பகைதாங்கி யான்;

௩௫ இனியனெனன், றேம்படுப்பன் ஞாயி றினி;

௩௬ ஒள்ளிளை யோடத் துறந்து துயர்செய்த
கள்வன்பாற் பட்டன் றொளித்தென்னை யுள்ளிப்
பெருங்கடல் புல்லெனக் கானல் புலம்ப
விருங்கழி நெய்த லிதழ்பொதிந்து தோன்ற
விரிந்திலங்கு வெண்ணிலா வீசும் பொழுதினென்
யான்வேண் டொருவனென் னல்ல லுறீஇயான்
றான்வேண்டு பவரோடு துஞ்சுங்கொ றுஞ்சாது
வானு நிலனுந் திசையுந் துழாவுமென்
னுறைப் படர்மிக்க நெஞ்சு;

௪௫ ஊரவர்க் கெல்லாம் பெருநகை யாகியென்
னுருயி ரெஞ்சு மனங்குநீ சென்றீ
நிலவுமிழ் வான்றிங்கா ளாய்தொடி கொட்ப
வளிபுற மாறி யருளான் றுறந்தவக்
காதலன் செய்த கலக்குறுநோய்க் கேதிலா
ரெல்லாருந் தேற்றுர் மருந்து;

ருக வினைக்கொண்டென காமநோய் நீக்கிய வூரீ
ரெனைத்தானு மெள்ளினு மெள்ளலன் கேள்வ
னினைப்பினுங் கண்ணுள்ளே தோன்று மனைத்தற்கே
யேமரா தேமரா வாறு;

ருரு கனையிருள் வானங் கடன்முகந் தென்மே
லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரா
லிறையிறை பொத்திற்றுத் தீ;

ருகூ எனப்பாடி;

நோயுடை நெஞ்சத் தெறியா வினைபேங்கி
யாவரு மெங்கேள்வற் காணீரோ வென்பவட்
கார்வுற்ற பூசற் கறம்போல வெய்தந்தார்
பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு
மாயவன் மார்பிற் றிருப்போல் பவள்சேர
ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
னாயிழை யுற்ற துயர்.

(க)இதுவுமது. /இதற்கும் (உ) முன்னர்க் கூறிய உரையைக் கூறிக் கொள்க.

இதன் பொருள்.

துனையுநர் விழைதக்க சிறப்புப்போற் கண்டார்க்கு
*நனவினு ளுதவாது நள்ளிருள் வேறாகுங்
(ந)கனவி னிலையின்றாற் காம மொருத்தி
யுயிர்க்கு †முசாஅ முலம்வரு மோவாள்
கயல்புரை யுண்க ணரிப்ப வரிவாரப்
பெயல்சேர் மதிபோல வாண்முகந் தோன்றப்

---

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந்திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. கந. நச்.

உ. இந்நூற்பக்கம் அஅரு-அஅசு. பார்க்க.

ந. "கனவினு ளெய்திய செல்வத்தனையதே" (கலி. சுஅ: உச) என்பதும் அதன்குறிப்பும் "கண்படைகொண் டமர்வாழ்வும் பொய்யாகிக்கனவு கண்ட கதையாயிற்றே" கந்த. காமதகன. கoக. என்பதும் நோக்குக.

(பிரதிபேதம்) * நனவினுதவாது. † உயாஅம்.

வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான்* றின்னன்கொன்
மாயோனென் றாட்கிற்றென் னெஞ்சு

எ - து: கஞ்சன்முதலியோர் வரவிட்ட கழுத்தின்மயிரினையுடைய குதிரையை வாயைப் பிளந்துபோகட்டுக் கையால் † அடித்த அஞ்ஞான்றைக் கண்ணன் இத்தன்மையன்கொல்லென்று கூறும்படியாக ஒழியாத கோபத்தோடே வெவ்விதாய்த் தன்மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு அதன்வலியை மீட்டுத் தழுவும், காயாம் பூவாற் செய்த கண்ணியையுடைய பொதுவன் அழகைப்பாராய்; ‡அவனைக் கண்டு என்னெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள். எ - று.

ஆங்கு, (௧)இரும்புலித் தொழுதியும் (௨)பெருங்களிற் றினமு
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
(௩)தாதெரு மன்றத் தயர்வர் (௪)தழூஉ
(௫)கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ||ஆய மகள்

---

கூந்தலையுடைய மாவைக் கூந்தலென்றும் பெயரினையுடையவடிவைப் பெயரென்றுங்கூறினார்; ஆகுபெயரான். கேசி-குதிரையாய்வந்துபொரு தானோரசுரன், இப்பெயர் கேசமென்னும் வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன்பொருண்மைபற்றிக் கூந்தலென்றார்' என்னும் அதனுரையும்; "கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்" (முத்தொள்.) "கூந்தல்வாய் கீண்டானை" (நாலாயிர. இயற்பா. ௨-ஆம் திருவந்தாதி. ௩௩.) என்பவைகளும் ஈண்டு அறிதற் பாலன.

௧. சிறுத்தைப்புலியும்உண்மையின்வேங்கைப்புலியை இரும்புலியென்றார்.
௨. பன்றியும் களிறெனப்படுமாதலின் யானையைப் பெருங்களிறென்றார்.
௩. "தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" சிலப். ௧௭. 'மாயவன்றன்'
௪. "தழூஉப் பிணையூஉ, மன்றுதொறு நின்ற குரவை" மது. ௧௬௪-௫௬௫. என்பவாதலால், குரவைக்குத் தழூஉவென்று ஒரு பெயரிட்டார்.
௫. "கொல்லேற்று ...............ஆயமகள்", "வளியா வறியா..........ஆயமகடோள்" என்னும் பகுதிகள் ஏறுதழுவினாற்கு உரியளிவளெனவைத்த கைக்கிளைகட்கு மேற்கோள்; தொல். அகத். ௫. ௩௩. நச்.

(பிரதிபேதம்) * இன்னகொன், † அடித்தவன்றைஞான்றை. ‡ அதனை, || ஆயர்மகள்.

பலவொலி கூந்தலா ளின்பெல்லாந் துய்த்துத்
துறந்தானை யுள்ளி யழூஉ மவனை
மறந்தாள்போ லாலி நகூஉ (௧)மருளுஞ்
(௨)சிறந்ததன் னாணு நலனு நினையாது
காம முனைஇயா * ளலந்தாளென் (௩)றெனைக்காண
நகான்மின் கூறுவேன் மாக்காண் † மிகாஅது
மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர (௪)நீத்தலு
நீள்சுரம் போகியார் ‡ வல்லைவந் தளித்தலு
மூழ்செய் (௫)திரவும் பகலும்போல் வேறாகி
வீழ்வார்கட் டோன்றுந் தடுமாற்ற ஞாலத்துள்
வாழ்வார்கட் கெல்லாம் || வரும்

எ - து: மக்கள் விரைந்தனராய் விரும்புதல் தக்கதொரு தலைமைபோலே இருக்கின்ற காமமானது நள்ளிருட்கண்ணே கண்டவர்களுக்கு கனவின்கண் உதவாதே வேறுபட்டுப் போங் கனவினும் நிலைபெறுதல் இன்றாயிருந்தது ; எவ்வாறெனிற் பலவாய்த் ÷ தழைகின்ற கூந்தலையுடையாளாகிய ஒருத்தி தன் குணங்களை யெல்லாம் நுகர்ந்து தன்னைக் கைவிட்டவனை நினைத்து வெட்

௧. மருளுமென்பதற்கு உரை காணப்படவில்லை.

௨. (அ) "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" தொல். களவு. சூ. உ௨. (ஆ) "உயிரினுஞ் சிறந்ததன், னாணுயாது மிலளாகி" கலி. ௧௪௭: அ - ௯. (இ) "நாணுக் குறைவில வணங்கைமற் றென்மரும்" பரி. ௧௨: ௪௯. (ஈ) "நாண்முதற் பாசந் தட்ப" (உ)"நாண்சுமக் கலாத நங்கை" சீவக. ௪௭௦, உ௪௪௩. (ஊ)"எண்பாலோவா நாண்........தம், பூண்பாலாகக் காண்பவர் நல்லார்" கம்ப. கைகேயி. ௩௯.

௩. "யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார், யாம்பட்ட தாம்படா வாறு" குறள். ௧௧௪௦.

௪. (அ) "புணர்வும் பிரிவு, நன்பக லமையமு மிரவும் போல, வேறுவே றியல வாகி மாறெதிர்ந், துளவென வுணர்ந்தனை யாயின்" என்பது ஒப்புநோக்கற்பாலது ; அகம். ௩௨௭: ௧-௪.

௫. "உவக்காணெங் காதலர்" என்பதன் உரையில் (குறள் ௧௧௮௫) 'அவர் செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின் செலவும் வரவும்போல்வ தறிந்து வைத்து அறியாதாய் போல நீ சொல்லுகின்ற தென்னை யென்பதாம்' என்று பரிமேலழகர் எழுதியிருப்பது ஈண்டறிதற்பாலது.

(பிரதிபேதம்) * அல்லாந்தாள், † மிகா அது தோள்சேர்ந்தமர்ந்தார்த்துயர், ‡ வல்லைவந்தளித்தலும், || வரும் தாழபு எ - து: மக்கள், ÷ தழைக்கின்ற.

யிர்ப்புக் கொள்ளும்; அவனோடு கூடமொற்றினைச் சிலபோதுசொலவும்; நெஞ்சு * சுழலும்; பெய்கின்ற மழையைச் சேர்ந்த மதிபோலே தன்முகந் தோன்றும் படியாகக் கயலையொக்குந் தன்கண்களினின்றும் † அரித்துவிழுகின்ற நீர் முகத்தே வடியும்படி ஒழியாளாய் அழாநிற்கும்; அவனை மறந்தாளைப்போலே ஆர வாரித்து இடையே நகுவதுஞ் செய்யும்; ஆகையினாலே தனக்குச் சிறந்த நன் (க) நாணையும் ‡ மற்றுமுள்ள நன்மைக்குணங்களையும் நிலைபெறநினையாதே காம மொன்றையுமே (௨) நினைத்தவள் அலமந்தாளென்று இங்ஙனம் இகழ்ந்துகூறி, எல்லாருங்காணஎன்னைச்சிரியாதேகொள்ளும்; (௩) ஐயறிவினையுடையவர்களே! சுருக்க யான் அதன்றன்மை கூறுவேன்; கேண்மினென்று கூறுகின்றவள், மகளிர் தோளைச்சேர்ந்தஆடவர் அவர்கள்வருத்தம்மிகும்படி பிரிதலும் பின்னர் நீண்ட சுரத்தைப்போனவர்கள் விரையவந்து அருள்செய்தலுமாகிய இரண்டும் இரவும் பகலும் போலே முறைமைசெய்து வேறாய் ஒருவரை ஒருவர் விரும்பு வாரிடத்துத் தோன்றும்; இன்பம் நிலையில்லாமையான தடுமாற்றமா யிருக்குமது தனக்கேயன்றி உலகத்துக்கூடியிருந்து வாழ்வார்களுக்கெல்லாம் வருவதுஞ் செய்யுமென்று || அதன்றன்மை கூறினாள். எ - று.

---

க. "நாணுவரை நில்லாக் காமம்" அகம். ௨0அ: ௨0.

௨. மூளைதலென்பதற்கு நினைதலென்னும் பொருள் வேறெங்கும் காணப் படவில்லை.

௩. (அ) "மாவு மாக்களு மையறி வினவே" (ஆ) "மக்க டாமே யாறறி வுயிரே" தொல் மரபு. சூ. ௩௨, ௩௩. (இ) "அவைமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு, மிகைமக்க ளான்மதிக்கற் பால- நயமுணரார், கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும், வையார் வடித்தநூ லார்" நாலடி. ௧௬௩. (ஈ) "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்" (குறள் ௪௨0) என்பவைகளும் (உ) "தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ, ததன்பய மெய்திய வளவை மான" (பொருந. ௯௧. ௯௨) என் புழி, மாக்களென்பதற்கு, 'மக்களென்னாது மாக்களென்றார்; வீடு பேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின்' என்றும் (ஊ) "பொழு தளந் தறியும் பொய்யா மாக்கள்" (முல்லை.௫௫) என்புழி, மாக்களென் பதற்கு, 'அறிவில்லாதோர்' என்றும் (எ) "மூவறு பாடை மாக்களால்" (சீவக. ௯௩.) என்புழி, மாக்க ளென்பதற்கு, 'மிலேச்சராதலின் ஐயறி விற் குரிய மாக்களென்னும் பெயராற் கூறினார்' என்றும் (ஏ) "மைய லங் கோயின் மாக்கள்" (சீவக. ௧௨௭அ) என்புழி, மாக்களென்பதற்கு, 'மக்கட்குரிய மனனின்றி அறிவு கெட்டமையின், ஐயறிவுடையா ரென்று மாக்களென்றார்' என்றும் இவ்வுரை யாசிரியர் எழுதியிருக்கும் விளக்கங்களும் (ஐ) "கடவாமடிசீ" என்னுஞ் சூத்திரத்தின் விசேட வுரையில் 'கையறியா மாக்கட்கன்றி நூலியற்றும் அறிவினையுடைய

(பிரதிபேதம்) * மழலும், † மறித்து, ‡ மற்றுள்ள, || அதனது தன்மை கூறினாள். துறந்து.

கஅ தாழ்பு; துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கான
(க)மிறந்(உ)தெரி நையாமற் பாஅய் முழங்கி
வறந்தென்னை செய்தியோ வானஞ் சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் (௩)கனைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து

எ - து: அங்ஙனங் கூறி அவர் நக்கதனால் யாம் இங்ஙனமாயினே மென்று கருதி அழுகின்றவள் ஆண்டெழுந்த வெண்மேகத்தைநோக்கி, வானமே! நீ பெய்யாதே வறந்து என்னைகாரியஞ் செய்கின்றாய்? நின் இனத்தோடே கூடி என் கண்ணீராற் சிறந்த கடலிலே முகந்து பரந்து முழங்கி முன்னர் என்னிடத்தே தாழ்ந்து பின்னர் என்னைத் துறந்து * செருகுந் (௪)தொடியை உட்பட நெகிழ்த்தவன் போகிய கானத்தினை நெருப்பு மிக்குச் சுடாமற் செறிந்த துளியை வீசாயோ? வீசென்று மழையை நோக்கிக் கூறினாள். எ - று.

உ௩ நுமக்கெவன் போலுமோ வூரீ ரெமக்குமெங்
(ரு)கண்பாயல் கொண்டுள்ளாக் † காத லவன்செய்த

மக்கட்குப் பலகலைக்குரிசில் பவணந்தியென்னும் புலவர் பெருமான் புகழ்போல விளங்கி நிற்றலான் உலகமலையாமை யுள்ளிட்ட பத்தழ கோடும் பிறந்து நின்றது இச் சூத்திரமென்று உணர்க' என்று (நன். பத. சூ ௧௦.சங்கர.விருத்தி) காணப்படுவதும்(ஓ)"தக்கவின்ன தகாதன வின்னவென், றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள, மக்களும் விலங்கே" (கம்ப. வாலி. ககஉ) என்பதும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "வியப்பிறந் தன்றே" புறம். உகஎ: ௧. (ஆ) "இறப்பச் சிறிதென்றுது" (இ) "இறப்ப நினையுங்கால்" (ஈ) "இறப்பவே தீய செயினும்" நாலடி. கக; கஎ௪; உஉ௩. (உ) "இன்ப மிறந்ததே" சீவக. கஎ௦. (ஊ) "இறப்பப் புகழ்ந்தன்று" பு - வெ. கைக். ஆண். எ. என்பவற்றினும் இறத்தலென்பது மிகுதலென்ற பொருளில் வருதல் காண்க.

உ. (அ) "கோடெரி நைப்பவும்" பொரு. உ௩௪. (ஆ) "எரிகானனைப்ப" நற். கஎஎ: க. (இ) "ஒள்ளெரி நைப்ப" புறம். உ௪௦: க௦.

௩. (அ) "கனைதுளி" (ஆ) "கனைபெயற் றண்டுளி" கலி. க௪; எ; க௦: உஉ.

௪. இந்நூற்பக்கம் அ௪௦: க-ஆம் குறிப்பும் இச்செய்யுள் ௪எ-ஆம் அடியும் இங்கே அறிதற்பாலன.

ரு. (அ) "கண்பாயல் கொண்டு" (ஆ) "கண் பாயல் கொள" (இ) "கண் பாயல் பெற்றபோல்" கலி. எ௦: அ; அஎ: கக; ௩௩: ரு.

(பிரதிபேதம்) * நெருங்குந் தொடியை, † காதலவன் செய் பண்பு.

பண்பு தரவந்த வென்ஞெடர் நோய்(க)வேது
கொள்வது போலுங் (உ) கடும்பகன் ஞாயிறே
யெல்லாக் கதிருங் பரப்பிப் பகலொடு
செல்லாது *நின்றீயல் வேண்டுவ னீசெல்லிற்
(ங)புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக்
கொல்லாது போத லரிதா லதனொடியான்
செல்லாது நிற்ற லிலேன்

ஙஉ முல்லையெங், காதலர்க் கொண்டு கடலூர்ந்து காலைநாட்
போதரிற் (ச) காண்குவேன் மன்னோ பனியொடு
மாலைப் பகைதாங்கி †யான்
இனியனென், றேம்படுப்பன் ஞாயி றினி

எ-து: அங்ஙனங் கூறி, மீண்டும் அவ்வூரிலுள்ளாரை நோக்கி, ஊரிலுள்ளீர்! இக்கடும்பகல் எமக்கு எங்கண் (ரு) ணுறக்கத்தைக் கைக்கொண்டு எம்மை நினையாத காதலையுடையவன் என்னிடத்துச் செய்த குணங்கள் தருகையினாலே வந்த என்னுடைய இடையறாத நோயான் வருங் குளிரை ‡ வேதுகொள்வதுபோலே இராநின்றது; இது நுடக்கு என்போலே இருக்கின்றது ||கூறுமினென்றாள்; அங்ஙனங் கூறி, இங்ஙனம் வேதுகொண்டு என்னைக் காக்கும் ÷ கடும்பகல் ஞாயிறே! நீ எல்லாக் கதிர்களையும் பரப்பி இப்பகற் பொழுதோடே போகாது நிற்றலை விரும்பாநின்றேன்; அதற்குக் காரணம் என்னெனில், நீ போகிற் புற்கென்ற மயக்கத்தைத் தரும் மாலைக்காலம் இன்று வந்து என்னைக்கொல்லாமற்போத லரிது; அதனோடே யான் உயிர் பேர்காநிற்குந் தன்மையையுடையேனல்லேன்; ஆதலாற் × காணென்றாள்; என்று பின்னும் ஞாயிறே! நீ எங்காதலரை விரையக் கொண்டு கடன்மேலே வந்து நாட்காலையிலே இவ்வுலகிலே போதுவாயாயின், யான் என்னோயின் நடுக்கத்தோடே மாலையாகிய பகையையும் பொறுத்து, நின்னிடத்து அவன்

---

க. "வேதுகொண் டொற்றியே" கலிங்க. கடை. கரு.

உ. கடியென்னு முரிச்சொல் விளக்கமென்னுங் குறிப்புணர்த்தி வருதற்கு, "கடும்பகன் ஞாயிறு" என்பது நச். உரையிலும் "கடும்பகல்" என்பது சேனா. உரையிலும் மேற்கோள்; தொல். உரிச். சூ. அஎ.

ங. "புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல், வன்கண்ணதோ நின் றுணை" குறள். கஉஉஉ.

ச. 'காண்குவேன் கொல்லோ' என்று உரையிலுள்ளது.

ரு. இந்நூற்பக்கம் கஙசு: ங-ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * நின்றீதல் வேண்டுவேனீ செல்லிற், † யான். எ - து. அங்ஙனங் கூறி, ‡ வேதுகோள்வது போலே, || கூறுமினென்றாள். உம்மை யிசை நிறை. அங்ஙனங்கூறி, ÷ கடும்பகலையுடைய ஞாயிறே, × காணேனென்றாள்.

இனியன்; அவனை நீ துனித்திராதேகொள்ளென நெஞ்சினைப்பாதுகாப்பதுஞ் செய்வேன்; அங்ஙனம் பாதுகாத்துப் பின்னர் அவனைக் காண்பேன்கொல்லோ; என்று*கூறினாள். எ - று.

உம்மை, இசைநிறை. நின்றீயல், தொழிற்பெயர்த்திரி†சொல்.

௩௬ ஒள்வளை யோடத் துறந்து துயர்செய்த
கள்வன்பாற் பட்டன் றெளித்தென்னை யுள்ளிப்
பெருங்கடல் புல்லெனக் கானல் புலம்ப
விருங்கழி (௧)நெய்த லிதழ்பொதிந்து தோன்ற
விரிந்திலங்கு வெண்ணிலா வீசும் பொழுதினான்

௧. நெய்தலென்பது ஒரு நீர்ப்பூங்கொடி; இதனானே கடல் சார்ந்த நிலம் நெய்தனிலமெனப்பட்டதென்பார் ஒருசாரார். (தொல். அகத். சூ. ௫. இள. நச். நாற்கவி. அகத். சூ. ௬. உரைபார்க்க.) இக்கொடி திரண்ட தாளையும் பசிய இலையையும் நறுமணமுள்ள பூவையுமுடையது; இதன் இலை யானைக்கன்றின் காதிற்கும், இதன்முகிழ் மாணாக்கர்குடுமிக்கும், இதன் பூவிதழ் வேலுக்கும் உவமையாய் வந்துள்ளன. இதற்கு விடியற்காலத்தில் மலர்தலும் மாலைக்காலத்திற் குவிதலும் இயல்பாம். இம்மலரால் நெய்தனிலமகளிர் தழையும் மாலைமுதலியனவும் செய்தணிதலும் சிற்றில் முதலியவற்றுக்குப் புனைதலும் உண்டென்று பண்டைநூல்கள் கூறும். இம்மலரிற் கருநிறமுடைய சாதி கருநெய்தலென்றும் வெண்ணிறமுடையசாதிவெண்ணெய்தலென்றும் வழங்கப் பெறும். இவற்றுட் கருநெய்தற் பூவுக்கு நீலமணியும் அதனிதழுக்கு மகளிர் கண்ணும் உவமையாக வருகின்றன. மகளிர் கண்ணுக்கு இவ்விதழும் உவமையாம். (இந் நூற்பக்கம் ௮௯ : ௧ ஆம் குறிப்புப் பார்க்க.) இவையும் பிறவும் (அ) "கணைக்கா னெய்தல்" பெரும்பா. ௨௧௩; நற். ௧௩௮ : ௬; குறுந். ௯; அகம். ௩௬௦ : ௪. (ஆ) "சிறுபாசடைய நெய்தல்" நற். ௨௭ : ௧௧. (இ) "கமழ்நறு நெய்தல்" நற். ௨௮௩ : ௨. (ஈ) "நெய்தல், கட்கமழ்ந் தாணுத் துறைவற்கு" ஐங். ௧௫௧. (உ) "இரும்பிடி..........நெய்தலம் பாசடை புரைய மஞ்செவிப், பைதலங் குழவி தழீஇ" நற். ௪௭ : ௧ - ௪. (ஊ) "நெய்தன் முகிழ்த் துணைய வாங்குடுமி" சிறுபாஞ்ச. ௩௦. (எ) "நெய்த லிடையிடை வாளை பிறழ்வனபோ, லுதிலங் கெஃகி னவி ரொளிவா ளாயினவே" களவழி. ௩௩. (ஏ) "வைகறைக், கட்கமழ் நெய்த லூதி யெற்படக், கண்போன் மலர்ந்த காமர் சுனைமல, ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங், குன்று" முருகு. ௭௩-௭௭. (ஐ) "வைகறை மலரு நெய்தல் போலத், தகைபெரி துடைய காதலி கண்ணே" ஐங்குறு. ௧௭௮.

(பிரதிபேதம்) * கூறினாள் நின்றீயல், † சொல். இனியனென்றேம்பட்டன் றாயினி யொள்வளை.

யான்வேண் டொருவனென் னல்லலுழீஇயான்
றான்வேண்டு பவரோடு துஞ்சுங்கொ றுஞ்சாது
வானு நிலனுந் திசையுந் *துழாவுமென்
னைப் படர்மிக்க நெஞ்சு

---

(ஒ) "வள்ளிதழ் நெய்தல் கூம்ப..........புலம்பொடு வந்த புன்கண் மாலை" (ஓ) "நெய்தல் கூம்ப நிழல்குணக் கொழுக" நற். ௧௧௭ : ௩-௭ ; ௧௮௭ : ௧. (ஔ) "தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற், கடும்பகல் வருதி கையறு மாலை, கொடுங்கழி நெய்தலுங் கூம்பக், காலை வரினுங் களைஞரோ விலரே" ஐங். ௧௮௩. (ஃ) "நெய்த, லுண்டா துண்டு வண்டினந் துறப்ப,..........வந்தமாலை" அகம். ௩௬௦ : ௬ - ௯. (அஅ) "புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணே போற், றுன்ப முழவாய் துயிலப் பெறுதியா, லின்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள், வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ" சிலப். ௭ : ௩௩. (ஆஆ) "நெடுங்கா னெய்த, லம்பகை நெறித்தழை யணி பெறத்தை இ" நற். ௯௬ : ௭-௮. (இஇ) நெய்தற், பூவுட னெறிதரூஉத் தொடலை தைஇ" நற் ௧௩௮ : ௬-௭, (ஈஈ) "நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையா, ருடலகங் கொள்வோ ரின்மையி, றொடலைக் குற்ற சிலபூ வினரே" ஐங். ௧௮௭. (உஉ) "நெய்த, னெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்" குறுந். ௪௦௧. (ஊஊ) "ஒண்ணுதன் மகளிர்......... நெய்த, லகல்வரிச் சிறுமனை யணியுந் துறைவ" நற். ௨௮௩ : ௧ - ௩. (எஎ) "மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற், பாசடைப் பனிக்கழி" பதிற். ௩௦: ௨-௩. (ஏஏ)"மணிநிற நெய்தல்"ஐந்திணை யெழு. ௬௦.(ஐஐ) "கண்ணே ரொப்பின் கமழ்கறு நெய்தல்" நற் ௨௮௩ : ௨. என்பவற்றால் அறியலாகும். பிங்கல முதலிய நிகண்டுகளையும் உரைகளையும் நோக்க, கருநெய்தலும் நீலமும் ஒன்றே யென்ற ஐயமுறுமாயினும், (ஒஒ) "கட்கமழு நறுநெய்தல், வள்ளித ழவிழ்நீலம்" மது. ௨௮௦-௨௮௧. (ஓஓ) "பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்குந், தண்டுறை யூரன்" ஐங். ௨. என்பவற்றால் இவை வேறுவேறென்பது விளக்கமாகும். இங்கே கூறிய ஐங்குறுநூற்றுச் செய்யுளின் விசேடவுரையில், (ஔஔ) 'சிறப் புடைய கருங் குவளையுடனே சிறப்பில்லாத நெய்தல் நிகர்க்கும் ஊர னென்றது, குலமகளிருடனே பொதுமகளிர் இகலுமூரன்' என்று எழுதியிருப்பதும் உற்றுநோக்கற் பாலது. (ஃஃ) "சிறுமா னெய்தல்" புறம். ௬௧ : ௨. எனவருவதும் நோக்குக. (அஅஅ) "நீணறு நெய்தல்" குறிஞ்சி. ௭௯. (ஆஆஆ) "தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ" ஐங். ௧௮௦. என வெண்ணெய்தலும் சிலவிடத்துக் கூறப்படுகிறது. வெண் ணெய்தலும் ஆம்பலும்ஒன்றாயின் அதுவும்பயின்று வருவதென்னலாம்.

(பிரதிபேதம்) *துழவு மென்.

எ - து: அங்ஙனம் ஞாயிற்றை நோக்கிக் கூறின அளவிலே மாலைக்காலமுந் திங்களும் * வந்தன; அவற்றான் வருத்தமிக்கு, என்னுடைய அமையாத வருத்தமிக்க நெஞ்சு முன்பே ஒள்ளிய வளை கழலும்படி என்னைக் கைவிட்டுப் பின்பு வருத்தஞ்செய்த கள்வனை உள்ளி என்னை ஒளித்துப்போய் அவன்பாற் பட்டது; அது தான் மீண்டுவந்து பெருங்கடல் தன்னிறந் தோன்றாமற் புற்கெனக் கானல் பறவைகள் முதலியனவின்றித் தனிப்பக் கழியின்நெய்தல் இதழ்குவிந்துதோன்ற வந்த † மாலைப் பின்னர் விளங்குகின்ற வெண்ணிலாப் பரக்கும்பொழுதின் கண்ணே விசும்பையும் நிலத்தையுந் திசைகளையும் அவனைத் தேடித் (க) துழாவாநிற்கும்; இங்ஙனம் என்னை அல்லலுறுவித்தவன், தான் விரும்பாமல் யான் விரும்பப்பட்டான் ஒருவன்; அவன் தன்னை விரும்புகின்ற என்னோடே துயிலாது தனியே துயில்கொள்ளுமோ கொள்ளானோ என்று கூறினாள். எ - று.

வேண்டுபவர் என்றாள், தன்னைப் பிறர்போல.

சரு (உ) ஊரவர்க் கெல்லாம் பெருநகை யாகியென்
(ங) ஆருயி ரெஞ்சுமன் அங்குநீ சென்றீ
நிலவுமிழ் வான் ‡ திங்கா ளாய்தொடி கொட்ப
வளிபுற மாறி யருளான் றுறந்தவக்
காதலன் செய்த கலக்குறுநோய்க் கேதிலா
ரெல்லாருந் தேற்றார் மருந்து

எ - து. அங்ஙனங் கூறி, எழுந்த திங்களை நோக்கி, நிலவைக் கான்ற திங்களே! தோள்மெலிந்தகாலத்துச் செருகலாமென்று ஆராய்ந்த தொடி உட்படச்சுழலும்படி அளித்தலை என்னிடத்து மாறி, பின்னர் என்னை || அருள் செய்யாதே கைவிட்ட அக்காதலன் செய்த, மனக்கலக்கம் உறுகின்ற காமநோய்க்கு நின்னை ஒழிய அயலிலுள்ளார் எல்லாரும் [அதற்கு] ஒருமருந்தைத் தெளிவித்துக் கூறார்; ஆதலால் ஊரவர்க்கெல்லாம் பெரியதோர் ÷ நிகழ்ச்சியுண்டாம்படி என் அரிய உயிர் போகாநிற்கும்; இதனை நோக்கித் திங்களாய

க. "கவிழ்ந்து, நிழ்றுழாம் யானை" தண்டி. சூ. உக: மேற்கோள்; "சிறுகுரங்கின் கையாற் றுழா" பழ. ருக.

உ. "ஊர்க் கெல்லாஞ் சாலும், பெருநகை யல்க னிகழ்ந்தது" கலி. சுகு. க - உ.

ங. (அ) "ஆருயி ரெஞ்சும், வகையினுல்" (ஆ) "ஆருயி ரெஞ்ச" கலி: கஙக: உகூ-உஎ; கசங: கக.

(பிரதிபேதம்) * வந்தென அவற்றான். † மாலைபின்னர். ‡ திங்களாய்தொடி. || அருளோ செய்யாதே, ÷ இகட்சி.

புத்தேளே! நீ (க) அவன்பாற் * சென்று என் குறை முடிப்பாயாக என்று கூறினாள். எ - று.

ஆகி, ஆக.

ருக விளைக்கொண்டென் காமநோய் நீக்கிய வூரீ
ரெனைத்தானு † மெள்ளினு மெள்ளலன் கேள்வ
னினைப்பினுங் கண்ணுள்ளே தோன்று மனைத்தற்கே
யேமரா தேமரா வாறு

எ - து; அங்ஙனங் கூறிய திங்கள் போகா நிற்றலின் அதனைக் கைவிட்டு இன்னும் நம் வருத்தமுணர்ந்து வினவிய ‡ ஊரிலுள்ளாரே நம் வருத்தந் தீர்த்தற்குரியரென்று கருதி, ஊரீர்! நீர் என்னை இகழ்ந்திருக்கினும் என்கேள்வன் சிறிதும்என்னை இகழ்ந்திரான்; அதற்குக் காரணமென்னெனில், மெய்யுற்றுப்புணர்ந்து யான் பரிகாரப்படாததொரு நெறியிலே நின்று நெஞ்சால் நினைப்பிடத்துத்தோன்றுதலினுங் காட்டிற் ||கண்ணினிடத்தேதோன்றும்; அவ்வளவு அருள்செய்தற்கு என்னெஞ்சு தான் பரிகாரப்படுகின்றதில்லை; இதனை நும்முடையதோர் தொழிலாக ஏறட்டுக்கொண்டு எனது காமநோயை நீக்குதற்கு நல்ல × காலமென்று கூறினாள். எ - று.

ருரு கனையிருள் (உ)வானங் கடன்முகந் தென்மே
லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரா
லிறையிறை (ங)பொத்திற்றுத் தீ

எ - து: அங்ஙனங் கூறி, அவனைத் தந்து ✛ இவர் இந்நோயை நீக்குமளவும் செறிந்த இருளையுடைய மேகமே! நிறைந்த வளை சுழலப் பண்ணினவன் செய்த வருத்தத்தாலே எனக்குச் சந்துதொறுஞ் சந்துதொறும் காமத்தீ மூண்டது; இதன் வெம்மை ஆறும்படி கடலிலே முகந்து என்மேலே சேர இடைவிடாமற்பெய்யுந் துளியோடே நிற்றலைச் செய்தல் ∴ வேண்டும்; என்று கூறினாள். எ - று.

---

க. 'ஈங்கு முதலியன தன்மைக்கண்ணும் ஆங்கு முதலியன படர்க்கைக் கண்ணும் அடக்கப்பட்டன' (தொல். கிளவி. சூ. உஅ. நச்) என்பது இங்கே அறிதற்பாலது.

உ. "கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது, போலாதென் மெய்க் கனலு நோய்' கலி கசுக: சுசு-சுரு.

ங. "எரிபொத்தி" (கலி. ஙசு. கக) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * சென்றேதனை, † எள்ளினுமெள்ளிலன், ‡ ஊரிலுள்ளாரே அவனை நம் வருத்தந் தீர்த்தற்குரியானென்று கருதினீர்? நீரென்னை, || கண்ணிடத்தே, × காரணமென்று ✛ அவன் இந்நோயை, ∴ வேணுமென்று.

௫௬  எனப்பாடி

நோயுடை நெஞ்சத் தெறியா வினைபேங்கி
யாவிரு மெங்கேள்வற் காணீரோ வென்பவட்
கார்வுற்ற பூசற் கறம்போல வெய்தந்தார்
பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு
மாயவன் மார்பிற் * றிருப் போல் பவள்சேர
(௧)ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
ஞயிழை யுற்ற துயர்

எ - து: †என்று அங்கு அங்ஙனஞ்சொல்லிக் காமநோயையுடைய நெஞ்சிலே அடித்துக்கொண்டு வருந்தி அழுது, நீங்கள் எல்லீருந் தேடிச் சென்றும் எங்கணவரைக் காணப் பெற்றிலீரோ என்று கூறுகின்றவட்கு உற்ற வருத்தமானது, தன் துயிலைவாங்கிக்கொண்டு தன்னைநினையாதவரைத் தன்னிடத்தே வரக்கண்டு அவர் மார்பிடத்தே மாயவன் மார்பில் திருச்சேர்ந்தாற்போலே அவள்சேர ஞாயிற்றின்முன் இருள் கெடுமாறு போலக் கெட்டது; ஆதலால், இவ்வாயிழை பசப்புற்ற வருத்தத்திற்(கு அறக்)கடவுள் உதவித் தீர்த்தாற்போல அவரும் உதவித் தீர்த்தாரென்று கண்டார் வியந்து தம்மிற் கொண்டுகூறிற்றாக உரைக்க. எ - று.

இது கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'நோய்வேது கொள்வதுபோலுங் கடும்பகல்' என்னுந்துணையுங் கூறத்தகாதன கூறலின் ‡ மடனிறந்தவாறும் 'பனியொடு மாலைப்பகை தாங்கியான்' எனத் தன் வருத்தந் தோன்றுமற் கூறலின் வருத்தமிறந்தவாறும் 'கண்ணீர்க் கடலால்' என்றதனையும் 'வானுநிலனுந் திசையுந் துழாவுமென் ... ..னெஞ்சு' என்றதனையுந் தான் வியவாமையின் ||மருட்கையிறந்தவாறும் 'எங்கண்பாயல் கொண்டு' என்றும் 'ஒள்வளையோட' என்றும் வனப்பு மிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடிவந்த தாவும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் ஓரடியானென்றும் பெற்றுக் கலிவெண்பாவின் வேறுபட்ட பாநிலைவகைக் கொச்சகம்.

(௧௪௯)  உரைசெல வுயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை யொருநிலையே
வரைநில்லா விழுமமுறீஇ நடுக்குரைத்துத் தெறன்மாலை
யரைசினு மன்பின்றுங் காமம் புரைதீர

௧. "ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென், ஞயிழை மேனிப் பசப்பு" (கலி. ௬௨: ௩௧-௩௨) என்பதும் அதன் குறிப்பும் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * திருப்போலவள்சேர † என்றங்ஙனம் ‡ மதனிறந்தவாறும் || மருட்கை பிறந்தவாறும்.

வண்ணமென் சேக்கையு ளாரா தளித்தவன்
௫ றுன்னி யகலத் துறந்த வணியளாய்
நாணு நிறையு முணர்கல்லா டோண்ஞெகிழ்பு
பேரம ருண்க ணிறைமல்க வந்நீர்தன்
கூரெயி றுடிக் குவிமுலைமேல் வார்தாத்
தேர்வழி நின்று தெருமரு மாயிழை
கூறுப கேளாமோ சென்று;
௧௧ எல்லிழாய், எற்றி வரைந்தானை நாணு மறந்தாளென்
றுற்றனிர் போல வினவுதிர் மற்றிது
கேட்டீமி னெல்லீரும் வந்து;
௧௪ வறந்தெற மாற்றிய வானமும் போலு
நிறைந்தென்னை மாய்ப்பதோர் வெள்ளமும் போலுஞ்
சிறந்தவன் றாவற நீப்பப் பிறங்கிவந்
தென்மே னிலைஇய நோய்;
௧௮ நக்கு நலனு மிழந்தா ளிவளென்னுந்
தக்கவிர் போலு மிழந்திலேன் மன்ஞேை
மிக்கவென் ஞெனு நலனுமென் னுள்ளமு
மக்கா லவனுழை யாங்கே யொழிந்தன
வுக்கா ணிஃதோ வுடம்புயிர்க் கூற்றுகச்
செக்கரம் புள்ளித் திகிரி யலவஞெடியா
னக்கது பன்மா ணினைந்து;
௨௫ கரைகாணு நோயு ளழுந்தா தவனைப்
புரைதவக் கூறிக் கொடுமை நுவல்வீர்
வரைபவ னென்னி. னகலா னவனைத்
திரைதரு. முந்நீர் வளாஅக மெல்லா
நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன் யானு
முரைகேட் புழியெல்லாஞ் செல்வேன் புரைதீர்ந்தான்
யாண்டொளிப் பான்கொல்லோ மற்று;
௩௨ மருள்கூர் பிணைபோன் மயங்கவெந் நோய்செய்யு
மாலையும் வந்து மயங்கி யெரிநுதி
யாமந் தலைவந்தன் றுயி னதற்கென்ஞேய்
பாடுவேன் பல்லாருட் சென்று;

௬௫ அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமக டோள்

௬௮ வலியா ரறியா வுயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்
கெளியவோ வாயமக டோள்

௭௧ விலை*வேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின்

௭௪ ஆங்கு
(௧)குரவை தழீஇயா மரபுளி பாடித்
†தேயா(௨)விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்
மாசில்வான் முந்நீர் பரந்த தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.

எ - து: அவ்விடத்தே அப்படிக்காட்டி (௩)மயிலினது கழுத்தை மாறுபடுகின்ற அணியப்பட்ட காயாம்பூவாற் செய்த கண்ணிகள் பவளம்போலும் நிறத்தையுடைய சிவந்தநிலத்தே மாறுபட்டுக்கிடக்கும் பொதுவரும் பெரிய புலித்திரளும் பெரிய களிற்றுத்திரளும் தம்முண் மாறுமாறாய்ப் பொருதாற்

---

௧. "முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன்றருதற்கு மாயோன் ஆகுதிபயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்" (தொல். அகத். சூ. ௫. நச்.) என்பது ஈண்டு அறிதற் பாலது.

௨. (அ) "புகழொத் தீயே யிகழுந ரடுநனை" (ஆ) "புகழ்த லுற்றோர்க்கு மாயோ னன்ன, வுரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற" புறம். ௫௬: ௧௩, ௫௭: ௨-௩; (இ) "உரைசால் சிறப்பி னெடியோன்" சிலப். ௨௨. ௬௦.

௩. (அ) "கருநனைக் காயா கணமயி லவிழவும்" சிறுபாண். ௧௬௫. (ஆ) "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயி லெருத்திற் றோன்றும்" குறுந். ௧௮௩. (இ) "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" சீவக. ௧௫௫௮. எனவும், (ஈ) "பூவை மலர்புரை யெருத்து மஞ்ஞை" காஞ்சிப். கழுவாய்ப். ௧௮௫. (உ) "பறவாப்பூவை

(பிரதிபேதம்) * வேண்டாரெம்மினத்தாயர், † தோய்யாவிழுப்புகழ்.

௩௬ யானுற்ற வெவ்வ முரைப்பிற் பலர்த்துயிற்றும்
யாமநீ துஞ்சலை மன்;

௩௮ எதிர்கொள்ளு ஞாலந் துயிலாரா தாங்கண்
முதிர்பெண்மேன் முற்றிய வெந்நோ யுரைப்பிற்
கதிர்கண் மழுங்கி மதியு மதிர்வதுபோ
லோடிச் சுழல்வது மன்;

௪௨ பேரூர் மறுகிற் பெருந்துயிற் சான்றீரே
நீரைச் செறுத்து நிறைவுற வோம்புமின்
கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது
போலாதென் மெய்க்கனலு நோய்;

௪௬ இருப்பினு நெஞ்சங் கனலுஞ் செலினே
வருத்துறும் யாக்கை வருந்துத லாற்றே
னருப்ப முடைத்தென்னு ளெவ்வம் பொருத்திப்
பொறிசெய் புனைபாவை போல வறிதுயங்கிச்
செல்வேன் விழுமமுழந்து;

௫௧ எனவாங்குப் பாட வருளுற்று;
வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்
புள்ளிற் கதுபொழிந் தாங்கு மற்றுந்தன்
னல்லெழின் மார்பன் முயங்கலி
னல்ல றீர்ந்தன் ளாயிழை பண்பே.

(க) இதுவுமது. இதற்கும் (உ) முன்னங் கூறிய உரையைக் கூறிக்கொள்க.

இதன் பொருள்.

உரைசெல வுயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை யொருநிலையே
வரைநில்லா விழுமமுறீஇ நடுக்குரைத்துத் தெறன்மாலை
யரைசினு மன்பின்றுங் காமம் புரைதீர
(௩)வன்னமென் சேக்கையு ளாரா தளித்தவன்

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந்திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. ௩௩. நச்.

உ. இந்நூற்பக்கம் ௮௮-௮௯. பார்க்க.

௩. (அ)"தூவி யன்னமென் சேக்கையுள்" (கலி. ௩௩: ௧௫) என்பதும் (ஆ) "இணைபட.........துணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணை" (கலி. ௭௨: ௧-௨) என்பதும் (இ) அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ரு றுன்னி யகலத் துறந்த வணியளாய்
நாணு நிறையு முணர்கல்லா டோண்ணெகிழ்பு
(க)பேரம ருண்க ணிறைமல்க வந்நீர்தன்
கூரெயி(உ)ற்றுடிக் குவிமுலைமேல் *வார்தரத்
தேர்வழி நின்று தெருமரு மாயிழை
கூறுப கேளாமோ† சென்று

கக எல்லிழாய்,(ங)எற்றி வரைந்தானை நாணு மறந்தானென்
‡றுற்றனிர் போல வினவுதிர் மற்றிது
கேட்டீமி னெல்லீரும் வந்து

கஉ வறந்தெற மாற்றிய வானமும் போலு
நிறைந்தென்னை மாய்ப்பதோர் வெள்ளமும் போலுஞ்
சிறந்தவன்(ச)றாவற நீப்பப் பிறந்திவந்
தென்மே னிலைஇய நோய்

எ-து: ||அரசன் தனக்குப் புகழ் உயர்ந்து நடக்கும்படியாகத் தம்மறிவான் மிக்குச் சேர்ந்த (ரு) அமைச்சரை முன்னர் நடுக்கமான மொழிகளைக் கூறிப் பின்னர் ஒரு படியிலே எல்லையில்லாத இடும்பைகளை உறுவித்துக் கொல்லுதலை இயல்பாகவுடைய கொடுங்கோலரசனிலுங்காட்டில், × கணவர்க்கு மகளிர்க் குண்டாகிய காமத்தாலும் அவர்மேல் நிகழும் அன்பு இல்லையாமாயிருந்தது; எங்ஙனேயென்னில் அவ்வாயிழை தன்றலைவன் அன்னத் தூவியாற் செய்த மெல்லிதாகிய சேக்கையிலே அளித்து இராக்காலத்தேவந்து துன்னிக் கூரிய எயிற்றினீரை நுகர்ந்து குற்றந் தீரத் தலையளிசெய்து நீங்குகையினலே அத் தலையளியால் ஆராமல் தன்னை நீங்கின அணிகளை யுடையளாய்த் தனக்கியல்பாகிய நாணையும் நிறையென்னுங் குணத்தையும் தாங்குதல் ✝ வேண்டுமென்று அறியாளாய்த் தன் தோள் மெலிந்து பெரிய அமர்த்த

க. "பேரம ருண்கணின் றேழி" கலி. சு௦: கசு.

உ. ஆடுதலென்பதற்கு நுகர்தலென்னும் பொருள், "நெய்தற்று தமர்ந் தாடி" (கலி. எச: உ) என்றவிடத்தும் கூறப்பட்டிருக்கிறது.

ங. இந்நூற் பக்கம் ககரு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ச. இந்நூற் பக்கம் எசஎ: ரு-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. "புரைதவப் பயனேக்கார் தம்மாக்க முயல்வாரை, வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணேடா துயிர்வௌவு, மரைசினுங் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ" (கலி. அ: கரு-கஎ.) என்பதும் இந்நூற் பக்கம் ருச: க-ஆம் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * யாராகத்தேர்வழி, † சென்று எற்றி, ‡ உற்றறிவீர்போல, || அரைசன்' × மகளிர்க்குண்டாகிய காமத்தானுங் கணவர்க் கவர்மே னிகழுமன்பு' ✝ வேணுமென்று.

உண்கண் நீர்நிறைதலையின்றலே அந்நீர் தன் குவிந்த முலைமேலே வடியாநிற்க அவனைத் தேடுவதோர் கூற்றிலே நின்று மனம் சுழலாநிற்கும்; இனி யாம் இவளிடத்தே சென்று இவள் கூறுவனவற்றைக் கேளாது * இருப்பேமோ? கேட்கக்கடவேமென்று நும்மிலே கூறி என்னிடத்தே வந்து எல்லிழாயென்று என்னை விளித்து, பிரியேன் என்று பிரிதலை வரைந்தவனைப் பிரியானெனத் துணிந்து அவன் பிரிதலின் நாணையும் மறந்தாள் என்று கூறி எனக்கு அன்புற்றீர்போல நீ என்னுற்றனை என்று வினவுகின்றவர்களே! பின்னை இவ் வருத்தத்தை எல்லீருங் கேட்பீராக என்று கூறுகின்றவள், (௧) எனக்குச் சிறந்தவன் என்வலியறும்படி என்னைக் கைவிடுகையினாலே பெருகிவந்து என்மேல் நிலைபெற்ற இக் காமநோய். கோடை(௨)உலகத்தைச் சுடும்படியாகப் (௩)பெய்யாமற்போன மேகம் வருத்துமாற்றையும்போலும்; பெருகி என்னுயிரைப் (௪) போக்குவதோர் நீர் வெள்ளம் வருத்துமாற்றையும் போலும்; என்றுகூறினாள். எ - று.

௧௮ நக்கு நலனு மிழந்தா ளிவளென்னுந்
தக்கவிர் போலு மிழந்திலேன் மன்னோ
† மிக்கவென் னாணு நலனுமென் னுள்ளமு
மக்கா லவனுழை யாங்கே யொழிந்தன
(௫)வுக்கா ணிமைத்தோ வுடம்புயிர்க் கூற்றாகச்
(௬)செக்கரம் புள்ளித் திகிரி யலவனொடியா
னக்கது ‡ பன்மா ணினைந்து

௧. "சிறந்தானை வழிபடீஇ" (கலி. ௯: ௨௩) என்பதும் அதன் உரையும் அதன் குறிப்பும் பார்க்க.

௨. (அ) "வானந், துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின், னளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே" (கலி. ௨௫: ௨௭-௨௯) என்பதும், (ஆ) அதன் குறிப்பும் (இ) "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத், துண்ணின் றுடற்றும் பசி" (குறள். ௧௩.) என்பதும் நோக்குக.

௩. (அ) "கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்...........எல்லாவுயிர்க்கு மில்லால் வாழ்க்கை" புறம். ௨௦௩: ௧-௩; (ஆ) "பெயற்பான் மழைபெய்யாக் கண்ணும்........என்னையுலகுய்யுமாறு" நாலடி. ௯௭.

௪. (அ) "நீர்மிகிற் சிறையு மில்லை" புறம். ௫௧: ௧; (ஆ) "நீர்மிகி னில்லை சிறை" பழ. ௧௯௦; (இ) "சிறையு முண்டோ செழுமபுனன் மிக்குழீஇ" மணி. ௫: ௧௯; (ஈ) "சிறையென்ப தில்லை செவ்வே செம்புனல் பெருகுமாயின்" சூளா. கல்யாண. ௧௫௫.

௫. இந்நூற் பக்கம் ௫௩௮: ௫-ஆம் குறிப்பும் "இவ்விருந்த சான்றீர்" கலி. ௧௩௯: ௩-௪ என்பதும் இங்கே அறிதற்பாலன.

௬. "செக்கர் ஞெண்டின்" அகம். ௨௦: ௪.

பிரதிபேதம்) * இருப்போமோ, † மிக்கவே நாணும், ‡ பன்மாணினைந்து.

எ - து: அங்ஙனங்கூறி, அவன் அன்பிலனாதலை அறியாதே அவனோடே புணர்ந்து தன் அழகினையும் நாணினையும் உள்ளத்தினையும் இவள் இழந்தாள் என்னுந் தகுதிப்பாட்டினை யுடையீர்போலே இருந்தீர்; அவன் அன்பில னல்லன்; அஃதென்னையெனில், அவன் இந்த * உடம்பினின்று போகின்ற உயிர்க்கு உறுதியாம்படி, சிவந்தநிறத்தினையும் புள்ளிகளையுமுடைய தேருருள் போன்ற ஆண்பால் அலவன் பெண்பால் அலவனோடே நிகழ்த்துகின்ற பல மாட்சிமைகளையும் யான் நின்னிடத்தே நிகழ்த்தும்படி நின்னெஞ்சாலே நினைந்து அவை நிகழ்த்துகின்றவற்றையும் அவ்விடத்தே பாராய் என்றான்; அதனால், அவனன்புடைமை யறிந்தே யான் அவனோடு(க) †நக்கது; அக்காலத்தே என்னாணும் என்னலமும் என்னுள்ளமும் புணர்ச்சியான் மிகுதியைப் பெற்றன; அவை அவன் நீங்கிய அப்பொழுதே அவனிடத்தே நின்று விட்டன; ‡ ஆதலாற்றான் நோயும் மிகவுறும்; அவற்றை இகந்த தன்மை யுடையேனல்லேனென்று கூறினாள். எ - று.

உரு கரைகாணா நோயு ளழுந்தா தவனைப்
புரைதவக் கூறிக் கொடுமை நுவல்வீர்
வரைப்ப ||னென்னி னகலா (உ)னவனைத்
திரைதரு × முந்நீர் (ந)வளாஅக மெல்லா
நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன் யானு
முரைகேட் புழியெல்லாஞ் செல்வேன் புரைதீர்ந்தான்
யாண்டொளிப் பான்கொல்லோ மற்று

எ-து: அங்ஙனங் கூறி என்னைப்போல ஓர் எல்லைகாணாத காமநோயிலே மூழ்காதவனை உயர்ச்சி கெடும்படி அவன் பிரிந்து நாண்முதலியவற்றைத் தாராத கொடுமையை நாடி அவன் வந்த ✠காலத்தன்றே நீ இவை பெறுவது என்று கூறுகின்றவர்களே! யான் நிரைத்த கதிர்களையுடைய ஞாயிற்றை நோக்கித் திரையைத் தருகின்ற கடல்சூழ்ந்த உலகமெல்லாந் தேடி அவனைக் கொண்டு வா என்றுஞ் சொல்லிவிட்டேன்; அதுவேயன்றி யானும் அவன்

---

க. நக்கது - புணர்ந்தது; இச்சொல் இப்பொருளில் வருதல் (அ) “அவர் நக்கதன் பயனே” “நக்கு நலனுமிழந்தாள்”(கலி. கநஎ: எ; கசசு: கஅ) என்பவற்றினுரையாலும் துணியலாகும்.

உ. “ஆங்கெதிர் நோக்குவன் ஞாயிறே யெங்கேள்வன், யாங்குள னாயினுங் காட்டீமோ” கலி. கசஎ: உஎ-உஅ.

ந. (அ) “தெண்கடல் வளாகம்” புறம். கஅக. க; (ஆ) “கொங்கை முன்றிற் குங்கும வளாகத்து” சிலப். அ: உக; (இ) “நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்” சிதம்பர மும்மணிக். க: உ.

(பிரதிபேதம்) *, உடம்பினின்றும் போகின்ற, † நக்கவக்காலத்தே, ‡ ஆதலாலதனோவும் || என்னிலகலான், × முன்னீர்வளாகமெல்லா, ✠ காலத்ததன்றே.

இவ்விடத்தான் என்னும் வார்த்தை கேட்கலாம் இடமெல்லாஞ் சென்று தேடுவேன்; இங்ஙனந் தேடுமளவின் உயர்ச்சிதீர்ந்தவன் பின்னை எவ்விடத்தே ஒளித்திருப்பான்? அவனை அகப்படுத்திக் கொண்டு அந்நாண் முதலியன வாங்கியே விடுவேன்; என்னை நெஞ்சாலே வரைந்திருக்கின்றவன் என்னிடத்தினின்றுநீங்கான்; என்றுங் கூறினாள். எ - று.

சொல்லும் ஒவும், அசை.

௩௨ மருள்கூர் பிணைபோன் மயங்கவெந் நோய்செய்யு
மாலையும் வந்து மயங்கி யெரிநுதி
யாமந் தலைவந்தன் றாயி னதற்கென்னோய்
பாடுவேன் பல்லாருட் சென்று

௩௩ யானுற்ற *வெவ்வ முரைப்பிற் (க)பலர்த்துயிற்றும்
யாமநீ துஞ்சலை மன்

எ - து: அங்ஙனங் † கூறிய அளவிலே மாலையும் இரவும் வருகின்றதனை உணர்ந்து, மயக்கமிக்க மான்பிணைபோல யான் மயங்கும்படி வெவ்விய காம நோயை உண்டாக்கும் மாலைக் காலமும் ‡ வந்து அதனோடே மயங்கி எரியின் கொழுந்துபோற் கொடிய இராக்காலமும் || அவ்விடத்தே வந்ததாயின், அதனிடத்தே யான் பட்ட வருத்தத்தை என்னைப்போல வருந்தும் பலமகளிருக்குள்ளே சென்றுகூறுவேன்; நினக்கு முறைப்பட்டுக்கூறிற் பலரையுந் துயிலப் பண்ணும் இராக்காலமே! நீ தானும் மிகவும் வருந்தித் × துயில்கொள்ளாய்; ஆதலால் என்னோயை நினக்குச் சொல்லேனென்றேனென்றும் கொடுமை நுவல்கின்றவர்களை நோக்கிக் கூறினாள். எ - று.

௩௪ எதிர்கொள்ளுஞ் ஞாலந் ÷ துயிலாரா தாங்கண்
முதிர்பென்மேன் முற்றிய வெந்நோ யுரைப்பிற்
கதிர்கண் மழுங்கி மதியு மகிர்வதுபோ
லோடிச் சுழல்வது மன்

எ - து: அங்ஙனங் கூறியபின்னர்த் திங்கள் வருத்துமென் றுணர்ந்து ஞாலத்தி + லுள்ளாரால் அவ்விசும்பிடத்தே (உ) பிறையான பருவத்தே எதிர்

---

க. "மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்குல்" (கலி. சுறு: ௩) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ) "தொழுதுகாண் பிறையிற் றோன்றி" (ஆ) "பலர் தொழச், செவ்வாய் வானத் தையெனத் தோன்றி, யின்னம் பிறந்தன்று பிறையே" குறுந். கஎஅ; ௩0எ. (இ) "அப்பிறை, பதினெண் கணனு

(பிரதிபேதம்) * எவ்வமுறைப்பின். † கூறினவளவிலே. ‡ வந்தது; அதனோடே. || இவ்விடத்தே வந்ததால் யான் தன்னிடத்தே பட்ட, × துயில்கொள்ளாயென்று என்னோயைச் சொல்லுயேனென்றுங், ÷ துயிலாதார் தாங், + உள்ளார் அவ்.

கொள்ளப்பட்டுப் பின்பு முதிர்ந்து யான் துயிலாராமல் என்மேல் வந்து வளைத்த மதியும் யானுற்ற வெவ்விய நோயை முறைப்பட்டுக்கூறின் தன்கதிர்கள் ஒளி மழுங்கி நடுங்குவதுபோலே ஓடி மிகவுஞ் சுழன்று திரியும்; ஆதலான் நுமக் கன்றி அதற்கும் என்னுறையைக் கூறேனென்றும் கூறினாள். எ - று.

௪௨ பேரூர் மறுகிற் பெருந்துயிற் சான்றீரே
நீரைச் (க)செறுத்து நிறைவுற வோம்புமின்
(உ)கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது
போலாதென் மெய்க்கனலு நோய்

எ - து: அங்ஙனங் கூறி, பெரிய ஊரில் தெருவிலே யான் உறுகின்ற வருத்தத்திற்குப் பரிகாரஞ் செய்யாமற் பெரிய உறக்கத்தைக் கொள்ளக் கருதிய சான்றீரே! என்மெய்க்கண் நின்று எரியுங் காமநோய் மழையெல்லாம் என்னிடத்தே நின்று பெய்யினும் ஆறுவது * போல இருக்கின்றதில்லை; இது தணியும்படி உலகத்துள்ள நீரை என்னிடத்தே நிறையும்படி அடைத்து வைத்து என்னுயிரைப் பாதுகாப்பீராக என்றும் கூறினாள். எ - று.

௪௩ இருப்பினு நெஞ்சங் கனலுஞ் செலினே
வருத்துறும் யாக்கை வருந்துத லாற்றே
(௩)னருப்ப முடைத்தென்னு ளெவ்வம் பொருந்திப்
பொறிசெய் புனைபாவை போல வறிதுயங்கிச்
செல்வேன் விழும முழந்து

---

மேத்தவும் படுமே" புறம். க: க-௧௦. (ஈ) "ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம், புல்லென் மாலை" அகம். உ௩௯: ௯-௧௦.

௧. "செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டேடார்" நாலடி. உஉஉ.

உ. "கனையிருள் வானங் கடன்முகந் தென்மே, லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே, நிறைவளை கொட்பித்தான் செய்த துயரா, லிறை யிறை பொத்திற்றுத் தீ" கலி. ௧௪௫: ௬௭-௬௮.

௩. அருப்பம் - அருமை; இது பண்பாகு பெயராய் அரிய அரணை உணர்த் திற்று; இது (அ) "வேட்டுப் புழை யருப்ப மாட்டி" முல்லை. உ௬. (ஆ) "அம்புமி ழயிலருப்பம்" மது. ௬௭. (இ) "அரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய" மலை. ௩௭௮. (ஈ) "வீங்கு சிறை வியலருப்பம்" (உ) "அருப்பம் பேணு தமர்கடந்ததூஉம்" புறம். ௧௭: உ௮; உஉ௪: க. என்புழியும் இப்பொருளில் வருதல் காண்க. இச்சொல்லை, திட்பம், ஒட்பம், நுட்பம், செப்பம், வெப்பம், தறுகட்பம் என்பவற்றொடு ஒப்பு நோக்குக. அருப்பம், திண்மை யென்பாருமுளர்.

(பிரதிபேதம்) *'போலே.

எ-து: அங்ஙனங் கூறிப் பின்னர்த் தன் ஞெயின் செய்தி கூறுகின்றவள், அவன் என்னெஞ்சிடத்தே விடாமலிருப்பினும் அதனால் அமையாது தான் காந்தாநிற்கும்; அவன் ஒருகாற்போமின் தான் அதற்கு வருத்தமுறாநிற்கும்; * அங்ஙனம் என்னெஞ்சு †வருந்துதலை ஆற்றேனாய்ப் (க) பலவுறுப்புக்களையுங் கூட்டி இயங்குவதோர் பொறியாகச் செய்த புனைந்த பாவைபோல, இடும்பை யிலே அழுந்தி மயங்கிய யாக்கையோடே ‡ சிறிதுசெல்வேன்; அதனால் தணியாத என்னிடத்து உண்டாகிய எவ்வமானது பிறரால் அழித்தற்கு அரிய அரணின் றன்மையையுடைத்து; இவ்வாணை அழிக்கலாவதோர் உபாயம் நாடுவீராக; என்றும் கூறினள். எ - று.

நிக எனவாங்குப் பாட வருனேற்று
வறங்கூர் வானத்து(உ)வள்ளுறைக் || கலமரும்

க. "பல்கிழி யும்பயி னுந்துகி னூலொடு, நல்லரக் கும்மெழு குந்நலஞ் சான்றன, வல்லன வும்மமைத் தாங்கெழு நாளிடைச், செல்வதொர் மாமயில் செய்தன னன்றே." என்பது நோக்குக; சீவக. உ௩௫.

உ. வானம்பாடியின் இயல்பை (அ) "துளிநசை வேட்கையான் மிசை பாடும் புள்ளிற்றன், னளிநசைஇ யார்வுற்ற வன்பினேன் யானாக" (கலி. சுசு : உ0-உக) என்பதனாலும் (ஆ) அதன் குறிப்பாலும் (இ) "வானம் பாடி வறங்களைந் தானா, தழிதுளி தலைஇய புறவில்" ஐங். சுகஅ. (ஈ) "பொறிவரி, வானம் வாழ்த்தி பாடவு மருளா. துறை துறந் தெழிலி நீங்கலின்" அகம். சுஎ: க-௩. (உ) "நீரிடும்பை, புள்ளி னு ளோங்க லறியும்" நான்மணி. கூசு. (ஊ) "துளியுண் பறவைபோற் செவ்வனோர்ப் பாரும்" பழ. உஅஎ; (எ) "தற்பாடு பறவை பசிப்பப் பசையற, நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச், சீரை வெண் டலைச் சிறுபுன் பொண்மூ, மழைகா லூன்ற..........கொடுங்கோல் வேந்தன் காக்கு நாடே" ஆசிரியமாலை. (ஏ) "சாதக முரல் குரல் வாய்மடை திறப்ப.........எழுந்தகார்" கல். கூஅ: கஎ-௩0. (ஐ) "வானத்தின் றுள்ளி யல்லால் வருந்திலும் விரும்பல் செல்லா, மானத்தை யுடைய புள்ளின்" மேரு. கஉக. (ஒ) "கொண்டல்பே ரொலியினாற், றுவிலா மகிழ் வுறுஞ் சாதகத் தன்மையாய்" (ஓ) "கொண்டல் கண்டிடு சாதகம் போலுளங் குளிர்ந்தார்" கந்த. திருவவ தார. ௩0; அக்கினிமுகா. உஉசு. (ஔ) "துன்னிய சாத கம்போற் சூழ்ந்துநோக் குநர்கட் கெல்லாங், கன்னியந் துழாய்மி லைந்த கரு முகில் கடைக்க ணோக்கான், மன்னிய கருணை வெள்ள மழைநனி வழங்கு மென்பார்" பாகவதம். (க) கண்ணபிரான் றுவரை. ௩0. (ஃ) "மழையை நோக்கிய, சாதக மெனத்தவை யானு மன்னவன், போதன தடிமலர் புந்தி நாடு, காதலிற் பூசையுங் கண்டு வந்தனன்"

(பிரதிபேதம்) * இங்ஙனம், † வருந்துதலை, ‡ சிறிதே நிற்பேன், || அலம்வரும்.

புள்ளிற் கதுபொழிந் தாஅங்கு மற்றுத்தன்
னல்லெஃழின் மார்பன் முயங்கலி
னல்ல றீர்ந்தன் றாயிழை பண்பே

எ - று: என்று அவ்விடத்தே சொல்லாநிற்க, கோடைக்கால மிக்க வானத்திடத்தே மேகத்தினது வளவிய துளியைப் பெறுதற்குச் சுழன்று திரியும் வானம்பாடிக்கு அம்மேகம் பெய்தாற்போலத் தன்னுடைய நல்ல அழகையுடைய மார்பன் அருளுதலுற்று வந்து முயங்குகையினாலே ஆயிழையுடைய அல்லலாகியகுணம் போயிற்று; என்று கண்டார் வியந்து தம்மிற் கொண்டுகூறிற்றாக உரைக்க.

இது, கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'என்மே னிலைஇய நோய்' என்னுந் துணையும் கூறத் தகாதன கூறலின் மடனிறந்தவாறும், * 'இழந்திலேன்மன்னோ' என வருத்தந் தோன்றாமற் கூறலின் வருத்தமிறந்தவாறும் 'ஞாயிற்றை நாடென்றேன்' என்றதனைத் தான் வியவாமையின் மருட்கையிறந்தவாறும் 'என்னுணு நலனும்' என்றும் மான் பிணைபோன்ற யான் இப்பொழுது 'மருள்கூர் பிணைபோன் மயங்க' என்றும் வனப்புமிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடிவந்ததரவும் ஐஞ்சீரடுக்கிய இடைநிலைப்பாட்டும் 'என வாங்குப்பாடவருளூற்று' என முச்சீரான் வந்த சொற்சீரடியும் வந்து ஆசிரியச் சுரிதகத்தால் இற்ற கலிவெண்பாட்டு. (௨௧)

(௧௪௭.) ஆறல்ல மொழிதோற்றி யறவினை கலக்கிய
தேறுக ணறவுண்டார் மயக்கம்போற் காமம்
வேறொருபாற் றனது கொல்லோ சீறடிச்
சிலம்பார்ப்ப வியலியா ளிவண்மன்னோ வினிமன்னும்
புலம்பூரப் புல்லென்ற வனப்பினாள் விலங்காக
வேனுதி யுறநோக்கி வெயினுற வுருஉந்தன்
றோணல முண்டானைக் கெடுத்தாள்போற் றெருவிற்பட்
டேண்யாது மிலளாகி யுயிரினுஞ் சிறந்ததன்
னாண்யாது மிலளாகி நகுதலு நகூஉ மாங்கே
பெண்மையு மிலளாகி யழுதலு மழூஉந் தோழியோ
ரொண்ணுத லுற்ற துழைச்சென்று கேளாமோ;

---

விநாயக. மகோற்கடர். எ௧௧. (அஅ) "மழைமுகி லடுப்பச் சாதகக் குருகு வாஞ்சையிற் றுளிமடுத் தாங்கு" திருவாவனைக்காப். தீர்த்த. ௩௦. என்பவற்றாலும் அறிக.

(பிரதிபேதம்) * இழிந்திலேன்.

௧௬ இவர்யாவ ரேமுற்றார் கண்டீரே யோஒ
வமையுந் தவறிலீர் மற்கொலோ நகையின்
மிக்கதன் காமமு மொன்றென்ப வம்மா
புதுநலம் பூவாடி யற்றத்தாம் வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை;
௧௭ என்னையே மூசிக் கதுமென நோக்கன்மின் வந்து;
௧௮ கலைஇய கண்புருவந் தோளுசுப் பேஎர்
சிலமழைபோ ரூழ்ந்திருண்ட கூந்த லவற்றை
விலைவளை மாற வறியா தொருவன்
வலையகப் பட்டதென் னெஞ்சு;
௨௨ வாழிய கேளிர்;
௨௫ பலவுஞ்சூ டேற்றித் தெளித்தவ னென்னை
முலையிடை வாங்கி முயங்கின னீத்த
கொலைவனைக் காணேன்கொல் யான்;
௨௬ காணினு மென்னை யறிதிர் கதிர்பற்றி
யாங்கெதிர் நோக்குவன் ஞாயிறே யெங்கேள்வன்
யாங்குள னாயினுங் காட்டுமோ காட்டாயேல்
வானத் தெவன்செய்தி நீ;
௩௦ ஊரிரு ணீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளுந் தோன்றுதி ஞாயிறே யவ்வழித்
தேரை தினப்பட லோம்பு;
௩௩ நல்கா வொருவனை நாடியான் கொள்வனைப்
பல்கதிர் சாம்பிப் பகலொழியப் பட்டீமோ
செல்கதிர் ஞாயிறே நீ;
௩௬ அறாஅ லின்றறி முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கட் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ வெருமைய காடிறந் தான்கொல்லோ
வுறாஅத் தகைசெய்திவ் வூருள்ளான் கொல்லோ
செறாஅ துளனாயிற் கொள்வே னவனைப்
பெறாஅதியா னேவே னவனையெற் காட்டிச்
சுறாஅக் கொடியான் கொடுமையை நீயு
முறாஅ வரைசநின் னோலைக்கட் கொண்டீ

மருஅ வரைசநின் மாலையும் வந்தன்
றுருஅ தணிகவிந் நோய்;

சசு தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கு
மன்னவோ காமநின் னம்பு;

சஅ கையாறு செய்தானைக் காணிற் கலுழ்கண்ணாற்
பையென நோக்குவேன் றாழ்தானை பற்றுவே
னையங்கொண் டென்னை யறியான் விடுவானே
லொய்யெனப் பூச லிடுவேன்மன் யானவனை
மெய்யாகக் கள்வனோ வென்று;

ருக வினவன்மி னூரவி ரென்னையெஞ் ஞான்று
மடாஅ நறவுண்டார் போல மருள
விடாஅ துயிரொடு கூடிற்றென் னுண்கண்
படாஅமை செய்தான் றொடர்பு;

ருஎ கனவினாற் காணிய கண்படா வாயி
னனவினான் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்
பனையீன்ற மாவூர்ந் தவன்வரக் காமன்
கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு;
எனவாங்கு;

சு௨ கண்ணிணை பு கலுழ்பேங்கின
டோண்ணெகிழ்பு வளைநெகிழ்ந்தன
வன்னையோ வெல்லிருங் காண்மின் மடவரன்
மென்னடைப் பேடை துணைதரத் தற்சேர்ந்த
வன்னவான் சேவற் புணர்ச்சிபோ லொண்ணுதல்
காதலன் மன்ற வவனை வரக்கண்டாங்
காழ்துயர மெல்லா மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப விறைஞ்சித்
தகையாகத் தையலாள் சேர்ந்தா னகையாக
நல்லெழின் மார்ப னகத்து.

(க) இதுவுமது. இதற்கும் (௨) முன்னங் கூறிய உரையைக் கூறிக்கொள்க.

---

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந் திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. கரு. நச.

௨. இந்நூற்பக்கம் அஅரு-அஅசு. பார்க்க.

போலப் பொருது ஏற்றைத் தழுவிக்கொண்டு சேரத் தொழுவை விட்டுப் போனார்; அவர் போன அப்பொழுதே நெருங்கிய இதழ்களையுடைய மலர்போலும் உண்கண்ணினையுடைய காதலையுடைய மகளிரும் அவர் கணவரும் வலியுற்றுத் தாதாகிய எருவையுடைய மன்றத்திலே குரவைக் கூத்தை ஆடுவார்கள்; ஆண்டு யாமுஞ் சென்று அக்குரவைக்கூத்தின் கண்ணே கூடிக் கொல்லுகின்ற ஏற்றினுடைய கோட்டிற்கு அஞ்சும் பொது வினை மறுபிறப்பினும் ஆயர்மகள் தழுவாளென்றும், ஆயர்மகள் தோள், அஞ்சாராய் உயிரைத் துறந்து கொலைத்தொழிலையுடைய ஏற்றைக்கொள்பவர் *செறியுமவையல்லது வருந்துகல்வர்து தழுவுதற்கு நெஞ்சில்லாதவர்கள் செறிதற்கரியவென்றும், உயிராவது ஒரு காற்றாக உணராதே அதனைக் காவல்கொண்டு †அதனுடனே ஒரு செறிவாயேற்றின் மருப்பினை அஞ்சும் நெஞ்சினையுடையார் செறிதற்கு ஆயர்மகளிருடைய தோள் எளியவாயிருக்கு மோவென்றும், கொலைத் தொழிலையுடைய ஏற்றினது கொம்பினிடையிலே தாம்விரும்பும் மகளிருடைய மார்பின் மூலையிடையிலே விழுமாறு போல வீழில், எம்முடைய இனத்தில் ஆயர் தத்தம் மகளிர்க்கு ‡மூலைவிலை வேண்டாரென்றும், யாம் சுற்றத்தார்கூறும் முறைமையைப் பாடிக் குரவைக் ||கூத்தாடி அவ்விடத்துக் குற்றமில்லாத அழகையுடைய கடலிடத்தே பரந்து கிடக்கின்ற பழைய நிலத்தையாளும் உரிமையோடே பொருந்தின எம்முடைய பாண்டியன் இந்த அகன்ற இடத்தையுடைய உலகின்கண்ணே வாழ்வானாகவென்று அவ்விடத்துக் ÷கெடாத சீரிய புகழையுடைய தெய்வத்தைப் பரவுவோம்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாகவென்றாள்.எ-று.

"மரபுநிலைதிரியா"என்னும் (க)சூத்திரத்து "விரவும்பொருளும் விரவும்" என்றதனால், குரவையாடல் ஏறுகோடற்கைக்கிளையுள் விராய்வருமென்றும தெய்வத்தையன்றி அரசரை வாழ்த்திய வாழ்த்தும் விராய்வருமென்றுங் ✝கூறலின்இங்ஙனங்கூறினார். இவ்விதிஇவ்வாறே மேல் ×வருவனவற்றிற்குங் கொள்க.

இதனால, தலைவிக்கு ** நினைதல் பிறந்தது.

இது "குட்ட மெருத்தடி††யுடைத்து மாகும்"(உ)என்பதனாற்குட்டம்பட்ட தரவும் 'புரிபுபுரிபு ............வேறு' என இரண்டடி முடுகியலும், 'அரிபரி

---

மலர்ந்தனைய பசியகழுத்து மயில்" உத்தரகோச. தீர்த்தச்சிறப்பு. ௩க என்னவும் வருவன இங்கே நோக்கற்பாலன.

க. தோல். அகத். சூ. ௬௫. இச்சூத்திரத்தின் இவுரையில் இக்குறிப்பிலுள்ள செய்திகளோடு 'விரவும் பொருள் விரவும்' எனவே ஆய்ச்சியர் குரவைக்கூத் தல்லது வேட்டுவவரிக்குரிய வெறியாட்டு விரவாதென்றுணர்க' என்னுஞ் செய்தியும் காணப்படுகின்றது.

உ, தோல். செய். சூ, ககசு.

(பிரதிபேதம்)* செய்யுமதல்லது, † அத்துடனே. ‡மூலையிலே வேண்டார், || கூத்தையாடியவ்விடத்து, ÷ கொடாத சீரிய, × கூறலிங்ஙனங் கூறினார், ✝ வருவவற்றிற்கும், **நினைத்தல். †† உடைத்துமென்றதனால், குட்டம் தரவும்.

இதன் பொருள்.

ஆறல்ல மொழி*தோற்றி யறவினை கலக்கிய
தேறுக ணறவுண்டார் மயக்கம்போற் காமம்
வேறொரு† பாற் றூனது கொல்லோ சீறடிச்
சிலம்பார்ப்ப வியலியா ளிவண்மன்னோ வினிமன்னும்
௫ புலம்பூரப் புல்லென்ற வனப்பினாள் விலங்காக
வேனுதி யுறநோக்கி வெயிலுற வுருகுந்தன்
(௧)றோணல முண்டானைக் கெடுத்தாள்போற் ‡ றெருவிற்பட்
டீண்யாது மிலளாகி (௨)யுயிரினுஞ் சிறந்ததன்
ஞுண்யாது மிலளாகி (௩) நகுதலு நகூஉ மாங்கே
௰ பெண்மையு மிலளாகி யழுதலு மழூஉந் தோழியோ
ரொண்ணுத லுற்ற துழைச்சென் றோளாமோ
௧௨ இவர்யாவ ரேமுற்றூர் கண்டதே யோஒ
வமையுந் தவறிலீர் மற்கொலோ நகையின்
மிக்கதன் காமமு மொன்றென்ப வம்மா
புதுநலம் பூவாடி யற்றுத்தாம் வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை
௧௭ என்னையே மூசிக் (௪) கதுமென நோக்கன்மின் வந்து

எ-து: தோழீ! அறநெறியல்லாத தீமொழிகளைத் தம்மிடத்தே தோற்றுவித்து அறமாகிய தொழில்களைத் தம்மிடத்துத் தோன்றாமற் கலக்கவேண்டித் தெளியுங்(௫)கள்ளையும் நறவையும் உண்டவர்களுடைய உலகியல் கெட்ட மயக்கம் போல (௬) நன்மக்கள் ஆற்றுகின்ற காமம் உலகியல் தப்பி வேறோர்

௧. "தோணல முண்டு துறக்கப் பட்டோர்" (கலி. ௨௩: அ.) என்பதும் அதன் குறிப்பும் ஒப்பு நோக்குக.

௨. (அ) "சிறந்ததன் ஞுணும்"(கலி. ௧௪௫: ௰)என்பதும்(ஆ)அதன்குறிப்பும் (இ) "உயிரினுஞ் சிறந்த நாணு நனிமறந்து" நற். ௧௭: அ. என்பதும் ஈண்டு ஒப்பு நோக்கற் பாலன.

௩. "உண்ணலு முண்ணேன்" (கலி. ௨௩: எ.) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௪. இந்நூற் பக்கம் ௪௨௨: எ-ஆம் குறிப்புப் பார்க்க.

௫. "கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து, மெய்யறி யாமை கொளல்" குறள். ௯௨௫.

௬. "காமநீ ராழி, யடக்குமா றுள்ளத் தவன்" நள. சுயம். ௭அ.

(பிரதிபேதம்) * தேற்றி யறவினைக்கலக்கிய. † பாலாற்றூனது, ‡ தெருவுள்பட்டு.

பகுதியாய் விட்டதோ? அதற்குக் காரணமென்னெனனில் இப்பொழுது மிகவும் தன் கணவனில்லாத தனிமைபரக்கையினாலே பொலிவழிந்தஅழகினையுடைய ளாகிய இவள் வேனுதி செய்யுங் கொடுமையையுறும்படி எதிரேநோக்காதே விலங்குதலுண்டாக நோக்குகையினாலே நெஞ்சுருகுங் கணவனைக் கெடுத்தாள் போலே தெருவிலே புறப்பட்டு வெயில் தன்மேலே உறும்படி தன் சிறிய அடியிற் சிலம்பு ஒலிப்ப எங்குந் திரிதரும் நிலைமையளாயினாள்; அதுவேயன்றி ஊண்சிறிதுமிலளாய் மேனி மெலிந்து உயிரினுஞ் சிறந்த நாணும் சிறிதுமில ளாய் நகுதலையுஞ் செய்யாநிற்கும்; அப்பொழுதே பெண்டன்மையுமிலளாய் அழுதலையுஞ் செய்யா நிற்கும்; இதனை நெஞ்சாலே ஓர்ந்துபார்; அங்ஙனம் ஓர்ந்து பார்த்து இவளுற்ற வருத்தத்தை யாம் இவ்விடத்தே சென்று கேளா மோ? கேட்போம் என்று கூறி மொய்த்துக் கடுகவந்து என்னைப் (க) பாராதே கொள்ளுங்கோள்; நுமக்கு முன்னே வந்து என்னைச் சூழ்ந்துநின்ற இவரைக் கண்டீரோ; ஓஒ! இவரே சூழ்ந்துநிற்க அமையும்; நீர்தாம் இதற்கு முன்பு *மிகவும் யானுற்ற தவறுடையீரல்லீர்போலேயிருந்தது, நுமக்கும் ஒருகாலத்தே உண்டாம்; இனி யான் கூறுவதனைக் கேட்பீராக; தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறமும் ஒருகாமம் என்று (உ) நூல்களிலே கூறுவர்கள்; ஆதலால் அதனை யுற்றுநின்ற என்னை இகழாதே கொள்ளுங்கோள்; ஈண்டு எமுற்றாரியார் யாரீதேமுற்றதென்று தாம் விரும்பப்பட்ட ஆடவர் தம்மதி மயங்கும்படி கைவிட்டவிடத்து அவர்பெற்ற நலங் கெடுகின்ற தன்மை (ங) பூ வண்டு நுகர்ந்து தன் புதிய நலம் சிறிது கெட்ட நிலைமைத்து; காணுங்கோளென்று கூறினாள். எ - று.

(ச) நறவு, தேனுற் †சமைத்தமைத்தது. ஆற்றுதல் - நடத்துதல்.

நோக்கி என்ற எச்சம், காரண காரியப்பொருட்டு. தோள் நலத்தைப் ‡ புணர்ந்தவன், ஒருபெயர் மாத்திரையாய் நின்றது. இவரை என்னும் இரண் டாவது || "ஒழியாது வருதலும்" (ரு) என்பதனுன் ஒழிந்தும் நின்றது ஓஒ, இரக்கக் குறிப்பு.

---

க. "புறப்பற்றுத், தள்ளுங்கோ ளூரவிற் றுமோர் தரன்பள்ளி, கொள்ளுங் கோ ளூர்மருவுங் கோல்" நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி. ருஅ.

உ. "தேறுத லொழிந்த காமத்து மிகுதிற, மிக்க காமத்து மிடலொடு தொகைஇச், செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" தொல். அகத். சூ. ருக.

ங. இந்நூற்பக்கம், உகூச: ச-ஆம் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்து பவை ஒப்பு நோக்கற்பாலன.

ச. நறவென்பது கள்ளின் பொதுப் பெயராயும் வரும்.

ரு. தொல். தொகைமரபு. சூ. கரு.

பிரதிபேதம்) *மிகவுமயாநினுற்ற, †சமைத்தது, ‡நுகர்ந்தவன்ஒரு, || ஒழியாதென்பதனால்.

௧௮ கலைஇய கண்புருவந் தோணுசுப் பேஎர்
சிலமழைபோ ரூழ்ந்திருண்ட கூந்த லவற்றை
விலைவள மாற வறியா தொருவன்
வலையகப் பட்டதென் னெஞ்சு
௨௨ வாழிய கேளிர்

௨௩ பலவுஞ்சூ டேற்றித் தெளித்தவ னென்னை
முலையிடை வாங்கி முயங்கின னீத்த
(௧) கொலைவனைக் காணேன்கொல் யான்

௨௬ காணினு மென்னை யறிதிர் கதிர்பற்றி
யாங்கெதிர் நோக்குவன் (௨) ஞாயிறே பெங்கேள்வன்
யாங்குள னாயினுங் காட்டுமோ காட்டாயேல்
வானத் தெவன்செய்தி நீ

௩௦ ஆரிரு ணீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளுந் தோன்றுதி ஞாயிறே யவ்வழித்
தேரை தினப்பட லோம்பு

௩௩ நல்கா வொருவனை நாடியான் (௩) கொள்வனைப்
பல்கதிர் சாம்பிப் பகலொழியப் பட்டீமோ
செல்கதிர் ஞாயிறே நீ

எ-து: அங்ஙனங் கூறி, அவனோடே கலந்த கண் புருவம் தோள் நுசுப்புச் சிலமழைபோலே நீண்டிருண்ட கூந்தல் என்கின்றவற்றின் அழகைப்பெறும் விலையின் வளப்பத்தை அறிந்து கொடுத்தவனிடத்து உள்ளவற்றைக் கொள்ளுதல் அறியாதே ஒருவன் கூறிய (௪) பொய்யாகிய வலையிலே என் நெஞ்சு அகப்பட்டுவிட்டது ; என்றுகூறி, பின்னும் (௫) கேளீர்! வாழ்வீராக ; என

---

௧. "கொலைவன் சூடிய" (கலி. ௧௦௩: ௧௫.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௨. "அவனைத், திரைதரு முந்நீர் வளாஅக மெல்லா, நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன்" கலி. ௧௪௬ : ௨௭ - ௨௯.

௩. 'உரைப்பனை' என்பதற்கு, 'உரைக்கும் அளவும்' என்று பொருளும், 'உரைப்பனை, திசைச்சொல்' என்று விசேடக் குறிப்பும் எழுதியிருப்பதை நோக்குக; கலி. ௧௪௪: ௧௩.

௪. "பொய்வலைப் படூஉம் பெண்டு" ஐங்குறு. ௨௮௩.

௫. 'இர்' ஈறு ஈராய் விளியேற்கு மென்பது, தொல். விளி. சூ. ௧௨. நச். உரையால் அறியலாகும்.

அவர்க்கு முகமன்கூறி அவன் இயற்கைப் புணர்ச்சியிலும் பல கூறுறவொலும் என்மனத்தைத் தேற்றிப் * பின்னுந் தெளிவித்தவன் என்னை அணைத்து முலையிடத்தே முயங்கினான்; அங்ஙனம்(௧)முயங்கிப் பின்னர்த் தெளிவு பொய்யாம்படி கைவிட்ட கொலைத்தொழிலை வல்லவனை யான் தேடிக் காணேனோ? அவன் என்னைக் கண்டானாயினும் அவனால் யான் பெறும் பொலிவை அறியமாட்டீர்; என அவரை நோக்கிக் கூறி, அவர் மறுமொழி கொடாமையின், ஞாயிற்றை நோக்கி, ஞாயிறே! போக்கற்கு அரிய இருளைப்போக்கும் விசும்பிடத்து † மதி தோன்றுமாறுபோல நீயும் நீருள்ளேயுந் தோன்றுவை; அங்ஙனந் தோன்றினவிடத்து ஆண்டு வாழுந் தேரை இரை என்று தின்னப்படுதலைப் பரிகரித்துக் கொள்; என அதற்கு முகமன்கூறி, ஞாயிற்றை வானிடத்தே இருந்து எவ்விடமுங் காண்கின்ற நீ எனக்கு என்ன காரியஞ் செய்வை? ஒன்றுஞ் செய்யாயாயினும் இப்பொழுது எங்கேள்வன் யாதோரிடத்தே இருந்தானாயினும் எனக்குக் ‡ கொண்டுவந்து காட்டுவாய்; நீ காட்டாயாயின், யான் நின் கதிர்களைப் பிடித்துக்கொண்டு அவ்விசும்பிலே ஏறி அவனைப் பார்ப்பேன்; அதற்கு நீ செய்யுங்காரியம் எனக்கு அருளாத ஒப்பிலாதானை நாடி யான் பிடித்துக் கொள்ளுமளவும் ஞாயிறே! நீ குவிந்துசெல்லும் பலகதிர் பகற்காலத்தோடே இவ்விடத்தே நிற்கச் சிலகதிரோடே படுவாயாக; என்றுகூறினாள். எ - று.

அறிதிரென்றது, அறியமாட்டீர் என்ற இகழ்ச்சிக்குறிப்பு.

௩௬ அறாஅ லின் (௨) றரி (௩) முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கட் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ வெருமைய காடிறந்தான் கொல்லோ
|| வுறாஅத் தகைசெய்திவ் வூருள்ளான் கொல்லோ
செறாஅ துரானாயிற் கொள்வே னவனைப்
பெறாஅதிபா னோவே னவனையெற் காட்டிச்
சுறாஅக் + கொடியான் கொடுமையை நீயு
முறாஅ × வரைசநின் னோலைக்கட் கொண்டீ

௧. (அ) "கொலையொக்குங் கொண்டுகண் மாறல்" நான்மணி. அ; (ஆ) "கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது" முதுமொழிக். ௩௭.

௨. 'அரிமுன்கை' என்பதற்கு இவ்வுரையாசிரியர் (அ) 'அழகினையுடைய முன்கை' என்றும் (ஆ) 'மெல்லிய முன்கை' என்றும் முன்பு (கலி. ௫௪: ௩, ௫௧: ௭.) பொருள் கூறியிருக்கிறார்; ஈண்டு அத்தொடரில் அரியென்பதைப் பண்பாகு பெயராகக் கொண்டு 'ஐதாகிய மயிர்' என்று பொருள் கூறுகிறார் போலும். (இ) "அரிமயிர் முன்கை" (பொருந. ௩௨.) (ஈ) "அரிமயிர்த் திரண் முன்கை" (புறம் ௧௧: ௧) என வருதல் இப்பொருளோடு ஒப்பு நோக்கற்பாலன.

௩. "வளைமுன்கை பற்றி நலிய" கலி. ௫௧: ௧௦.

(பிரதிபேதம்) * பின்னும் என்னைத் தெளிவித்தவன் என்னை, † திங்கணீருட்டோன்றுமாறுபோல, ‡ கொடுவர்க, || அருத்தகை, + கொடியாய் கொடுமையை, × அரசாரின்.

மறாஅ * வரைசநின் மாலையும் வந்தன்
றறாஅ தணிகவிந் நோய்
தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கு
மன்னவோ காம நின் † னம்பு

எ - து: உலகத்தார் வேண்டிக்கொண்ட காரியங்களை மறாத ஞாயிறே! என் கையினின்று நீங்குதலின்றாய் ஐதாகிய மயிரினையுடைய என் முன் கையிலேகிடந்து சுழலும் வளையிடத்தைப் பிடித்துத் தெளிவித்துக் கூடினவன், பாற்பயன் கோடற்குச் சிலகாட்டிக் கறக்கப்படாத காட்டெருமைகளை யுடையவாகிய காட்டைக் கடந்துபோயினானோ? அன்றியே என்னோடு அன்புறாததோர் தகைமையை எனக்குச் செய்து இவ்வூரிடத்தே இருந்தானோ? இரண்டும் அறிகின்றிலேன்; ‡ அவனைக் கூடப்பெறாதே நோவா நின்றேன்; அதற்குமேலே நீ உண்டாக்கும் மாலைக்காலமும் வந்தது; இனி இந்நோய் என்னிடத்தினின்று நீங்காது; அவன் இவ்விடத்துளனாயின் அவனை எனக்குக் காட்டுவாய்; காட்டினால் அவனைக் கோபியாதே மனத்தாலே கைக்கொள்வேன் என்றாள்; அது காட்டாமற்படுதலின் அதனைக்கைவிட்டு (க)நடுவுநிலைமை செய்தலன்றி ஒருபாலுறாத கூற்றமே! சுறாக்கொடியையுடைய இக்காமன் செய்கின்ற கொடுமைகளை நீயும் நின் ஓலையிடத்தே ‖ எழுதிவைத்துக்கொண்டு தண்டிப்பை; அவன் ✛ எமக்கு(உ)வழிபடுதெய்வமாதலின் அவனைத் தண்டியாமற் றணிவாயாக என்று கூறினாள்; அங்ஙனங் கூறி, காமனை எதிர்பெய்து கொண்டு, காமா! நின்னுடைய அம்புகள் தனக்கு உரியதாகிய நெஞ்சினைத் தன்மேல் அன்பிலாதானொருவன் பொருட்டு வருத்துவித்தல் சிலர்க்கே யன்றி எல்லார்க்கு × மார்பு தன்மையையுடையவோ அல்லவோ? என்றுங் கூறினாள். எ - று.

---

க. இந்நூற் பக்கம் சுகச: உ-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) நாலாயிர. நாச்சியார் திருமொழி. க-ஆவது 'தையொரு திங்கள்' என்பதிலுள்ள க௦ பாசுரங்களும் (ஆ) "காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு, தாமின் புறுவர்" சீலப். க: சு௦-சுக; (இ) "தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையினாயோர், காமனங் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின், மாமணி மகர மம்பு வண் சிலைக் கரும்பு மான்றேர், பூமலி மார்ப வீவ லூரொடும் பொலிய வென்றாள்" சீவக. உ௦நிஎ; (ஈ) "பதுமா பதியெனும் பைந்தொடிக் கோமகள், கன்னி யாயந் தன்னொடுசூழ, மதிற்புறங் கவைஇய புதுப்பூங் காவின், மகர வெல்கொடி மகிழ்கணைக் காமற்கு, நகரங் கொண்ட நாளணி விழவினு, ளெழுநா ளோறுங் கழுமிய காதலொடு, வழிபா டாற்றிய போதரும்" பெருங். (௩) ரு: உஎ-௩௩ என்பவைகளும் ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * அரைசாநின், † மார்பு, ‡ யான் அவனைக், ‖ எழுதிக்கொண்டு வைத்துத் தண்டிப்பை, ✛ நமக்கு வழி, × அத்தன்மையை.

ஓகாரம், எதிர்மறை. பருப்பருந்து, ஈண்டுத்(௧)குருகென்பதனை உணர்த்தி நின்றது. மறுவரைசன், *வரோதயனென்னும் பொருட்டு. (?)

௪௮ கையாறு செய்தானைக் காணிற் †கலுழ்கண்ணாற்
(௨) பையென நோக்குவேன் றாழ்(௩)தானை பற்றுவே
னையங்கொண் டென்னை யறியான் ‡விடுவனே
(௪) லொய்யெனப் பூச விடுவேன்மன் ||யானவனை
மெய்யாகக் கள்வனோ வென்று

எ - து: அங்ஙனங் கூறி, இனி வருகின்ற இராக்காலத்து நின் அம்புகள் இறந்துபடுவியாமல் யான் உயிர்கொண்டிருக்கும்படி அருளுமாயின், அவசத் தாற் சிறிது துயிலேற்றுக் கலங்கின கண்ணாலே எனக்குக் கையாற்றைச் செய்தவனைக் கனவிலே கண்டேனாயின், அக்கண்ணைக் கடுக விழித்துப் பாராதே மெத்தெனப் பார்ப்பேன்; ✝பார்த்தபின் தப்பிப்போகாதபடி தாழ்ந்து கிடந்த துகிலைப் பிடித்துக்கொள்வேன்; பிடித்துக்கொண்டு என் (௫) மேனி வேறுபாட்டினைக் கண்டு இவள் நந்தலைவியோ × அல்லளோ வென்று ஐயத்தை நெஞ்சிடத்தே கொண்டு என்னை அறியாதே கைவிடுவனாயின் என் (௬) நாண் முதலிய குணங்களையும் மேனிநலத்தினையும் மெய்யாகக்கைக்கொண்டு ∴போன கள்வனென்று எல்லாருங் கேட்கும்படி § விரையக் கூப்பிடுவேன் என்று காமனை நோக்கிக் கூறினள். எ - று.

ஓ, அசை.

---

௧. குருகு - வளையல்.

௨. "பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய. கையுளே மாய்ந்தான் கரந்து" கலி. ௧௪௨: ௩௫-௩௬.

௩. "அரிவே யுண்க ணவன்பெண்டிர் காண த், தாருந் தானையும் பற்றி" அகம். ௨௭௬: ௮-௯.

௪. ஒய்யென வென்பது விரைய வென்னும் பொருளில் வருவதோர் இடைச்சொல்; கலி. ௩௭: ௧௮, ௧௨௧: ௯; சீவக. ௮௦௦, ௮௬௬, ௧௫௨, ௧௮௩௩, ௧௮௩௮. இவற்றில், 'ஒய்யென' என்பதன் உரை நோக்குக.

௫. "நெஞ்சம்..........தொன்னல னிழந்தவென் பொன்னிற நோக்கி, யேதி லாட்டி யிவளெனப், போயின்று கொல்லோ" நற். ௫௬: ௫-௧௦.

௬. "உள்ளங் கொண்டா ரிவரென் றுணர்த்திடப், புள்ள வாங்கணை வே ளிடைப் போதல்போ, லள்ளி லைச்செழுஞ் சோலையி லன்பரைக், கள்ளுண் கோதையர் கைப்பிடித் தேகினர்" நைடத. போதுகொய். ௨.

(பிரதிபேதம்) * வரோதையன், † கவிழ்கண், ‡ விடுவானேல், || யான்றன்னை, ✝ அப் பார்த்தவன் தப்பி, × அல்லவோ, ∴ போனவென கள்வன், § விரைவாய்க்.

௫௩. வினவன்மி *னாரவி ரென்னையெஞ் ஞான்று
மடாஅ (௧) நறவுண்டார் போல மருள
விடாஅ துயிரொடு கூடிற்றென் னுண்கண்
படாஅமை செய்தான் றொடர்பு

எ - து: அங்ஙனங் கூறி, ஊரிலுள்ளீர்! எங்களைநோக்கிக் கூறுகின்ற நீர் ஞாயிற்றையுங் காமனையும் நோக்கிக் கூறியதற்கு அவை என்செய்யுமென்று என்னைக் கேளன்மின்; எந்நாளும் என்கண் துயிலாமையைச் செய்தவன் தந்த நட்பின் உண்டான நோய் மடாநறவை யுண்டாரைப்போல மயங்கும்படி விடாதே உயிரைப்பொருந்துந் தன்மையோடே கூடிவிட்டது; இனி இவ் வுயிரைக் † காக்கும்வழி உண்டாயிற் காப்பீராக என்றுங் கூறினாள். எ - று.

௫௪ (௨) கனவிற் காணிய ‡கண்படா வாயி
னனவினன் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்
(௩) பனையீன்ற மாவூர்ந் தவன்வரக் காமன்
கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு

எ - து: அதற்கு அவர் மறுமொழி கொடாதுநிற்றலின், முற்கூறிய ஞாயிற்றையுங் காமனையுமே பின்னும் நினைந்து, வருகின்ற இராக்காலத்துக் கனவின்கண்ணே அவனைக் கண்டு ஆற்றுதற்குக் காமன்கணை செய்கின்ற கொடுமையாலே கண் துயிலாவாயின், || ஞாயிறே! (௪) எப்பொருளையுங் காட்டுகின்ற நீ நனவின்கண் வந்தாகிலும் அவனைக் காட்டாயாயில், இவ்வாறே வருத்தமுற்றுப் பனையீன்ற குதிரையையேறி (௫) அவன் என்பால் தானே வரும்படியாக அக்காமன்காலைக் கட்டிக்கொண்டு நின் அம்புகளை எனக்குத் தர + வேண்டுமென்று காமனை இன்னும் இரந்துகொள்வேன்; என்றும் × கூறினாள். எ - று.

---

௧. "நறவுண்டார் மயக்கம் போல்" கலி. ௧௪௭: ௨.

௨. (அ) "கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க், குயலுண்மை சாற்றுவேன் மன்" (ஆ) "நனவினா னல்கா தவரைக் கனவினாற், காண்டலி னுண்டென் னுயிர்" (இ) "நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற், காதலர் நீங்கலர் மன்" குறள். ௧௨௧௨, ௧௨௧௩, ௧௨௧௬.

௩. "பனையீன்ற மாவும்" கலி. ௧௩௮: ௧௨.

௪. "கண்பயங் கெடப் பெயர" (கலி. ௧௪௮: ௩) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௫. "சொற், றேற்று வந்தென் சிலம்படி கைதொழ, நோற்பன்" சீவக. அ௧௧.

(பிரதிபேதம்) * ஊரீரென்னை, † காக்கலாம் வழி, ‡ கண்படாயாயின், || ஞாயிறே! நீ வந்தாலும் எப்பொருளையுங் காட்டுகின்ற நீ நனவின்கண் அவனைக், + வேண்டு மென்று, × கூறினாள் ஆங்கதை.

எனவாங்கு

எ - து: எனச்சொல்லி. எ - று.

ஆங்கு, அசை.

கூஉ கண்ணிணைபு * கலுழ்பேங்கின
டோண்ணெகிழ்பு வளைநெகிழ்ந்தன
ளன்னையோ வெல்லீருங் காண்மின் மடவரன்
மென்னடைப் (க)பேடை †துணைதரத் தற்சேர்ந்த
வன்னவான் சேவற் புணர்ச்சிபோ லொண்ணுதல்
கா தலன் மன்ற வவனை வரக்கண்டாங்
காழ்துயர மெல்லா மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப விறைஞ்சித்
தகையாகத் தையலாள் சேர்ந்தா ணகையாக
நல்லெழின் மார்ப னகத்து.

‡எ - து: இவ்வொண்ணுதல் (உ) அன்னையோ!! என்று இனைந்து கண் கலங்கி அழுதாள்; தோண்மெலிந்து வளைநெகிழ்ந்தாள்; இப்பேதை, மடப்பம் வருதலினையும் மெல்லிய நடையினையுமுடைய அன்னப்பெடை விரைந்து செல்ல, அதனைச்சேர்ந்த அன்னச்சேவலின் கூட்டம்போலே, பின் தன் காதலன்வர ||அங்கே அவனைக்கண்டு தான் அழுந்தின துயரமெல்லாம் அறுதியாக +மறந்தாள்; மறந்து, இத்தையலாள் பின்னர் [illegible]ரிலுள்ளார் நகைத்தநகையையும்

---

க. (அ) "அன்னத் தன்ன மென்னடை யன்னத்துப், புணர்வி னன்ன தண்டாக் காதல" பெருங். (௪) கக: அ௦-அக. (ஆ) "ஆதாம் பெருகு கின்ற வன்பிறு லன்ன மொத்தும்" சீவக. கஅக. (இ) "தாவிவான் பெடைதுணை துறந்த கொல்லென, வாவிவா யிளவன மயங்கு மென்பவே" சூளா. நகர. கக. (ஈ) "தானுயி ருறத்தனி தழுவும் பேடையை, யூனுயிர் பிரிக்தெனப் பிரிந்த வோதிமம்' கம்ப. பம்பை. கரு. (உ) "அஞ்சியோடின ரன்னமுஞ் சேவலு மென்ன," பிரமோத்தா. உருத்திராக்க. ௪உ.

உ. 'அன்னையோ' என்பது ஈண்டு வருத்தத்தைக் காட்டி வந்ததோர் இடைச்சொல்; (அ) "அம்மனை யோவென் றஞ்சிப், பனிக்குநுண் ணுசுப்பிற் பாவை" (ஆ) "அம்மனை யோவெனுத், துண்ணெனெஞ்சின ளாய்" சீவக. எ௪ரு, எகூ௦. என்புழி, 'அம்மனையோ' என வருதலுங் காண்க; இஃது அச்சங் காட்டி வந்ததென்றலுமாம்.

(பிரதிபேதம்) *கலிழ்பு, †துணைதரத், ‡எ - து: எனச்சொல்லி இவ்வொண்ணுதல், ||ஆங்கே. +முன்னா மறந்தாள்.

போக்கி, போன (௧) நாணமும் தன் மெய்யிடத்தே வந்து நிற்கையாலே தலை யிறைஞ்சி, தன்மெய்யிடத்தே அழகுண்டாக மனத்திடத்தே நகையுண்டாக அந்நல்லெழின் மார்பனிடத்தே சேர்ந்தாள்; இம்மகிழ்ச்சியையும் எல்லீரும் காண்பீராகவெனக் கண்டார்வியந்து தம்மிற்கொண்டு கூறிற்றாக உரைக்க.எ-று.

இது, கண்டார்க்கு * அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'தொலைவினைக் காணேன்கொல் யான்' என்னுந்துணையும் கூறத் தகாதன கூறலின் மடனிறந்தவாறும் 'செறூஅ துளனுயிற் கொள்வேன்' என்றதனால், தன் வருத்தந் தோன்றாமற் கூறலின் வருத்தமிறந்தவாறும் 'காமன்கணை யிரப்பேன்' †என்றதனால் அவனை வருத்துவேன் என்று‡அவனைவியவாமையின் மருட்கையிறந்தவாறும் 'கலைஇய.........புருவம்' || என்று உறுப்பான் வனப்பு மிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடி வந்த தரவும் நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரான் வந்த ஓரடியானென்றும் நெடுவெண்பாட்டும் இருசீரானென்றும் குறுவெண்பாட்டும் × நெடுவெண்பாட்டும் இரண்டு குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் மூன்று நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் வஞ்சியடி யிரண்டுமுன்னர்விரவி யாப்பின் வேறுபட்ட கொச்சகவெண்பாவும் பெற்ற கொச்சகக்கலி. (௬௦)

(௧௪௮.) தொல்லியன் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு
வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்
கல்லடைபு கதிர்சுருன்றிக் கண்பயங் கெடப்பெயா
வல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல
மல்லனீர்த் திரையூர்பு மாவிருண் மதிசேப்ப
வில்லவ ரொழுக்கம்போ லிருங்கழி மலர்கூம்பச்
செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை;
அ மாலை நீ;
இன்புற்றார்க் கிறைச்சியா யிவைவதே செய்தாய்ம
னன்புற்று ரழநீத்த வல்லலுட் கலங்கிய
துன்புற்றார்த் துயர்செய்த றக்கதோ நினக்கு;

---

௧. (அ) "வதுவை யயர்தல் வேண்டுவல்......இவள், வதுவைநாணொடுக் கமுங் காண்குவல் யானே" (கலி. ௫௨: ௨௩-௨௫) என்பதும் (ஆ) அதன் குறிப்பும் (இ) "வதுவைநாட் கலிங்கத்து ளொடுங்கிய........... மடந்தை" (கலி. ௬௯: ௩-௪) என்பதும் (ஈ) அதன் குறிப்பும் (உ) இந் நூற்பக்கம் அகள: ௩-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * அவர்களாக்கம், † என்றதனை. என்றுனையவனை. ‡ அதனைவிய. || என்று முறுப்பாக. × நெடுவெண்பாட்டுமிரண்டும் இரண்டுகுறு.

௧௨ மாலை நீ;

கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்ம

னலங்கொண்டு நல்காதார் நணிநீத்த புலம்பின்க

ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு ;

௧௩ மாலை நீ;

எங்கேள்வற் றருதலுந் தருகல்லாய் துணையல்லை

பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்

திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு ;

எனவாங்கு;

௨௧ ஆயிழை மடவர லவல மகலப்

பாயிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோலப்

போயவர் மண்வெளவி வந்தனர்

சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

இது "வெளிப்படை தானே கற்பினொ டொப்பினு, ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக, வரையாது பிரிதல் * கிழவோற் கில்லை" (௧) என்பதனான் அரசன் மண்கோடற்கு ஏவுதலின் வாளாணைதிறம் பிரிவின் கண், தலைவன் வரைவிடைவைத்து வேந்தற்குற்றுழிப் பிரிந்துழி அவள் வருத்தமிகுதி கண்டார் கூறியது.

இதன்பொருள்.

தொல்லியன் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு

வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்

கல்லடைபு கதிர்சூன்றிக் (௨) கண்பயங் கெடப்பெயர

(௩) வல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல

மல்லனீர்த் திரையூர்பு மாவிருண் மதிசேப்ப

---

௧. தொல். கள. சூ. ௰.

௨. (அ) "மலர்தலை யுலகத் திருளறி விளக்கு, மன்னுயிர் விழிக்கக் கண்ணிய கண்ணும்.........பரிதிவா னவ்வே" கல். ௩௩: ௨௩-௩௧; (ஆ) "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந்தா லன்றிக், கருதுநிலப் பல்பொருளுங் காண்டலரிதாம்" திருக்குற்றலப். நூற்பயன். ௧.

௩. "குட்டுவன், குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல, வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்" சிலப். ௨௮: ௩௭-௩௧.

(பிரதிபேதம்) * கிழவற்கில்லை.

பறுப்பனசுற்றி' எனவும் 'உருவமாலைபோல' எனவும் முச்சீரான்வந்த சொற்சீரடிபெற்ற கொச்சகமும், ஓரடியான்வந்த அம்போதரங்கங்களும் *'பயிலிதழ் மலருண்கண்' எனச் சொற்சீரடிபெற்ற கொச்சகமும் வந்து கலிவெண்பாவுறுப்பின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. "முச்சீர் முரற்கையு ணிறையவு நிற்கும்" (௧)என்பதனான் முச்சீரடியும் வந்தன. (௬)

(௧௦௪.) மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்
தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாயரொருங்குதொக் கெல்லாரும்
வானுற வோங்கிய வயங்கொளிர் பணைக்கொடிப்
பாணிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்
திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ;

அவ்வழி, முள்ளெயிற் றேஎ ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்;

ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவ னீரரி
வெரூஉப்பிணை மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
குரூஉக்கட் கொலையேறு கொள்வான் வரிக்குழை

௧. தொல். செய். சூ. ௭௦.

பிரதிபேதம்) * பயிலிதழமருண்கண்.

வில்லவ சொழுக்கம்போ(௧) லிருங்கழி மலர்கூம்பச்
(௨) செல்லுமென் னுயிர்ப்புறத் * திறுத்தந்த மருண்மாலை

எ - து: ஞாயிறு தன்கதிர்களாலே ஞாலத்திடத்துப் பழைய இயல்பினை யுடைத்தாய்த் தான்செய்துபோதும் பொருள்களை விளக்குந் தொழிலிலே ஊன்றி நடத்தி, பின்னர்க் காமன் தனக்கு யான் பிரிந்திருந்தாரை வருத்துதற்கு நீ போவாயாக என்று கூறியகாரியத்தினைத் தன்றலையிலே ஏறட்டுக் கொண்டுபோவான்போலே அத்தகிரியைச் சேர்ந்து, பல்லுயிருந்தங்கண்களாற் கொள்ளும் பயன்கெடும்படி போக, தீவினையைப் போக்குகின்றவனுடைய அருளைக்கொண்ட மூடம்போலத் திங்கள் வளப்பத்தையுடைய கடலிற் றிரைமேலே தோன்றி அம்மயக்கத்தையுடைய இருளைப் போக்க, பொருளில்லாதார் நிகழ்த்தும் இல்லறம்போலக் கரிய கழியின் மலர்கள் ஒழுகக் குவிய, தேய்கின்ற என்னுயிரின் புறத்தே வந்துவிட்ட மாலாய்! நீ அறிவு மயங்குதலையுடைய மாலையாய் இருந்தாய்; என்றுங் கூறினாள். எ - று.

அ மாலைநீ

(௩) இன்புற்றார்க் கிறைச்சியா யினையவதே செய்தாய்மன்
னன்புற்று ரழநீத்த வல்லனுட் கலங்கிய
† துன்புற்றார்த் துயர்செய்த றக்கதோ நினக்கு

எ - து: அங்ஙனங் கூறியவள், அதற்குக் காரணமென்னெனின், கூடி இன்பமுற்றவர்களுக்கு நேயமாய் அவர்கள் தம்மிற் கூடும் நிலைமையையோ மிகவும் முன்பு செய்துபோந்தாய்; இப்பொழுது ஆடவர் தம்மேல் அன்புற்ற மகளிர் அழும்படி தம்மைக் கைவிட்டதனால் உண்டான அல்லலிடத்தே நின்று கலங்கிய துன்பமுற்ற மகளிரை வருத்தஞ் செய்தல் நினக்குத் தக்கதன்றே; என்றாள். எ - று.

மேல் வருகின்றவற்றிற்கும் இங்ஙனங் கூட்டி உரைக்க.

---

௧. "இம்மாலை, இருங்கழி மாமலர் கூம்ப" கலி. ௧௩௦: ௧௧-௧௨.

௨. புறம் இடப்பொருளைக் காட்டிவரும் உருபாய் வருதற்கு, இவ்வடி மேற்கோள்; நன். பெயரி. சூ. ௬௫. மயிலை. சங்கர. வி. இரா.

௩. "மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த, போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா, யாய்சிறை வண்டார்ப்பச் சினைப் பூப்போற் றளைவிட்ட, காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்" கலி. ௧௧௮: ௧-௧௨.

(பிரதிபேதம்) * இறுத்தமருள், † துன்புற்றார் துயர்ச்செய்தல்.

கஉ. மாலினீ

கலந்தவர் காமத்தைக் * கனற்றலோ செய்தாய்ம
னலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்க
ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு.

எ - து: மகளிரைக் கூடிய கணவருடைய மனவேட்கையை அம்மகளிர்க்குத் துணையாய் நின்று அவர் மனத்தினின்று நீங்காது † கனன்றெரியுந் தன்மையையோ முன்பு ‡ மிகவுஞ் செய்தாய்; இப்பொழுது அம்மகளிர் || நலத்தைக் கைக்கொண்டு பின்பு அவர்க்குக் கொடாத ஆடவராலே தந்நலம் போன தனிமையிடத்தே நின்று அலந்த மகளிர்க்குத் துணையாகாதே வருத்தமாகல் நினக்குத் தக்கதன்றே; என்றாள். எ - று.

கஙூ. மாலினீ

எங்கேள்வற் (க) றருதலுந் தருகல்லாய் துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா வில்லையோ நினக்கு

எ - து: எம்முடைய கேள்வரை × முன்புபோல மனத்தைக் கனலப் பண்ணி ஈண்டுத் தருதலுஞ் செய்திலை; ஆதலால் நீ எமக்குத் துணையல்லை; தான் பிரிந்திருந்த மகளிர்க்கு அப்பிரிவாற்றோன்றிய நோயின்வடிவு நீதானேயாய்க் கூடியவர்களுக்கு அவர் பெறும் இன்பத்திற்கோர் தெப்பமாய், இங்ஙனம் நன்மையாகாத காரியங்களைச் செய்தொழுகுமதல்லது நினக்கு நன்மையாகச் செய்யுங் காரியங்கள் இல்லையோ; என்றாள். எ - று.

இது, கலக்கம் என்னும் மெய்ப்பாடு.

+ எனவாங்கு

எ - து: என்று சொல்லி. எ - று.

ஆங்கு, அசை.

உக ஆயிழை மடவா லவல மகலப்
பா(உ)யிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் (ங) மண்வெளவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

---

க. "உண்ணலு முண்ணேன்" (கலி. உங: எ) என்பதும் அதன் குறிப்பும் நோக்குக.

உ. "ஞாயிற்று முன்ன ரிருள்போல் மாய்ந்தது" (கலி. சஉ: ஙக) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ங. "மண் வெளவி வருபவர்" கலி. ஙக: கூ.

(பிரதிபேதம்) *, கனறலோ, † நின்றெரியும், ‡ மிகச் செய்தாய், || நலத்தைக் கொண்டு, × முன்பு போன் மனத்தை, + எனவாங்கு ஆங்கசை,

* எ - து: திருந்தின இழையினையுடைய மடப்பம் வருந்துதலுடையவள் வருந்தியவிடத்தே தாரிய நிலத்தே உறைகின்ற காதலர் பகைவரிடத்துச் செய்யும் போர்த்தொழில்களைப் போய் முடித்து அவர்மண்ணைக் கைக்கொண்டு பரந்த இருட்பரப்பினை ஞாயிறு போக்கினாற்போல அவள் வருத்தம் நீங்கவந்தார்; இஃது என்னவியப்போ எனக் கண்டார்கூறியதாக உரைக்க. எ - று.

இது, கண்டார்க்கு † அவர் ஆக்கங்கண்டு மருட்கை பிறந்தது.

"தானே சேறலுந் தன்னொடு சிவணிய, வேனோர் சேறலும் வேந்தன் மேற்றே" (க) என்பதனால், முடியுடைவேந்தன் தன் பகைமேற் சென்று மண்கோடல் உரித்து என்றதனானும், வாளாணெதிரும் பிரிவு முடியுடைவேந்தர்க்குச் சிறுபான்மையென்றும் அவர் ஏவப்பிரியும் அரசர்க்குப் பெரும்பான்மையென்றுங் கூறலானும், "வெளிப்படை தானே கற்பினொடொப்பினும், ஞாங்கர்க் ‡கிளந்த மூன்றுபொருளாக, வரையாது பிரிதல், || கிழவோற் கில்லை" (உ)என்றதனான்வரைவிடைவைத்து மண்கோடற்குப்பிரிதலில்லையென்று அதனை விலக்கினமையானும் கண்டார் களவிற்கூறுதலின்மையானும், இப்பாட்டும் × அவள் மிகவும் வருத்தம் எய்தின நிலைமையைக்கண்டு வருந்தினோர் அவன் வந்து கூட வருத்தம் நீங்கினமை கண்டு வியந்து கூறிய பெருந்திணையாம்.

இதுவும் இடையிடை சொற்சீரடிவந்து எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய கொச்சகம். (௩க)

(கசக) நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினந் தஞ்சிறை படையாக
வரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்பகேள்;
ச கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
லொற்கத்து ளுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினுமஃ தெறியாது விடாதேகாண்;
அ கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க
டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்;
ஆங்கு;

---

க. தொல். அகத். சூ. ௨எ.

உ. தொல். களவியல். சூ. ௩௦.

(பிரதிபேதம்) * எ - து: என்று சொல்லித் திருந்தின, † அவளாக்கம், ‡ கிளர்ந்த, || கிழவற்கில்லை, × இவன் மிகவும்.

அணைத்தினிப் பெரும வதனின் நிலைத்துக்காண்
சினை இய வேந்த னெயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துணைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

இது வரைவு நீட்டித்துழித் தலைவியது ஆற்றமை கூறித் தலைவனை வரைவு கடாயது.

இதன் பொருள்.

நிரை (க) திமில் களிறாகத் (உ) திரையொலி பறையாகக்
கரைசேர் (ங) புள்ளினத் தஞ்சிறை படையாக
வரைசுகால் கிளர்ந்தன்ன (ச) வுரவுநீர்ச் சேர்ப்பகேள்

எ - து: நிரைத்த திமில்கள் களிறாகத் திரையொலிக்கின்ற ஓசை பறையாக இனத்தினையும் அழகிய சிறகினையுமுடைய கரையைச் சேர்ந்த புட்கள் காலாட்படையாகப் பாண்டியன் (ரு) பகைவர்மேற் படையெழுச்சியாய்ச் சென்றாலொத்த செலவினையுடைத்தாகிய வலியினையுடைய கடலைச் சேர்ந்த நிலத்தை யுடையவனே! யான் கூறுகின்றதனைக் கேள். எ - று.

(சு) தான் பாதுகாக்கின்ற கரையை அரசனைப் போலே சென்று அழிக்கின்ற கடற்சேர்ப்பனென்றதனால், தான் பாதுகாக்கப் படுகின்ற நம்மை

க. இந்நூற்பக்கம் அஉஉ: க.ஆம் குறிப்பு நோக்கற்பாலது.

உ. "குணில்பொரக் குளிறின முரசம்........முனையினுற் கடலக முழக்க மொத்தவே" சீவக. உஉஉஉ.

ங. "கம்புட் கோழியுங் கனைகுர லுரையுஞ், செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங், கானக் கோழியு நீர்நிறக் காக்கையு, முள்ளு மூரலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்" சிலப். க௦: ககச-ககக.

ச. "உரவுநீர்ச்சேர்ப்ப" (கலி. கஉஎ: உஉ) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

ரு. "முடிமன ரெழுதரு பருதி மொய்களி, றுடைதிரை மாக்கல மொளிறு வாட்படை, யடுதிற லெறிசுறா வாகக் காய்ந்தன், கடலிரண் டெதிர்ந்த தோர் கால மொத்ததே." சீவக. உஉஉங.

சு. (அ) கலி. கஉரு. தரவின்விசேடவுரையில், 'தன்னாற் பாதுகாக்கப் படுகின்ற மணற்குன்றைத் தானே கரைத்தாற்போல நின்னாற் பாதுகாக்கப்படுந் தலைவியை நீதானே வருத்தாநின்றாய் என உள்ளுறையுவமங்கொள்க' என்றும் (ஆ) சீவக. உஅ௦-ஆம் செய்யுளின் முன்குறிப்பில், 'தனக்குவேலியாகிய கரையைக் கடல் தானே கொல்லுகின்றாற் போலத் 'தமக்குக்காவலாகிய அரசனைப் படை தாமே கொல்லுகின்ற தென்றார்' என்றும் இவர் எழுதியிருப்பனவை ஈண்டு அறிதற் பாலன.

வணர்ந்துகொண்டு பாதுகாவாமல் * அழிக்கின்றானென உள்ளுறையுவமந் தந்தவாறுணர்க. இனிப் பகையின்றி இருக்கின்ற கடல் பகைபோற் றோன்றி னாற்போல, அயலார் பகைபோல அலர்கூறி வருத்துகின்றாரென்றலுமொன்று.

ச (க) † கற்பித்தார்நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் ‡ விச்சைக்கட்

டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா

(உ).லொற்கத்து || ளுதவியார்க் குதவாதான் மற்றவ

னெச்சத்து ளாயினு × மஃ தெறியாது விடாதேகாண்

எ - து: தனக்கோர் வருத்தமுற்றவிடத்து உதவினவர்கட்கு ஓர் வருத்தம் வந்தால் உதவாதவன், தன்னை நூன்முதலிய கற்பித்த ஆசிரியன் தன்பால் ஒன்றுபெறாமல் மனம்வருந்த, தன்கைப்பொருளை அக்கல்விப்பொருட்குக் கைம்மாறாகக் கொடுத்துஉண்ணானாய், தான்கற்ற விச்சையிடத்தே தப்புப் பண்ணிக்கொண்டவனுடைய கல்விப்பொருள் நாடோறுந் தேயுமாறுபோல, தானே தானாகத் தேயாநிற்பன்; அதுவேயன்றிப் பின்பு (ங) அச்செய்நன்றிக் கேடாகிய அது தன்னுடம்பினை ஒழித்து உயிர்போனவிடத்தே யாயினும் நுகர்வியாமற் போகாதுகாண். எ - று.

---

க. "குரவர் தக்கிணை காத லோடு வழங்கிலார், தீப்ப வங்களும்" சேது. சங்கதீர்த்த. ௨0.

உ. (அ) "செல்வத்துட்சேர்ந்தவர் வளனுண்டுமற்றவ, ரொல்கத்து நல்கிலா வுணர்விலார்" (ஆ) "முன்னொன்றுதமக்காற்றி முயன்றவரிறுதிக்கட், பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்" (கலி. உகு: கக - உ0, நூச: ச-கு)என்பவையும்அவற்றின்குறிப்புக்களும்இங்குஅறிதற்பாலன.

ங. (அ) "நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென, வறம்பா டிற்றே" புறம். ௩ச: ரு-எ. (ஆ) "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" (இ) "எந் நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" குறள். க0அ, கக0. (ஈ) "நன்றி, செய்குநர்ப் பிழைத்தோர்க் குய்வில வென்னும், குன்றா வாய்மை நின்றுநிலை காட்டி" கல் ச: கக-கங. (உ) "ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங், கன்றிட வொருவினை கருதிச் செய்வரேற், புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே,கொன்றிடு மல்லது கூற்றும்வேண்டுமோ" கந்த. இரணியன் யுத்த. க0. (ஊ) "உதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலா முபாய முண்டோ" கம்ப. கிட்கிந்தை. சஉ. (எ) "எந்நன்றி கொன் றார்க்கு முய்வுண்டா முய்வதில்லை யிருமை யான, செய்ந்நன்றி கொன்ற மகற் கென்றுரைக்கு நூல்" சேது. சேதுபலச். அங.

(பிரதிபேதம்) * அழிக்கின்றாயென, † கற்பித்தார்நெஞ்சு ‡ விச்சைகடப்பித்தான், || உதவி யாற் குதவாது மற்றவன், × அஃகுதெரியாது,

மகளிர்க நெஞ்சழுங்கக் கெழூவுற்ற செல்வங்க
(க) * டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
† சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்

எ - து: தான் சூளுறுகின்ற சூளுறவினைக் காண்கின்றவர் மனங்கொள் ளும்படி சூளுற்ற மனத்தையுடையவன் தான் சூளுற்ற காரியத்தினை முடிவு போகாது பொய்த்துவிடுவனாயின், தன்னைச் சேர்ந்து வாழுஞ் (உ) சுற்றத்தா ருடையநெஞ்சு தான் ஒன்றை அறியாமையால் வருந்தும்படி தன்னோடே கெழுமுதலுற்ற செல்வத்திடத்தே தானின்று அச்செல்வத்தை மேலே மேலே வளர்க்கும் முயற்சிதானும் இல்லாதவனுடைய குடி நாடோறுந் தேயுமாறு போலத் தானே தானாகத் தேயாநிற்பன்; அதுவேயன்றிப் ‡ பின்னர் அச்சூளுற வினைப் பொய்த்த (ங) தீவினை மறுமையில் விரவின் அது வாளின் வாய்கூரி தாய்ச் சுவர்க்கம் பெற்றானாயினும் நுகர்வியாமற் போகாதுகாண். எ - ற.

இது வரைந்துகொள்வல் எனச் சூளுற்றதனைப் பொய்த்தாயென்றாள்.

ஆங்கு, அசை.

கங || அனைத்தினிப் பெரும அதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்தனெயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

எ - து: பெரும! செய்ந்நன்றிக்கேடு பொய்ச்சூளுறவாகிய தீவினையின் றன்மை யாம்முற்கூறிய அத்தன்மைத்து; இனி நீதான் × அத்தன்மைத்தாதலை

க. (அ) "குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு, மாசூர மாய்ந்து கெடும்" (ஆ) "மடியை மடியா வொழுகல் குடியைக், குடியாக வேண்டு பவர்" (இ) "மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த. குடிமடியுந் தன்னினு முந்து" (ஈ) "குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து, மாண்ட வுஞற்றி லவர்க்கு" குறள். சுoக, சுoஉ, சுoங, சுoச.

உ. (அ) "சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (ஆ) "இளை யழிய வாழ்பவ னாக்கம்போற் புல்லென்று" (கலி. கo: உ, ஙரு: கஅ.) என்பவையும் அவற்றின் குறிப்புக்களும் இங்கே அறிதற்பாலன.

ங. (அ) "எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" குறள். உ0எ. (ஆ) "ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்ப தூஉம்" சிலப். பதி. ௬௭. (இ) "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழி யாது" இறை. சூ. உ. மேற்கோள். (ஈ) "உயிர்புகுஞ் சட்டக வழி தொறு முழிதொறும், பழவினை புகுந்த பாடகம் போல" கல். கக: க-உ.

(பிரதிபேதம்) * ஆளிலான் † சூள்பொய்த்த மனத்தவன் வினைவாய்ப்பின், ‡ பின்னைச்சூளுற வினை, || அனைத்துநீ, × அத்தன்[illegible]னிதாதலை.

நின் மனத்தால் நினைந்துபார்; இவள் தான் தன்கைவளையொடு * சினந்த அரசன் அவன் எயிற்புறத்தே சென்றுவிட்டவினையால் (க) உழிஞையானுக்குண்டாந வருத்தம்போலே வரைவு கடிதின்முடிதற்கு விரைதல் வரும் நெஞ்சத்தாலே பெரிதும் வருந்தினள்; இனி அவ்வருத்தம் நீங்கும்படி கடிதின் வரைவாயாக என வரைவுகடாயினள். எ - று.

இதனால், தலைவற்கு அசைவுபிறந்தது.

(உ) இது சிறுமைக்கு எல்லைகூறிய நான்கடியாயின்றி மூன்றடியான்வந்த தாவும் நான்கடித்தாழிசை இரண்டும் † ஆசிரியச்சுரிதகமும் வந்தமையால் யாப்பின் வேறுபட்ட ‡ பாநிலைவகைக் கொச்சகம். (கூஉ)

(கூ௱) அயந்திகழ் நறுங்கொன்றை யலங்கலந் தெரியலா
னியங்கெயி லெயப்பிறந்த வெரிபோல வெவ்வாயுங்
கனைகதிர் தெறுதலிற் கடுந்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கருவெஞ் சுரம்;

ரு இறந்துதா மெண்ணிய வெய்த நல்வேட்கையா
லறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவா
பிறங்குநீர் சடைக்கரந்தா னணியன்ன நின்னிறம்
பசந்துநீ யினைபையா பநீத்தநு நீப்பவோ;

கக. கரிகாய்ந்த கவலைத்தாய்க் கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த வாறென்னுள் விழுப்பொருட் ககன்றவ
ருருவவேற் றாதியா னொண்மணிக் கண்ணனின்
னுருவிழந் தினைபையா யுள்ளாது மருள்குபவோ;

கரு கொதித்துராய்க் குன்றிவர்ந்து கொடிக்கொண்ட கோடையா
லொதுக்கரிய நெறியென்னு ளொண்பொருட் ககன்றவர்

க. இந்நூற்பக்கம் ௲எக: கூ-ஆம் குறிப்புப்பார்க்க

உ. இச்செய்யுளை இளம்பூரணர் தரவின்றாகித் தாழிசைபெற்றுவரும் கொச்சகவொருபோ கென்றுகூறி, "திரைதிமில் .. ..சோப்பகேள்' இது நான்கடியாகி வாராமையிற் றாழிசையாயிற்று. 'கற்பித்தான் ..... ..... விடாதேகாண்' 'கேளிர்கள் .. ..விடாதே காண' இவையிரண்டும் தாழிசை. 'ஆங்கு, .. ..பெரிதே' இது சுரிதகம்" என்று விளக்குவார்;

தொல். செய். சூ.கசஉ. 'தரவின் றாகித'

(பிரதிபேதம்) * சினந்தஅரசன், † [illegible]சுரிதகமும், ‡ பாவகை நிலைகொச்சகம்.

புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ;
ஆங்கு;
௨௦ அரும்பெற லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கவர்
பொய்யா ராகுத றெளிந்தனை
மையீ ரோதி மடமொழி யோயே.

இது பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

இதன்பொருள்.

* அயந்திகழ் நறுங் (க) கொன்றை யலங்கலந் தெரியலா
† னியங்கெயி லெயப்பிறந்த வெரிபோல வெவ்வாயுங்
(௨) கனைகதிர் தெறுதலிற் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்

எ - து: நீர்நிலைக்கருகே விளங்குகின்ற அலங்கலையுடைய கொன்றை மாலையையுடைய (௩) இறைவன் திரிபுரத்தைஎய்கையிலேதோன்றின முழங்கும்

க. (அ) "கண்ணி கார்நறுங் கொன்றை" புறம். க: க; (ஆ) "கொன்றைத் தார் சுவற்புரள" கலி. க: கக. என்பவற்றால், கொன்றைப்பூ இறைவனுக்குக் கண்ணியும் தாருமாதல் அறியப்படும்; அஃதன்றி மாலையுமாதல் "கொன்றை யவன்" (கலி கச௨: ௨அ) என்பதன் குறிப் பால் அறியலாகும்; (இ) "கார்விரி கொன்றைப் பொன் னேர் புதுமலர்த், தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்" (அகம். கட வுள்.) என மூன்றுமாகக் கூறப்படுதல்காண்க.

௨. "கனைகதிர் தெறுதலால்" (கலி. கக : கச) என்பதும் அதன் குறிப் பும் பார்க்க.

௩. "மட்டவிழ் பூந்தார் மலைமெதாறு மரீஇய, கட்டவிழ் கூந்தற் கள்ள மங் கைய, வட்டிலு மறையும் விட்டெரி கொளுவலி, னெட்டெனக் கூறிய திசை திசை தொடராஉ, மைந்தலை யுத்தி யரவுநா ணுகை, மந்தர வில்லி னந்தணன் விட்ட, தீவா யம்பு திரிதரு நகரி, ஞெவா தெழு மடங் கூட்குவரத் தோன்றி" பெருங். (க) ௫௩: க௪௫-க௨க.

(பிரதிபேதம்) * அணர்க்திகழ, † இலங்கெயில்.

வெம்மையையுடைய நெருப்பு விசும்புற நிவந்து அழலுமாறு போல, செறிந்த கிரணங்களையுடைய ஞாயிறு எவ்வாயுஞ் சுடுகைஞலே முளிந்த (௧) மூங்கில் தம்மிலே இழைதலைக் கொண்டதாக அதனிடத்தே கடுத்தெழுந்த முழங்கிய காட்டுத்தீ அவ்விடத்தைக் கைக்கொண்டு விசும்பிலே உறஓங்கி வெம்மையைச் * செய்யும், (௨) விலங்குகள் பலகாலுந் திரிகையிஞலே மயங்கின அதனையுடைய, மலைகள் பரந்துகுறுக்கிட்டுக் கிடக்கும் போதற்கரியசுரத்தை.எ - று.

செய்யுஞ்சுரம். அதனையுடையசுரம், போதற்கரியசுரம்; என்க.

விலங்கு, வருவிக்க. அலங்கலையுடைய கொன்றை என்றூர், (௩)தாராகப் பூத்தலின். அலங்கல், அசைவுமாம்.

எ இறந்துதா மெண்ணிய வெய்துதல் வேட்கையா
லறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவர்

---

௧. (அ) "ஞெலிக்கழை முழங்கழல் வயமா வெரூஉங், குன்றுடை யருஞ்சுரம்" (ஆ) "முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச், சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கு, மின்று வருஞ்சுரம்" ஐங்குறு. ௩௦எ, ௩௩௬. (இ) "கைப்பொருத வோசையாற் கண்ணுமிழ்ந்த செந்தீயான், மெய்ப்பொருது மீதெழுந்த வெம்புகையா-னைப்ப, வெதிர்வேங் கடுங்கானம் போன்றதே வெம்போ, ரெதிர்வேர்தர் செய்த விடம்" பாரதம். (ஈ) "வயிரமெனுங் கடுநெருப்பை மிகமூட்டி வளர்க்கினுயர் வரைக்கா டென்னச், செயிரமரில் வெகுளிபொரச் சேரவிரு திறத்தே முஞ் சென்று மாள்வோம்" வில்லி. கிருட்டினன். ௬.

௨. (அ) "மாநிரை, மாஅல் யானை யொடு மறவர் மயங்கித், தூறதர் பட்ட வாறுமயங் கருஞ்சுரம்" கலி. ௫: ௧-௩, (ஆ) "மாமறுகலின் மயக்குற்றன வழி"...........(இ) "மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி" நாற். ௬. ௧௬௧. மேற்கோள்.

௩. (அ) "ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய, பேதையங் கொன்றைக் கோதைநிலை நோக்கி" (ஆ) "குறும்பல் கோதை கொன்றை மலர" ஐங்குறு. ௪௬௨. ௪௬எ. (இ) "நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன" பரி. ௧௪: ௧௦. (ஈ) "பொன்போறூர் கொன்றை புரிந்தன" திணைமாலை. ௧௦௬. (உ) "தாரி ஞர்விரி கொன்றையாய்" (ஊ) "தொடைநவில் கொன்றையந் தாரிஞனும்" (எ) "தொடை மலி யிதழியும்" (ஏ) "தொடைய வார்நறுங் கொன்றையான்" (ஐ) "தொடைநவில் கொன்றை யொடு" (ஒ) "தாரணி கொன்றையும்" (ஓ) "தாருறு கொன்றை தம்முடி வைத்த சைவனூர்" (ஔ) "கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார்|கொண்டார்" தேவாரம் (ஃ) "கொன்றைகண்மேற், றூங்குபொன் மாலைக ளோடு" நாலா யிர.நாச்சியார். ௬ . ௬.

(பிரதிபேதம்) * செய்யுஞ் சுரத்தையென்க மலைகள்பரந்து.........போதற்கரியசுரம் விலங்குகள்......அதனையுடைய சுரம் விலங்குகளையில்.

(க) பிறங்குநீர் சடைக்கரந்தா னணியன்ன நின்னிறம்
பசந்துநீ யினையையாய் * நீத்தலு நீப்பவோ

எ - து: ஆயிழாய்! தாம் எண்ணிய காரியங்களைப் பெறுதலானுள்ள விருப்பத்தாலே அறத்தினைக் கைவிட்டு வெஞ்சுரத்தையிறந்து பிறங்குகின்ற நீரைச் சடையிலே மறைத்தவனை ஒத்த பொருளாக்கத்திலே பிரிந்தவர் அழகினையுடைய நின்னிறம் பசந்து நீ இத்தன்மையையாக நின்னைக் கைவிடுதலுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண். எ - று.

(உ) இறைவனை ஒத்தபொருள் என்றார், பொருள் நின்றுழிநில்லாது பலரிடத்துஞ் சென்றதேனும் ஒன்றானும் தனக்குக் கேடின்றி யிருத்தலின்.

அணி-அழகு.

கக கரிகாய்ந்த கவலைத்தாய்க் (௩) கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த வாறென்னார் விழுப்பொருட் ககன்றவ
ருருவவேற் றார்தியா † னொள்ளணிநக் கன்னநின்
‡ னுருவிழந் தினையையா யுள்ளலு முள்ளுபவோ

எ - து: வெந்த கரியினையுடைய பல வழியினையுடைத்தாய்க் கற்கள் காய்ந்த காட்டகத்தை வெருவுதல் வந்த வழியென்று கருதாராய் வடிவையுடைய எறுகிய ஊர்தியையுடையானை ஒத்த விழுப்பொருட்கு அகன்றவர் ‖ நக்கஒள்ளிதாகிய அணியினையுடைய நின்னுருவை இழந்து நீ + இத்தன்மையையாக அப்பொருளையேநினைத்தலையுஞ் செய்வாரோ? அங்ஙனஞ்செய்யார் காண். எ - று.

∴ நக்கு என்னும் எச்சம் ஒள்ளிதாகிய என்னும் வினை கொண்டது.

---

க. "தேறுநீர் சடைக்கரந்து" கலி. க: உ.

உ. "அருவிதாழ்ந்த" (புறம். கக௲அ: கூ) என்னும் செய்யுளில் 'ஆலமர் கடவுளன்னநின்' என்றதற்கு ஆலின்கீழமர்ந்த முக்கட் செல்வனாகிய கடவுளையொப்ப என்னும் நிலைபெற் றிருப்பேனென் றிருக்கின்ற நின் னென்று ரைப்பினுமமையும்' என்று எழுதியிருக்கும் பின்னுரையும் "வீதலறியா விழுப்பொருள்" (கலி. அகூ: உக) என்பதற்கு எழுதியிருக்கும் உரையும் ஈண்டு அறிதற் பாலன.

௩. (அ) "மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்" (கலி. அ: கூ) என்பதும் (ஆ) "மலைவெம்ப" (கலி க௩: ௫) என்பதும் (இ) அதன்குறிப்பும் ஒப்பு நோக்கற் பாலன.

(பிரதிபேதம்) * நீக்கனு[illegible]லோ. † ஒண்ணக்க வளையணநின், ‡ வெருவிழந்து, ‖ நமக்கு [illegible] வளை[illegible]டைய, + இதகன்மையாக, ∴ [illegible]என்னும்.

வேயுறழ் மென்றோட் பெயில்பெறும்' வெந்துப்பிற்
௨௫ சேளய் சினனஞ்சான் சார்பவ னென்றுங்
கறைவனர் நல்லாரை யாயர் முறையினு
ஞண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி ;

௨௯ அவ்வழிப், பறைபெழூந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கை ளாதி ரெடுத்த
நறைவலஞ் செபவிடா விறுக்தன வேறு;
௩௨ அவ்வேற்றின்,
மேணிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனுது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம் ;

௩௯ இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோட்டழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று
வெருவரு தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம் ;

௪௫ தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம் ;

௫௧ ஆங்க, செறுத்தறுத் துழக்கி யேற்றெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழூந் தார்ப்ப

கொதித்துராய்க் குன்றிவர்ந்து (௧) கொடிக்கொண்ட கோடையா
லொதுக்கரிய நெறியென்னு ரொண்பொருட் ககன்றவர்
(௨) புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
* கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ

எ - து: ஞாயிறு கீழ்த்திசையிடத்து உதயகிரியிலே வந்து தோன்றிப் பின்பு கொதித்துப் பரந்து தான்கொண்ட கோடைக் காலத்தாலே போதற்கு அரிய வழியென்று கருதாராய்ப் புதிய திங்களாகிய கண்ணியையுடையானை யொத்த ஒள்ளியபொருட்கு அகன்றவர் பொன்னாற்செய்த தலைக்கோலங்கள் தாழ்ந்து விளங்கின நின்மயிர் அவ்வாறன்றிக் காய்கின்றஅழகை நீ யுடையை யாக அப்பொருள் வேட்கையை மனத்தாற் காணுதலையுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண். எ - று.

ஆங்கு, அசை.

அரும்பெற (௩)லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கவர்
பொய்யா ராகுத றெளிந்தனை
மையீ ரோதி மடமொழி யோயே

எ - து: கருமையினையும் நெய்ப்பினையுமுடைய † ஓதியினையும் மடப்பத்தையுடைய மொழியினையுமுடையாய்! பெறுதற்கு அரிய ஆதிரைநாளையுடைய(௪) இறைவன் திருமேனி அழகைப்பெறும்படி மலர்ந்த பெரியகுளிர்ந்த இச்சண்பகம் பருவம்பொய்யாதவாறுபோல அவர் தாம் கூறிய பருவத்தைப் பொய்யாராய்வருதலை அவர்கூறியகூற்றால்நீயும்யானும் ஒருங்கு தெளிந்தேம்;

௧. "கொடிமிசை மையறு மண்டிலம்" கலி. ௧௪௯: ௧௧-௧௨.

௨. (அ) "திங்கட் புதுமுகிழ் சூடினாரே" தேவாரம். (ஆ) "குளிர் மதிக் கண்ணியாற்கு" சீவக. ௨௦௮. (இ) "அங்கெடு வேணியிற் கண்ணியென விருந்து, தூற்றுமறு வொழிந்த வேற்றுத் தானும்" கல். ௨௩: ௩௨-௩௩; (ஈ) "திங்கட் கண்ணி முழுமுதலை" கூர்ம. தக்கனைச். ௧௧. (உ) "மாசறு மிளமதிக் கண்ணி வார்சடை, யீசன்மேல்" காசி. காசியின் சிறப்பு. ௨௭. (ஊ) "திங்களங் கண்ணி யானை" சேது. சீதைகுண்டச். ௪௩. (எ) "ஆறுடிய வேணியின் மீமிசைமிக் கவிழ்தாடிய வெண்மதிக் கண்ணியனே" (ஏ) "நாண்மதிக் கண்ணி யார்தாம்" திருவானைக்காப். பராசரன். ௪௧, கவுதமப். ௯௩. (ஐ) "வினையு மாமதிக் கண்ணியான்" விநாயக. கணபதி. ௧௪. (ஒ) "உருவவெண் டிங்கட் கண்ணி யொண் சுடர்க்கு" உத்தரகோச. ஐந்தெழுத்து. ௧௯.

௩. "பின்னரு, மாதிரையா னென்றென் றயர்வுறமா, லூர்திரைநீர் வேலி யுலகு" முத்தொள். கடவுள் வாழ்த்து.

௪. "செண்பக மலரெனச் சிவந்த மேனியாள்"

(பிரதிபேதம்) * கதுப்புலருங் கவினை, † ஓதியினையுடைய மடப்பத்தை.

அங்ஙனந் தெளிந்த பருவங் கழிவதற்கு முன்னே வருவர்; அவர் மொழியைத் தெளிவாயாக என ஆற்றுவித்தாள். எ - று.

இது கைம்மிகலென்னும் மெய்ப்பாடு எய்திநின்ற தலைவிக்குப் பின்னர்ச் சூழ்ச்சி பிறந்தது.

(க) இஃது இளவேனிற் பருவங்குறித்து வற்புறுத்திப் பிரிய ஆற்றியிருந்து அப்பருவம் வந்தபின்னர் ஆற்றாளாய் இரங்குகின்ற தலைவியைத் தோழி ஆற்றுவித்தலான் இரக்கமாகிய உரிப்பொருள் சிறத்தலின், அவ்வுரிப்பொருள் முதலிலுங் கருவிலுஞ் சிறந்ததென்று இரக்கத்திற்கு உரிய நெய்தலிற் கோத்தார்; "முதல்கரு வுரிப்பொரு ளென்ற * மூன்றே, நுவலுங் காலை முறைசிறந் தனவே, பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (உ) என்றாராகலின். இது பாலைக்கு உரிய முதலுங் கருவும் † வந்து அதற்கு உரிய உரிப்பொருள் சிறவாமல் நெய்தற்கு உரிய உரிப்பொருள் சிறந்ததாயிற்று.

இது தரவியல் ஒவ்வாது ‡ அதனகப்பட்டுவந்த சுரிதகத்தானிற்ற ஒத்தாழிசைக்கலி. (கஙு)

"முல்லை ‖ குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (ங)என்புழி, சொல்லாதமுறையாற் சொல்லவும் படுமென்றலின் இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென இம்முறையே × கோத்தார் + நல்லந்துவனார்.

நெய்தற்கலி முற்றும்.

## கலித்தொகை முற்றும்.

நெய்தற்கு ஆசிரியன் பாரத்துவாசி

நச்சினார்க்கினியன் செய்த

உரை முற்றும்.

---

க. "திணைமயக் குறுதலும்" என்னுஞ் சூத்திரவுரையில் 'மயக்குறுதலும்' என்றதனான் அவ்வவ நிலங்கட்கு உரிய முதலுங்கருவும் வந்து உரிப்பொருள் வேறாதலன்றி அவ்வந் நிலங்கட்கு உரித்தல்லாத முதலுங் கருவும் வந்து உரிபொருண் மயங்குவனவுங் கொள்க வென்றும், 'தெய்வமுணாவே' என்றுஞ்சூத்திரத்தினுரையில் 'எந்நில மருங்கின்' என்பதனால் பூவும் புள்ளும் வரைவின்றி மயங்கு மெனவே ஒழிந்த கருவும் மயங்கு மென்பது 'சூத்திரத்துப் பொருளன்றியும்' என்பதனை உரையிற் கொள்க வென்றும் கூறி இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; தொல். அகத். சூ. கஉ; கஅ.

உ. தொல். அகத். சூ. ங.

ங. தொல். அகத். சூ. ரு.

(பிரதிபேதம்) * மூன்றெனா, † வந்துபாலைக்குரிய, ‡ அதன்சணகப்பட்டு. ‖ குறுஞ்சி, × கோத்தா கலித்தொலகக்கு ஆசிரியன்பார்த்துவாறி நச்சினார்ச்கினி யான் செய்த உரைமுற்றும், + நல்லந்துவனா.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

---

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிதி * னுணர்ந்து
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னூற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
† தேக்கிய சிந்தைய ராகிப் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த ‡ வழுக்கின்றோல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறையு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முறையிடை யிட்ட காண்டிகை யுரைந்நூ.
ஆன்றோர் ‖ புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு × முணர்பவர்க் கெல்லா
முரையற + முழுதும் புரைபட வுரைத்தும்,
ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி

---

(பிரதிபேதம்) * உரைதநுப், † தேர்ததமைச்சிந்தைய, ‡ வழுத்து தொல், ‖ புகழ்வறிவினிற், × உரையபவர்கெல்லாம், + முழுதும் படைவுரு விதநும்.

முறைப்பட வினையை முடித்துக்'காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற * விளம்பியும்,
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப † வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தரு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து ‡ பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்,
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்,
தண்டமிழ் ‖ தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத்து வாச
னன்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை நச்சினார்க் கினிய
× னிருவினை கடியு மருவியம் பொதியின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
வூழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை யானே.

---

(பிரதிபேதம்) * அமைத்தும், † வரைபெரு வஞ்சிப், ‡ பொருட்டொடர் படுத்து, ‖ தெரிந்தவண் புகழ், × அருவினைகடியும்.

தொல்காப் பியத்திற் ஜெருகுத்த பொருளனைத்து
* மெல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்—சொல்லார்
†மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

---

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினைற் றிசையு முண்ணு ‡ மமிழ்தென வெழுநா வெச்சின்
மெச்சுநா ணுளநம் விண்ணோர் || மிசைகுவர் வேத போத
× னச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.

---

## +கலித்தொகைக்கு

ஆசிரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியன் செய்த

உரை முற்றும்.

---

(பிரதிபேதம்) * எல்லார்க்கு மேற்பவினிது, † மதுரா புரியினியான் மாமறையோ னின்பக், கதிரார் சுடர். ‡ அமிர்தென || நுகருவர், × நச்சினார்க் கினியா னுவி னல்லுரை நவில்வர் நல்லோர். + கலித்தொகைக்கு நச்சினார்க்கினியர்

பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ
தொழுவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி லல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ ;
பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு;
நெற்றிச் சிவலை நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப வதுபெரி
தற்றீயா னாயர் மகள் ;
தொழீஇ; ஒருக்குநா மாடுங் குரவையு ளம்மை
யருக்கினான் போனோக்கி யல்லனோய் செய்தல்
குருஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ வாயர் மகன் ;
நேரிழாய், கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூராரை யுச்சி மிதித்து ;
ஆங்கு;
தொல்கதிர்த் திகிரியாற் பரவுது மொல்கா
வுருமுறழ் முரசிற் றென்னவற்
கொருமொழி கொள்கவிவ் வுலகுட னெனவே.

இது "நாடகவழக்கினும்" என்னும் (௧)சூத்திரத்துப் "பாடலுளமையாத" என்றதனல் ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக்

௧. தொல். அகத். சூ. ௫௩. இச்சூத்திரத்தின் இவருரையினும் இச்செய்யுள் மேற்கோளாக இக்குறிப்பு, சிறிதுவேறுபாட்டோடுவிளக்கமாக உளது.

கூறி, இக்குரவையுள் அவனைப் பாடுகம் வாவென்றுரைத்து, அவன் உடம்பாட்டினுள், தான் அலராச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையுங் கூறிப் பாடி, பின்னர்த் தோழி நமர் அவற்கு நின்னைக்கொடைநேர்ந்தாரெனக்கூறியது.

இதன் பொருள்.

(௧)மலிதிரை யூர்ந்துதன் (௨)மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
(௩) *புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய (௪)வாடாச்சீர்த் (௫)தென்னவன்
௫ றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
(௬)வானுற வோங்கிய வயங்கொளிர் (௭)பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்

௧. தரவு ஈற்றடி குறைந்தும் வருமென்பதற்கு "மலிதிரை.........தொழூஉ" என்னும் பகுதி மேற்கோள். தொல். செய். சூ. ௧௧௬. நச்.

௨. "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு, தென்றிசை யாண்ட தென்னவன்" சிலப். ௧௧: ௧௭ - ௨௨. என்பதும் 'அங்ஙனமாகிய நிலக்குறைக்கு சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக்குண்டூர்க் கூற்றமுமென்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்ட தென்னவன்' என்றெழுதிய உரையிலுள்ள செய்தியும் ஈண்டு அறிதற்பாலன.

௩. அரசர் பிறவரசரிடம் வலியாற்கொண்ட நாட்டைத் தமதென அறிவித்தற்காக அங்கே தம் கொடியைப் பலருமறியப் பொறித்தல் மரபு; இதனை, "கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி, நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த, குடிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (புறம். ௫௮: ௩௦ - ௩௨) என்பதனாலும் அறிக.

௪. "வாட்டருஞ்சீர்" சிலப். ௧: ௪௧.

௫. "வீவில் குடிப்பி னிருங்குடி யாயரும்" கலி. ௧௦௫ ௭.

௬. "தேப்படுபனையின்றிரள்பழத்தொருவிதை, வானுறவோங்கி" வெற்றி.

௭. பனைமுன் கொடிவரின் ஐகாரங் கெடாதுநிற்றற்கு, "பனைக்கொடி" என்பது மேற்கோள்; தொல். உயிர். சூ. ௮௩. இளம். நச்.

(பிரதிபேதம்) * புலிவொடு.

பொருமுரண் மேம்பட்ட *பொலம்புனை புகழ்நேமித்
(௧)திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
(௨)மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மா(௩)கடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த †சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ

---

௧. "திருமறு மார்பநீ யருளல் வேண்டும்" பரி. ௧: ௩௬. திருமறு—ஸ்ரீவத்ஸம்.

௨. "உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக், கண்ணணங் கவிரொளிக் கடவுள்" பெருங். (௧) ௫௩: ௧௫ - ௧௬.

௩. (அ) "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" திருமுரு. ௪௫ - ௪௬. (ஆ) "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச், சேயுயர்பிணிமுக மூர்ந்தம ருழக்கித், தீயழ லுவைப்பத் திரியவிட் டெறிந்து, நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து, வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய, கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொஃறகை, மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்" பரி. ௫: ௧-௭. (இ) "கட்டுடைச் சூருடல் காமங்கொண்டு. பற்றிபுட் புகுந்து பசுங்கடல் கண்டு, மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேற், சேவலங் கொடியோன்". (ஈ) "விண்ணுடைத் தண்ணும் கண்ணிலா வொருத்தன், மறிதிரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு திருவேற், பணிப்பகை யூர்தி" (உ) "மேல்கடற் கவிழ்முகப் பொரியுடன் மாவு, நெடுங்கடற் பாப்பு மடுந்தொழி லரக்கரு, மென்னுளத் திருளு மிடைபுகுந் துடைத்த, மந்திரத் திருவேன் மறங்கெழு மயிலோன்" (ஊ) "கடுவினை யங்குரங் காட்டியுள் ளழுக்கா, றெண்டிசைச் சாகைகொண் டிருண்மனம் பொதுளிக், கொடுங்கொலை வகுத்துக் கடும்பழிச் சடையலைந், திரண்டைஞ்ஞூ றிரண்டவக்காவதஞ், சுற்றுடல்பெற்றுத் துணைப்பதிற்றுயிர, மற்றதி னீண்டு மணியுடற் போகி, யைம்பது நூறுட னகன்றுசுற் றொழுக்கிப், பெருங்கவி ழிணர்தந் தலைகீழ்க் குலவிய, வடன்மாக் கொன்ற நெடுவேற் குளவன்" கல். ௧௧: ௪ - ௭; ௬௧: ௨௭ - ௩௦; ௭௩: ௨ - ௫; ௮௬: ௧ - ௬. என்பவைகளும் (எ) "நளியிரும் பரப்பின் மாக்

(பிரதிபேதம்) * புலம்புனை, † சேவுமாங்க.

எ - து: தன் நாட்டைக் கடலினுடைய மிக்க திரையேறிக் கைக் கொண்டுவிடுகையினாலே தனக்கு நாடு இடமுண்டாம்படியாக மனத்தின் இளைப்பின்றாய்ப் பகைவரைத் தன் வலியினாலே தாழ்க்கவேண்டி அவர்மேலே சென்று அவருடைய புலிப்பொறியையும் விற்பொறியையும் அவர் நாட்டினின்றும் போக்கி விளங்குகின்ற கயலை அவ்விடத்தே பொறித்த புகழை யுடைய கெடாத தலைமையினையுடைய பாண்டியனுடைய பழைய புகழை நிலைபெறுத்தின குடியோடு ஒக்கத் தோன்றின பசுவினத்தில் ஆயரெல்லாரும் சேரத் திரண்டு விளங்குகின்ற வானிலேயுறும்படி *ஓங்கிய ஒளிபெருகுகின்ற (க)பனைக்கொடியினையுடைய(உ)பாலின துநிறத்தையுடைத்தாகிய நிறத்தினை

கடன் முன்னி, யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சினவிறல்வேள்" (பதிற். கக: ௬-௬) என்பதும் அதில் சூருடை முழுமுதலென்பதற்கு, 'சூரவன்மா, தனக்கு அரணாகவுடைய மாவின்முதலென்றவாறு; இனி, சூரவன்மா, தான் ஒருமாவாய் நின்றானென்று புராணமுண்டாயிற் சூரனுதற் றன்மையையுடைய மாவின் முதலென்றவாறாய' என்று எழுதியிருக்கும் உரைப்பகுதியும் (ஏ) "போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக், காரெதிர்ந் தேற்ற கமஞ்சூ லெழிலிபோ, னீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச், சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரி. கஅ: க-௪) என்பதும் அதன் உரையும், (ஐ) "கவிழிணர், மாமுத றடிந்த மறவில் கொற்றத், தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்" திருமுரு. ருக - சுக. என்புழி, "மாமுத றடிந்த" என்பதற்கு 'அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான்' என்று எழுதியிருக்கும் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன.

க. (அ) "அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்" புறம். ருசு: ௪. (ஆ) "பொற்பனை வெள்ளையைப் போற்றாதொழுகின்ற" இன்னா. க. (இ) "மடற்பனை யுயர்த்த மதிநிறப் பெருமனுக்கு" (ஈ) "கார், வெண் டோட்டிளம் பனைமிமிசை யுயர்த்தோனென விளர்த்த"(உ)"வானுற்ற தண்பனை யுயர்த்தவன்" (ஊ) "கள்ளவிழும் வெண்டோட்டுக் கரும் பனைமீ மிசையுயர்த்த, வெள்ளிவரை யனையானும்" (எ) "போந்தை மீதுயர்த்த வென்றிப் புரவலன்" பாகவத. (க) சையாதி, உ௪. (க0) வேய்ங்குழல். கக. உருக்குமிணி மண. க. பிரத்துமனன் மணம். க௪. சுபத்திரைமணம். கஅ.

உ. (அ) "பானிற வண்ணனோக்கிற் பழியுடைத்து" சீவக. உ0௬. (ஆ) "பான்மேனியான்" பழ. கரு.

(பிரதிபேதம்) * ஓங்கிய பனைக்கொடி.

யுடையவனைப்போலே பழித்தலற்ற வெள்ளையேற்றையும் பொருகின்ற மாறு பாட்டினாலேஏனையவற்றின்மேலான பொன்னாற்புனைந்தபுகழையுடைத்தாகிய சக்கரப்படையையுடைய திருவாகிய மறுவையுடைத்தாகிய மார்பனைப் போலே அமைந்த கரிய ஏற்றையும் மிக்குவிளங்குகின்ற தாழ்ந்த (௧) சடையினையும்ஒரு*பாகத்திலேமேவுதல்வரும்பிறைபோன்றநுதலினையுடையாளையுமுடைய மூன்றுகண்ணினையுடையானுடைய நிறம்போலே மாறுபாடு மிக்க குராலேற்றையும்பெருமையையுடையகடல் கலக்கமுறும்படி உள்ளேசென்று மாமரத்தைவெட்டின மிளிரும் †போரையுடைய வேலை ஏந்திய (௨)முருகனது நிறம்போல *அழகமைந்த சிவந்த ஏற்றையும் அவ்வாப் புகரும் குணத்தினையுடைய வற்றையும் ஒப்பில்லாத பிறவற்றையும் வடிவையுடையவாகியபல மேகங்கள் திரண்டவைபோல முழங்கும்படி விரும்பி விரும்பித் தொழுவிலே புகுதவிட்டார். எ - று.

௧௮ அவ்வழி, (௩)முள்ளெயிற் றேஎர் (௪)இவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்

எ - து: ‡அவ்விடத்து இந்த ஒப்பில்லாத வெள்ளிய ஏற்றின் கழுத்திலே கிடக்குமவன் கூரிய எயிற்றினையும் அழகினையுமுடைய இவளைக் கூடும். எ-று.

---

௧. (அ) "பிறைநுதல் வண்ணமாகின்று" (ஆ) "கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப், பிறைநுதல் விளங்கு மொருகண்போல" (இ) "பால்புரை பிறைநுதற் பொலிந்தசென்னி. நீல மணிமிடற்றொருவன்" புறம். ௧:௯. ௫௫: ௪ - ௫ ௯௧: ௫ - ௬ (ஈ) "பிறைநெற்றியோடுற்ற முக்கண்ணினார்" (உ) "பிறைதாங்கு நெற்றியர்" (ஊ) "பிறைசேர் நுதலிடைக் கண்ணமர்ந் தவனே" (எ) "திங்க டிலகம் பதிக்க நுதலர்" தேவாரம். என வருதலால், பிறைநுதலென்பதற்கு, பிறையணிந்த நுதலென்று பொருள்கொண்டு 'சடைமேவரும்'என்பதற்கு அதற்கேற்பப்பொருள் கொள்ளினும் அமையும்.

௨. முருகவேள் செந்நிறமுடையவரென்பதை, 'செவ்வேள்' 'சேய்' என வழங்கும்பெயர்களும் வலியுறுத்தும். "உருவு முருவத்தீ யொத்தி" என்பது பரி. ௧௯: ௯௯.

௩. (அ) ஏறுதழுவினுக்குரியவிவளெனவந்த கைக்கிளைக்கு, "முள்ளெயிற்றேஎர்...... .....கொள்பவன்" என்னும் பகுதி மேற்கோள். தொல். அகத். சூ. ௧௩. நச். (ஆ) முள்ளெயிறு இந்நூற்பக்கம் ௩௩: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௪. "இவளைப் பெறுமிதோர்... .......சார்பவன்" இவ்வடிகளோடு "காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறுமிவ், வேரி மலர்க்கோதை யாள் ..

பிரதிபேதம்) * பாகத்தேமேவுதல், † போரையுடைய முருகனது, ‡ அவ்விடத்து நல்லாய
ரிந்த வொப்பில்லாத.

௨௦ ஒள்ளிழை, வாருறு(௧)கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
(௨)காரி கதனஞ்சான் கொள்பவன்

எ - து: கூரிய கொம்பையுடைய கரிய ஏற்றினது கோபத்தை அஞ்சாது அதனைத் தழுவுமவன் இந்த ஒள்ளிய இழைபினையுடையாளுடைய வாருதலுற்ற கூந்தலிலே துயிலுதலைப் பெறும். எ - று.

௨௧ ஏரி
*வெரூஉப்பிணை (௩)மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
(௪)குரூஉக்கட் கொலையேறு கொள்வான்

எ - து: குரால் †நிறத்தவாகிய கண்ணினையுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றைத் தழுவுமவன், வெருவுதலையுடைய பிணையாகிய மானைக்குப் போலும் நோக்கினையுடைய இரண்டாகியகண்களையுடைய இந்த ‡நல்லாளைக் கூடும். எ - று.

(௫)அரி, ஆகுபெயர்.

௨௨ வரிக்குழை,
வேயுறழ் (௬)மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
||சேஎய் சினனஞ்சான் சார்பவன்

---

........பூவைப் புதுமல ரான்" (சிலப். ௧௭: கொளு, ௧ - ௭.) என்னும் பகுதிகள் ஒப்புநோக்கற் பாலன.

௧. (அ) "மகளிர், விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து" பதிற். ௫௦: ௧௮ - ௧௯. (ஆ) "இருளெங் கூந்த லின் றுயில்" (இ) "கூந்தன் மெல் லணைத் துஞ்சி" அகம். ௨௩௩: ௧௫, ௩௦௮: ௧௩. (ஈ) "இருண்மென் கூந்த லேமுறு துயிலே"

௨. "காரி கதனஞ்சான்" கலி. ௧௦௪: ௭௪.

௩. "மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே"

௪. "குரூஉக்கட் கொலையேறு" கலி. ௧௦௪: ௭௧.

௫. அரி, செவ்வரி கருவரி; இச்சொல் இங்கே அவற்றையுடைய கண்ணை உணர்த்தி நிற்றலான் ஆகுபெய ரென்றார்.

௬. ஆடவர் தம்மனைவியர்தோளிற் றுயில்வதாகக் கூறல் மரபு: (அ) "அரிவை தோளிணைத் துஞ்சிக், கழிந்த நாளிவண் வாழு நாளே" குறுந். ௩௨௩. (ஆ) "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ, றாமரைக் கண்ணா னுலகு" குறள். ௧௧௦௩.

(பிரதிபேதம்) * வெரூப்பிணை, † நிறத்தையுடையனவாகிய, ‡ நல்லோளை கூடும்வரிக்குழை.
|| சேஎசினனஞ்சான்.

எ - து: வெய்ய வலியினையுடைய சிவந்த எற்றினது சினத்தை அஞ்சானாய் அதனைத் தழுவுமவன், வரியினையுடைத்தாகிய குழையினையுடையா ளுடையமுங்கிலையொக்கும் மெல்லியதோளிலே* துயிலுதலைப் பெறும். எ-று.

வரி - (க) அருப்புத்தொழில்.

௨௫ என்றுங்

கறைவனர் நல்லாரை யாயர் முறையினு
ணண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி

எ - து: †என்று நல்லாயர் தமக்குரிய முறைமையாலே‡சுற்றுவனவாகிய் நாளாகிய மீன்கள் தன்னிடத்தைச் சூழப்பட்டமதிபோலே அவ்விடத்திலிட்ட பரண்களின்மேலே தத்தம் மகளிரைத் திரளாக ஒப்பித்து நிறுத்தினார்.எ - று.

(௨) மீனும் மதியும், ஆயத்திற்கும் மகளிர்க்கும் ||உவமை.

௨௬ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோளெதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா விறுத்தன வேறு

எ - து: அவ்விடத்துப் புகை வலம்வர விடப்பட்டு நிறுத்தப்பட்டன வாகிய எறுகள், பறை மிக்கொலிக்கையினாலும் பலரும் ஆரவாரிக்கையினாலும் வலிகுறையாத ஆயர்கோடற்றொழிற்கு எதிரே என்றன. எ - று.

௩.௨ அவ்வேற்றின்

(௩) மேணிலை மிகலிகலின் மிடைகழி யிழிபு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்

---

க. அருப்புத்தொழில் என்றது ஆபரணங்களில் நுண்ணிதாகச் செய்யும் சிறிய அரும்புபோன்ற வேலைகளை. "தாள் களங்கொலக் கழல்பறைந்தன" (புறம். ௪: ௩) என்புழி 'கழல்பறைந்தன' என்பதற்கு, 'வீரக்கழ அருப்புத்தொழில் பறைந்தவை' என்று எழுதியிருக்கும் உரை ஈண்டுஅறிதற்பாலது.

௨. "தாரகையோடு ஆயத்தார்க்கு ஒத்த பண்பு, பன்மையும் ஒன்றற்குச் சுற்றமாய் அதனிற் றாழ்ந்து நிற்றலும்.........மதியோடு தலைமகட்கு ஒத்த பண்பு, கட்கினிமையும் சுற்றத்திடை அதனின் மிக்குப் பொலிதலும்" என்று (கோவையார். க௨௪) பேராசிரியர் எழுதியிருக் கும் விசேடவுரை இங்கே அறிதற்பாலது.

௩. "ஐஞ்சீரடி மூடுகியலோடொன்றாய் வந்த வெண்பா,கலிக்கு உறுப்பாய் வருதற்கு, "மேணிலை மிகலிகலின்...........வண்ணனும் போன்ம்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. ௬௭, நச்.

(பிரதிபேதம்) * துயிலைப்பெறும் என்றுங் கறைவன நல்லாரை, † என்று தமக்குரிய, ‡ சுற்றுவனராகிய,|| உவமைஅரியரகுபெயர்.வரி அருப்புத்தொழில்.அவ்வழி.

பானிற வெள்ளை யெருத்தத்துப் *பாய்ந்தானை
நோனாது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்(க)மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம்

எ - து: அந்த ஏறுகளின்மேலே நிலைபெறும் மிகுதலையுடைத்தாகிய மாறுபாட்டினாலே மிடைமிசையினின்றும் இழிந்து அதனைவிட்டுச்சென்று வேலினது முனையையொக்கும் †முனையையுடைய கொம்பினது விறலாகிய திறத்தினையுடைய மாறுபாட்டிற்கு அஞ்சானாகிப் பானிறம்போலும் வெள்ளிய ஏற்றினது கழுத்திலே ‡பாய்ந்தானைப்பொறாதே மேற்சென்று குத்தும் இளைய காரிய ஏற்றினது தோற்றரவு, பால்போலும் மதியைச் சேர்ந்து மறைத்த பாம்பினை அது மறைத்ததன்மையை விடுவிக்கும் நீலநிறம்போலும் || நிறத்தை யுடையவனையும் ஒக்கும்; அதனைப் பாராயென்றாள். எ - று.

வண்ணன், மாயோன்.

௩௬ (உ)இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர் சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
(௩)÷வாடில் வெகுளி யெழிலேறு கண்டை +யிஃதொன்று

---

க. (அ) "மாமதிகோண், முன்னம் விடுத்த முகில்வண்ணன்" பெரிய திருமடல். ௬௬. (ஆ) "தேம்பலிளந்திங்கட் சிறைவிடுத் தைவாய்ப், பாம்பினணைப் பள்ளிகொண்டாய்" பெரியதிருமொழி. (கக) அ: எ.(இ)"கோள் வாய் மதிய நெடியான்விடுத் தாங்கு" சீவக. ௨௫௪. (ஈ) "பான்மதி விடுத்தனை" யா - வி. மேற்.

உ. நாற்சீரடியும் ஐஞ்சீரடியும் முடுகியலடியாக வந்ததற்கு (அ) "இரிபெழு..........தலைச்சென்று" என்னும் அடிகள் தொல். செய். சூ. கஙூ. பேர். உரையிலும் (ஆ) "இரிபெழு.............கண்டை யிஃதொன்று என்னும் அடிகள் தொல். செய். சூ ௬௬. பேர். உரையிலும் முடுகுவண்ணத்திற்கு (இ) "இரிபெழு பதிர்பதிர் பிகந்து" என்பது தொல். செய். சூ. உ௩௩. நச். உரையிலும் மேற்கோள்.

௩. வாடுதல் குறைதலென்னும் பொருளில் வருதலை "வாடற்க வையை நினக்கு" (பரி. ௬: ௧O௬) என்பதன் உரையாலும் அறிக.

(பிரதிபேதம்) * பாய்ந்தானைக் கோளுது குத்து, † முனையுடைய கொம்பினது விறலாற் றுதலையுடைய, ‡ பாய்ந்தவனைப், || நிறத்தையுடையவனையும், ÷ வாடா வெகுளி, +இஃதுதொன்று, அஃதொன்று.

வெருவரு (க)தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போலும்

எ - து: பலரும் எழுந்திருந்து சென்று அதிர்ந்து அதிர்ந்து கெட்டு அவ்விடத்தைக் கடந்து சேர நீங்கும்படியாக *எலும்பு முறிந்து குடர்களற்றுக் கவிழும்படி குத்திவிட்ட பின்பு தன் கொம்பின் †வலியழியத் தழுவினவனை அலைத்துக்கொண்டு திரிந்து துகைக்குங் குறையாத கோபத்தினையுடைய அழகினையுடைய ஏறு, வெருவுதல் வருதற்குக் காரணமான மருந்தினாற் புகைக்க அதற்கு வெகுண்டு திரிதருங் கொல்கின்ற களிற்றையும் ஒக்கும்; இஃதொன்றைப் பாராயென்றாள். எ - று.

௬௫ தாளெழு துணிபிணி யிசை‡தவி ரின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகழேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
(உ)வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போலும்

---

க. தூமமெடுத்தலால் களிறு வெகுளுமென்பது உதயணன் சரித்திரத்து, யூகி பிரச்சோதனன் நகரைக் கலக்குதற்கு யானைக்குத் தூமமூட்டிய செய்தியைக்கூறும் "ஆனைதன் னிலைகண் டெய்தி யகிலிடும் புகையு மூட்டிச், சேனைமன் னகர முய்த்துச் சிறைவீடுன் கடனே யென்று, மானநல் யூகி யானைச் செவியின்மந் திரத்தைச் செப்ப, யானைதன் மதக்கம் பத்தி லருந்தளை யுதறிற்றன்றே" என்னும் (உதயணகுமார (க) உஞ்சைக்காண்டம். ௫௫ - ஆம்) செய்யுளாலும் அறியலாகும்.

உ. (அ) "வடுவாழ் மார்பி, னம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது, தும்பை சூடாது மலைந்த மாட்சி யன்னார் பெரும" (ஆ) "ஒன்னார் மெலிவிடத்தும்...........செல்லாமை தான்றலையே" (இ) "மங்கை மங்கழ வுறையேனேல் வாளமருட், பங்கப்பட் டார்மேற் படைதினார்த் தேறுகென்றான்" (ஈ) "கைப்படை யொன்று மின்றிக் கைகொட்டிக் குமரனார்ப்ப, மெய்ப்படை வீழ்த்த நாணி வேழமு மெறிதல் செல்லான், மைப்படை நெடுங்கண்மாலை மகளிர்தம் வனப்பிற்சூழ்ந்து, கைப்படு பொருளிலாதான் காமம்போற் காளைமீண்டான்" (உ) "கைத் துயிர் குடிப்ப னென்னு வெற்றினு னிடதுகையான், மெய்த்தலைச் சூலமோர்சான் வெறுங்கையா னென்று வெள்கி" (ஊ) "சென்றவன் றன்னைநோக்கிச் சிரித்துநீ சிறியை யுன்னை, வென்றவை மும்மை யெல்லாம் விளிப்பெனோ" (எ) "எனக் காற்ற லார்மேன், மாகால் வரிவெஞ்சிலையோடும் வளைத்த போது, சேகாகும்" என்பவை, ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * எலும்பு மெலும்பு முறிந்து, † வலிகெடத் தழுவினவனை ‡ தவிர்வின்றி.

எ - து: தோள்வலியாலே துணிந்த எறுதழுவுதல் எக்காலமும் மனத்தைச் செலுத்துதலின் அம்மனம் பிணித்த முயற்சியாலே எழுந்து துணிந்த இசை தவிர்தலன்றி அதனிடத்தே சென்று மற்றுள்ளார் தழுவுமாற்றைக் கடந்து சேர்ந்து மெய்யைத்தழுவித் தான்கொள்ளும் நிலையைத்தப்பித் தன் முன்னே வீழ்ந்தவன்மேலே செல்லாமல் *மீளுகின்ற புகர் நிறத்தையுடைய எற்றினது தோற்றரவு, மிக்குச்செல்லும் பொருள் தன்மையில் வாளோடே அகப்பட்டவனை எனக்கு ஒவ்வானென்று வெட்டாமல் மீளும், கூற்றுவனை யொத்த மறவனையும் ஒக்கும்; இதனைப் பாராயென்றாள். எ - று.

௫௧ ஆங்க, செறுத்தறுத் துழக்கி †யேறெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழுந் தார்ப்பப்
௫௫ பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
‡கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் படங்க
(௧)வரிபுனை (௨)வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ

எ - து. அங்ஙனம் கொம்பு மார்பிற்படுதலை மார்புகொடுத்து ஏற்றுக கொள்பவரோடும் மேலே பாய்ந்து ||ஏறுபவரோடும்கோட்டிடையிலே சென்று புகுவாரோடும் ஏறுகொள்ள வல்லேனென்று சாற்றுவாரோடும் ஏறுகள் பொருது பின்பு பொருவாரை அறுத்துச் செறுத்து எதிரேநிற்க அதனைப் பொறாமல் மைந்தர் விலக்குமவரை ✝மறுத்துமறுத்துச் சென்று தழுவுகையாலே என்புகள் முறிந்து முறிந்து தசைகளற்றுப் பரந்தனவாய்க் கிடக்க (௩) இடியோடே மாறுபடுகின்ற எற்றினது முழக்கோடே வாசசியங்கள் மிக்கு ஆரவாரிக்க அத்தொழூ, போரைவிரும்பி மேலேசென்ற துரியோதனாதிகள் படும்படி வரிந்து புனைந்த வலிய வில்லையுடைய தருமன் முதலியோர் கொன்ற பொருகின்ற களத்தையொக்கும். எ - று.

---

௧. "வரிப்புனை பந்தொடு" முருகு. ௬௮.

௨. (அ) "வல்வி லோரி கொல்லிக் குடவரை" நற். ௬௦௦. (ஆ) "கொல்லி யாண்ட வல்வி லோரியும்" புறம். ௧௫௮ ௫. (இ) "வல்வி லிராமன்" நாலா. பெரியதிருமொழி. (௫) ௧ ௪.

௩. "உருமி னதிருங் குரல்போற பொருமுரா ணல்லேறு" (கலி. ௧௧௩: ௨௬ - ௨௭.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * மீளுகின்ற நிறத்தை, † ஏற்றெதிர், ‡ கோட்டிடை, || ஏறுமவரோடு, மறுத்துச் சென்று.

௬0 தொழுவினுள், கொண்டேவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி னல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ

எ - து: அத்தொழுவிடத்துத் தழுவிக்கொண்ட ஏறுகளெல்லாம் மேயும் நிலத்தேபோக அமையாத சீரினையும் நோக்கினார் கண்ணை வாங்கிக்கொள்ளும் *அழகினையுமுடைய ஆய்ச்சியரும் ஆயரும் வளப்பத்தையுடைய ஊரிடத்தே குரவையாடுவரெனத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறினாள். எ - று.

௬௩ பாடுகம் வம்மின் பொதுவன் கொலைமேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு

எ-து: கூறி, பொதுவனுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றினுடைய கொம்புகள் குறியிட்டுவிட்ட மார்பைப் பாடுவோமாக வாருங்கோளெனத் தலைவியையும் ஆயத்தையும் நோக்கிக் கூறினாள். எ - று.

௬௫ நெற்றிச் சிவலை †நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றாத்தார் கவ்வை யெடுப்ப வதுபெறி
துற்றீயா ளாயர் மகள்

எ - து: அதுகேட்ட தலைவி, நெற்றியிலே சிவந்த சுட்டியினையுடைய ஏற்றைவிரவி நிறைதலைக்கெடுத்தவனுடைய நீண்ட மார்பிலே பகைத்து அலர் கூறுகின்ற மகளிர் நம்மை இகழ்ந்து பார்க்கும் கண்கள் இகழ்ந்து பாராதிருக்கும்படியாக யான் சாராமல் அமைந்திரேன்; இனி, பசுவையுடைய ஆய்ச்சியர் அலர்கூறுவதற்குப் பெரிதும் வருத்தமுறேன் யானென்றாள். எ - று.

ஆயர்மகளென்று தன்னைப் பிறர்போற் கூறினாள்.

௬௯ (க)தொழீஇஇ
எ - து: தொழில்செய்கின்றவளே. எ - று.

(உ)ஒருக்குநா மாடுங் குரவையு ளம்மை
(௩)யருக்கினன் போலுநீ யல்லனோய் செய்தல்

---

க. இந்நூற்பக்கம் ௬௪௪: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண் வந்ததற்கு, "ஒருக்குநாம்........... மகன்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௧௩. பேர். இ - வி. சூ. ௫௯0.

௩. "அருக்கு மங்கையர் மலரடி" திருப்புகழ்.

(பாடபேதம்) * அழகினையுடைய, † நிறையழித்த நீண்மார்பிற் சென்றார்.

(௧)குரூஉக்கட் கொலேறு கொண்டேன்யா னென்னுஞ்
செருக்கன்றோ வாயர் மகன்

எ - து: ஆயர்மகன் ஆயத்தோடே நாம் ஆடுங் குரவைக்கூத்திலே நம்மை அருமைசெய்தான்போலே நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல் *நிறத்தையுடைய கண்ணையுடைய கொலேயேற்றையான்கொண்டே னென்னும் மனச்செருக்கன்றோ? அது வேறொன்றல்லவே என்றாள். எ - று.

௭௩ நேரிழாய்; †கோளரி தாக நிறுத்த கொலேயேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூராரை (௨)யுச்சி மிதித்து

எ - து: அதுகேட்ட தோழி, ஒத்த இழையினையுடையாய்! கோள்ளுத லரிதாக நஞ்சுற்றத்தார் நிறுத்தின கொலைத்தொழிலேயுடைய எருகிய காரியினது கோபத்திற்கு அஞ்சானாய்த் தழுவின பொதுவனுக்கே எம்முடைய சுற்றத்தார் ‡மகிழ்ச்சிநிறைதலூற்று அலரை மிகக் கூறிய ஊரிலுள்ளாரைத் தலையிலே மிதித்துக் கொடுத்தலைப்பொருந்தினர்; இனி வருந்தாதே கொள் ளென்றாள். எ - று.

||எமரென்றாள்;"தாயத்தினடையா" என்னும்(௩)சூத்திரவிதியால் அவர் அலர் கூறிய அவற்கே கொடுத்தலின், அவர் உச்சியிலே மிதித்த தன்மைத் தென்றாள்.

௭௭ ஆங்கு
தொல்கதிர்த் திகிரியாற் பரவுதுமொல்கா
வுருமுறழ் (௪)முரசிற் றென்னவற்
(௫)கொருமொழி கொள்கவிவ் வுலகுடன் ÷னெனவே

௧. "குரூஉக்கட் கொலேயேறு" கலி. ௧௦௪: ௨௩.

௨. உச்சியிலே மிதித்தலென்றது இழிவுபடுத்துதலை: "மதித்திறப் பாரு மிறக்க மதியா, மிதித்திறப்பாரு மிறக்க" என்பது; நாலடி. ௬௪.

௩. தொல். பொருளி. ௬. ௨௭.

௪. பாண்டியற்கு முரசாற் சிறப்புக் கூறுதலை. "முரசுமூன் றாள்பவர்" (கலி. ௧௩௨: ௪) என்பனவும் அதன் குறிப்பாலும் அறிக.

௫. "குமரியொடு வடவிமயத், தொருமொழிவைத் துலகாண்ட சேரலா தற்கு" சிலப். ௨௯.

(பிரதிபேதம்) * நிறத்தையுடைத்தாகிய, † கோளரியாக, ‡ மகிட்சி. || எமரென்றான் தாய் தாயத்தி, ÷ என்னவே.

எ - து: கெடாத (க)உருமேற்றை மாறுபடுகின்ற முரசினையுடைய அவ் விடத்திற் பாண்டியனுக்கு இவ்வுலகுமோ அவனுடையஒருமொழியைக்கேட்ப தாகவென்று கூறிப் பழைதாகிய கதிரையுடைய சக்கரப்படையையுடையானை *வாழ்த்துதும்; அதற்கு நீயும் வருகவென்றாள். எ - று.

ஒருமொழி, ஆணை. தென்னவற்கென்னும் நான்காவது இவ்வுலகம் நடப்பதாகவென்று போந்த பொருளொடு முடியும்.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

"ஆயர் வேட்டுவர்" என்னும்(உ)சூத்திரத்தில்†ஆயரிலுங்கிழவருங்கிழத்தியரும் உளரென்றூ‡ாதலான், இவர்க்குங் களவொழுக்கம் நிகழு||மென்பதாம். "நாடகவழக்கினும்" என்னும் (௩)சூத்திரத்திற் பாடலுள் அமையாதனவாய்க் களவொழுக்கம் நிகழ்ந்து எறு÷தழுவி வரைவுடன் பட்டாராகக் கூறினார். மேலும் இங்ஙனம் களவு நிகழ்ந்து ஏறுதழுவி வரைகின்றதாகக் கூறும் ╋பாட்டுக்களுக்கெல்லாம் இதுவே விதியாகக் கொள்க.

இது தரவும் ஐஞ்சீரடிப்பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற கொச்சகமும் ×வழியசைபுணர்ந்த சொற்சீரடியும் முடுகியலோடு தொடர்ந்த கொச்சக வெண்பாவும் நாற்சீரடி முடுகியலோடு தொடர்ந்து ஐஞ்சீரடியும் வந்த கொச்சகவெண்பாவிரண்டும் ஐஞ்சீரடியும் ஆசிரியத்தளையும் விரவி ஈறு வேறோர் சீரான் இற்ற கொச்சக வெண்பாவும் **ஐஞ்சீரடுக்கியவற்றிற் குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய நெடு வெண்பாட்டிரண்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த கலிவெண் பாவின்வேறுபட்ட (சு)கொச்சகம். "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு,

க. (அ) "உருமிடி முரசமொடு" (ஆ) "இடிமுரசியம்ப" (இ) "இடியுமிழ் முரசம்" (ஈ) இடியென முழங்கு முரசின்" (உ) "உருமின் முர செழுந் தியம்ப" (ஊ) உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு" (எ) "உருமி னிரங்கு முரசின்" (ஏ) "முரசம்.........உருமி னுராறுபு சிலைப்ப" (ஐ) "உருமிசை முரசம்" (ஒ) "முர சிடியுமிழ் தழங்கென முழங்க" (ஓ) "உருமி னிடிமுர சார்ப்ப" என முரசினொலிக்கு உரு மொலி உவமையாய் வருதல் காண்க.

உ. தொல். அகத். சூ. உக.

௩. தொல். அகத். சூ. ௫௩.

சு. (அ) "மலிதிரை யூர்ந்து" என்னு முல்லைப்பாட்டுள், "இரிபெழு பதிர் பதிர் பிகந்துடன் பலர் நீங்க" 'தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றி' எனவு முடுகுதலிற்கொச்சகமாயிற்று; இதனுட் சொற்சீரடியும் வந்தது என்பர் நச்; தொல். செய். சூ. கருகு. (ஆ) இச்செய்யுள்

(பிரதிபேதம்) * வாழ்த்துமதற்கு, † ஆயரிலுங் கிழத்தியரும், ‡ ஆதலின். || மென்டதாஉ நாடக, ÷ தழுவ வரைவு, ╋ பாட்டுக்களுக்கு மிதுவே, × வழியசைப் புணர்த்த, ** ஐஞ்சீரடுக்கியு வெண்பாட்டிரண்டும் தனிச்சொல்லும்.

மைஞ்சீ ரடிப்பு மூவமைவன மொழிப" (௧) என்பதனான் மூவகைப் பாவிற்கும் ஐஞ்சீரடிவருதல் பெற்றாம். (௪)

(௧0௫.) அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்
சீர்மிகு சிறப்பினோன் றொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
வார்கலி யுவகையா ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்
தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியு
மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்
பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பிண ரெருத்தி னேந்திமிற் குராலு
மணங்குடை வச்சிரத்தோ னாயிரங் கண்ணேய்க்குங்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்
கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றுயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ;
அவ்வழி,
காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
வூர்பெழு கிளர்புளர் புயர்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு சிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்

---

புணர்தற்பொருண்மைத்தாயினும் முல்லைக்குரிய கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்றென்பர் இளம்; தொல். அகத். சூ. ௨௪.

௧. தொல். செய். சூ. ௬௩.

தூர்பெழு துதைபுதைத் துகள்விசும் புறவெய்த
வார்புடன் பாய்ந்தா ரகத்து;

௩௰ மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயு
மெருத்திடை யடங்கியு மிமிலிறப் புல்லியுந்
தோளிடைப் புகுதந்துந் துதைந்துபா டேற்று
நிரைபுமேற் சென்றாரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு;

௩௫ கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறாஅக் குரூஉச்செகில் காணிகா
செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்;

௩௯ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்;

௪௩ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயுங் வெள்ளேறு கண்டைகா
வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்;

௪௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று மாறா
விருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ;

௫௰ வெல்புக ழுயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துளங்கிமி
னல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்
பாடில வாயமகள் கண்;

௫௩ நறுநுதா லென்கொலோங் கூந்த லுளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி
யொஃல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்;

௫௭ நெட்டிருங் கூந்தலாய் கண்டை யிஃதோர்சொல்;

௬4

ஏதிலாரென்றது, தான் ஏதிலேனல்லேனென்னும்பொருண்மை குறிப்பாய்த் தோன்றக் கூறியது. பொய்ம்மொழியென்றது தான் உண்மைகூறவும் பொய்யாகக் கொண்டானென்பது தோன்றக் கூறியது.

உஉ தெளிந்தேன் *றெரியிழா யான்

எ - து: அதுகேட்டவன், தெரிந்த இழையினையுடையாய்! நீ இப்பொழுது கூறிய கூற்றால் நீ முன்னர் 'வருவான் விடு' என்றது உண்மையென்று யான் †தெளிந்தேன் என்றான். எ - று.

உந பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற ‡தின்னங் கழிப்பி
யரவுற்(க)றுருமி னதிருங் குரல்போற் பொருமுரா
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே

எ - து: என்று பின்னர், யாம் முல்லைப்பூவைக் குருந்தம்பூவோடே முடியிலே சூடிப் பலகாலுங் காட்டாற்றில் விளங்குகின்ற மணலையுடைய குளிர்ந்த பொழிலிடத்து யாம் முன்பு || தங்கும் அகன்ற பாறையிலே ஆயத்தோடே விளையாடுகையினாலே பகற்பொழுது போய் இராப்பொழுது வந்து தோன்றிற்று; அது வருவதற்குமுன்னர்ப் போகாமல் + தாழ்க்கின் நம்மைக் கோபிப்பார்கள்; அதனை உணராது நீ இன்னங் காலங்கழியாநின்றாய்; பல பசுவினத்தினுடைய திரளுக்குள்ளே,(உ)பாம்புசேர்கையினாலே அதிரும் உருமினுடைய குரல்போல அதிரும் பொருகின்ற மாறுபாட்டினையுடைய நல்ல (ந)ஏறுநாகுடனே தம்மிற் கூடி நின்றன; அவைபோல நாமுங்கூடிச் சேரப் போதற்குக் கூட்டத்திற்கு உடம்படுவாயாக என்றான். எ - று.

---

க. (அ) "வானேறு வானத் துரற்ற வயமுரா, ணானேற் றெருத்த லதனோ டெதிர்செறுப்ப" கார். கo. (ஆ) "இடியார் கழுழக் கேறு" தே. (இ) "இடிக்குர லானேற் றினமெதிர் செறுப்ப" கல். கூஅ: கo. (ஈ) "(அடலேறு)இடியிட்டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கி" திருவிளை. மாயப்பசுவை வதைத்த. கஎ.

உ. இந்நூற்பக்கம் உஎச: ந-ஆம் குறிப்புப் பார்க்க.

ந. "மல்லன் மறுகின் மடநா குடனுகச், செல்லு மழவிடைபோற் செம் மாந்து" நள. சுயம். கருசு.

பிரதிபேதம்) * தெரியிழாய் எ-து, † தெரிந்தேன், ‡ இன்னும், || தங்கும்பாறையிலே
+ தாட்கின்.

"ஓங்குசினைத் தொடுத்த*வூசல் பாம்பென, முழுமுத றமிய வுருமெறிந் தன்றே"(க)என்றார் பிறரும்.

(உ)யாங் கூட ஆயத்தோடு ஆடியெனத் தானுங்கூட ஆடினென்றதனானும், பொழுது †வைகிப்போதற்குத் தாம் தமக்குரியரல்லரென்றமையானும், ஏறும் நாகுங் கூடப் போமாறுபோல நாமுங் கூடப்போக என்றமையானும், வினைவல பாங்கினராயிற்று. அறவுறவெனத் திரிக்க.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது தரவும் இரண்டடியான் இரண்டு கொச்சகமும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஓரடியான் இரண்டும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் சிந்தடி ‡யோரடியா னொன்றும் சொற்சீரடியும் ஐஞ்சீரும் வந்து (ங) போக்கிலக்கண ||மில்லாத ஆசிரியச் சுரிதகமும் பெற்ற ✕ உறழ்கலி. (கங)

(ககச.) வாரி நெறிப்பட் டிரும்புறந் தாழ்ந்த
வோரிப் புதல்வ னழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று ;
௭ சென்றியா னறிவேன் கூறுக மற்றினி ;

க. அகம். சுஅ : சு - ௭

உ. "அடியோர் பாங்கினும்" என்னும் தொல். அகத். உங-ஆம் சூத்திர வுரையிலும் இவ்வுரையாசிரியர் தலைவனும் தலைவியும் வினைவல பாங்கின ரென்பதற்கு "பல்கால்யாங்......செலற்கே" என்னும்பகுதியை மேற்கோள்காட்டி, இக்குறிப்புக்குச் சிறிது வேறாக "இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற்போதல் வேண்டுமென்றமையானும், நல்லேறும் நாகும்போல் நாமுங் கூடப் போகல் வேண்டுமென்றமையானும் தலைவன் வினைவலபாங்கின னாயிற்றென்க. வினை வல்லானென்னாதுபாங்கினென்றதனால்தமரேவல்செய்வதுபெறறதும்; இஃது அவ்வந்நிலத்து இழிந்தோர்க்கு என்ஞான்றும் தொழிலேயாய் நிகழும்" என்று எழுதி யிருக்கிறார்.

ங. இது போக்கிலக்கணமில்லாத 'ஆசிரியச்சுரிதகம் பெற்று உறழ்கலி யாயிற்றென்பர் பேராசிரியரும். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறுவர். தொல். செய். சூ. கருசு.

(பிரதிபேதம்) * பூதலம்பாம்பென, † வைகிற்போதற்கு. ‡ஓரடியானொன்றுமஞ்சீரும். ||இல் வழிஆசிரியச், ✕ ஒத்தாழிசைக்கலி.

அ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொரூஉ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியுங்கொளக் கூறு ;

கஉ தருமணற் றாழப்பெய் தில்பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் தனித்தே பொழிய
வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த
விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் கூடுத லில்லியல் பன்றே.

இஃது, "ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலொடுதொகைஇ (க) *என்பது, அவன் வரைவுவேண்டின †இடத்து அவ்வரைவு புறத்த தாகியவழித் தலைவி தன்னுயர்வு உண்டாகத் தோன்றிய மறுத்தலோடே முற்கூறியவற்றைத் ‡தொகுத்து" என்று பொருள்கூறி, "அதன்புறமெனவே அதற்கு அயலாகிய நொதுமலர்வரைவாயிற்று" என்றும்; உயர்வு, (உ)குடிப் பிறப்புங் கற்பும்; அதற்கேற்பப் பிறர்வரைவு மறுத்துத் || தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் =கூறியது.

இதன் பொருள்.

வாரி நெறிப்பட் டிரும்புறந் ÷தாஅழ்ந்த
(ங)வோரிப் புதல்வ னழுதன +னென்பவோ

---

க. தொல். களவி. சூ. கசு. இதனுரையில் இவர் இச்செய்திக்கே இச் செய்யுளைமேற்கோள்காட்டி, சிறிதுவேறுபட இக்குறிப்பையும் எழுதி யிருக்கிறார்.

உ. (அ) "இற்பிறப்பு மொழுக்கு மிழுக்க மில், கற்பும் யான்பிறர்க் கெங்ஙனங் காட்டுகேன்" (ஆ) "இற்பிறப் பென்ப தொன்று மிரும் பொறையென்ப தொன்றுங், கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்" க. ப. சூடாமணி. கஎ, திருவடி. சுஉ.

ங. ஓரி-ஆண்பிள்ளையின் தலைமயிர்.

(பிரதிபேதம்) * என்றது. † இடத்தே வரைவு, இடத்துவரைவு. ‡தொகுத்தென்பதற்குப் பொருள். அதன்புறமெனவேநொதுமலர்வரைவாயிற்று. உயர்வு. || தலைவனை வரையுமாறு. = கூறினள். ÷ தாழ்ந்த. + என்பவோ வோரும்புதல.

புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் * கண்டு மதியறியா
வேழைமை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று

†எ - து: தோழீ! புதியனவாகிய மலர்களைச் சூடி எம்முடைய சுற்றத்தார் என்பெயரைச் சொல்லிப் பெண்பிள்ளைக்கலியாணஞ் செய்கின்றவர்களைக் ‡கண்டு வைத்தும் கோதி நெறித்தற்றொழிலிலே பட்டுப் பெரிய முதுகிலே தாழ்ந்துகிடக்கின்ற மயிரினையுடைய புதல்வன் அழுதனனென்பவோ? அங்ஙனங் கூறுவார்களாயின், நீ அவனிடத்தே சென்று இவ்வதுவை நின்னை விட்டு அகலாநிற்க அது நின்னிடத்தே ஆம்படி வரைந்துகொள்ளும் மதியை அறியாதவேழைத்தன்மையையுடையையென்று சிரித்துவாரா||யென்றாள் எ-று.

கோதி நெறித்து முதுகிலே கிடக்கின்ற மயிரினையுடைய புதல்வனென்றதனாற் பயன், மயிர்முடி கூடி இளமை முதிர்ந்து காமச்செவ்வி அறிந்து களவொழுக்கத்திற்கு உரியனும் தான் வரைந்துகொள்ளுந் தன்மை அறியாமல் இருமுதுகுரவர்கீழே நிற்கின்ற பிள்ளையாயிருக்கின்றவனென்பது உணர்த்திற்று.

அழுதனனென்பவோ என்றது, (க)நொதுமலர்வரைவுவரத் தோழியும் தான் வரைவின்முயலாது வருந்தினனென்று அயிலவர் கூறுவார்களோ என்றவாறு. இஃது அழுகையென்னும் மெய்ப்பாடு. பெயராலென்பது உருபுமயக்கம்.

எ சென்றியா னறிவேனவன் கூறுக =மாற்றினி

எ - து: அதுகேட்ட தோழி ஆண்டுச்சென்று அவனிலைமையை அறிவேன்; பின்னை, அவற்குக் கூறுவனவற்றை இனிக் கூறுவாயாக என்றாள். எ - று.

அ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொருஉ ÷ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் × கூறு

எ - து: அதுகேட்ட தலைவி, மடவாய்! நீ அவனிடத்தே சென்று எடா! நின்குரவரை நோக்கி இவ்வதுவை என்னிடத்தே + யாகவேண்டு

க. நொதுமலர் - அயலார்.

(பிரதிபேதம்) * கண்டுவிலக்கிமதி, † எ-து. கோதி நெறித்தம்........தாழ்ந்துகிடக்கின்ற புதல்வனென்றதனாற பயன்........களவொழுக்கத்திற்கு முரியனும்........ மெய்ப்பாடு. தோழீ! புதியனவாகிய, ‡ கண்டுவைத்துமோரிப்புதல்வன், || என்றாள். பெயராலென்பது, = மாற்றினி, ÷ மற்றென்றகல். எ-து: அதுகேட்ட தலைவி மடவாய் என்றாள்........வினையினைமைபற்றி. அகலநீடின்று நினக்கு. + கூறு என்பது மடவாய்நீ, × ஆகவேண்டுமென்று.

மென்று சொல்லுஞ் சொல்லை அறியாதபேதை; ஆகையினாலே *இவ்வதுளை நினக்குரித்தன்றி அகலும்; அவ்வகற்சிதான் நீட்டித்தலில்லை; அது நொது மலர்க்கின்றி நினக்குவருவதாக நெஞ்சாலே காண்பாய்; அங்ஙனம் †காணு யாயின் அது நின்னை ஒருவுமென்று நீங்கு; அங்ஙனம் நீங்கும்பொழுது இவ்வதுளை தனக்குரித்தாக முயலும்படி நீ சொல்லிய சொற்றானும் முன்பு வரைவுகடாயவுஞ் ‡சொல்லாத அவன் நினையாமல்(க)நின் ஏவலை அவன்மனங் காரியமென்றே கொள்ளும்படி கூறுவாயாக ||என்றாள். எ - று.

மடவாயென்றாள், ஆண்டிக்கூறுவனவற்றைத்(உ)தான் அறியாள்போலத் தன்னை விறுயினமைபற்றி.

கஉ (ங) தரு(ச)மணற் றுழப்பெய் தில்(ரு)பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் (சு)தனித்தே (எ)யொழிய
(அ)வரிமணன் முன்றுறைச் சிறுநில் ÷புனைந்த

க. "விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது, சொல்லுதல் வல் லார்ப் பெறின்" குறள். சுசஅ.

உ. "தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோனறைந்த தீதென்று கூறமால்" பாரதம்.

ங. (அ) "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" நெடுநல். கூ0. நற். கசங. உ. பெருங். (க) சஎ: ககஎ.(ஆ) "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றம்" அகம். கஅஎ. க. (இ) "தருமணன் முற்றத்து" மது. கூஅச; பெருங். (க) ஙச: ச0.(ஈ) "தருமணன் ஞெமிரிய திருநா றுருசிறை" மணி. கஅ: சச. (உ) "தருமணற் பேரில்" (ஊ) "தருமணற் பந்தர்" (எ) "தருமணன் ஞெமரிய தண்பூம் பந்தருள்" பெருங். (க) ஙங: கஙச; ஙகூ: சக; (ச) கூ: கஉ.

ச. "வரைப்பின் மணற்றுழப் பெய்து" கலி. ககரு: கக.

ரு. (அ)"பூவலூட்டிய புனைமாண் பந்தர்க், காவற்சிற்றிற் கடிமனை" சிலப். ககூ: ரு - கூ. (ஆ) "பூவற் படுவில்" புறம். ஙககூ: க. (இ) "பூவலங் குன்றம்" களவழி. கஉ.

சு. "தனித்து" என்பதைத் தனிக்கவெனத் திரித்து, யான் தனியே நீங்கினளாக என்க.

எ. 'ஒழிய' என்பதற்கு அவனையன்றி வேறு சிலரிடத்தே தங்குகையி னாலே என்பதைப் பொருளாககொள்க; ஒழிதல் - நீங்குதல். இஃது இப்பொருட்டாதலை 'ஒழிய' 'ஒழிந்திட்டாள்' (சீவக. உஙகூக,உரு0ச) என்பவற்றுக் கெழுதியிருக்கும் உரையான் உணர்க.

அ. "வரிமணல்" பட். கூ0. கலி. கஉஎ. ரு.

(பிரதிபேதம்) * பின்னைஇவ்வதுளை, † காணுயாயிற பின்னைஅது, ‡ சொல்லாக அவன். || என்றாள்தருமணல், ÷ புனைந்துதிருத்தல்.

திருநுத லாயத்தார் ×*தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ †வலர்ந்த
விரிநீ ருடுக்கை(௧)யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் ‡கூடுத லில்லியல் பன்றே

எ-து: என்று பின்னுந் தோழியை நோக்கி, ஆராய்ந்துபார்க்கில் அறலினை யுடைத்தாகிய மணலினையுடைய (௨) துறையின்முன்னே சிற்றில்லிழைத்து விளையாடிய அழகிய நுதலினையுடைய ஆயத்தார் தம்முள்ளே நின்று ||யான் தனியே நீங்கினேனாக அவன் புணர்ந்த ஒருமணத்தை நம்முடைய நெஞ்சு தான் அறியும்; அங்ஙனம் அறிந்திராநிற்கவும். (௩)கொண்டுவந்து குவித்த மணலைத் தங்கப் பரப்பி இல்லைச் (௪)செம்மண்ணைப்பூசித் தெய்வமாக வைத்த (௫)எருமையாகிய பேட்டின்கொம்போடே எம்முடையசுற்றத்தார்இவ்விடத்து நடத்தும் பெண்பிள்ளைக் கல்யாணமெல்லாம் அவனை யின்றி வேறுசில ரிடத்தே தங்குகையினாலே இருமணம் ÷உண்டாகாநின்றது; இவ்விருமணம் பரந்த திரை விரிகின்ற கடலை உடுக்கையாகவுடைய உலகத்தைப் பெறினும் அரிய நெறியையுடைய ஆயர்மகளிர்க்கு உண்டாதல் குடிப்பிறப்பிற்கு இயல் பன்றென்று யான் தெருமருதலைச் ×சிறிது கைவிட்டிருக்கவோ? கைவிட் டிருக்கின், குடிப்பழுதுமாய்க் கற்பும் நீங்குமன்றோ என்றாள். எ - று.

இனி, இருமணங்கூடுதல் இயல்பன்றாயிருக்க ஒருமணந்தான் அறியு மாயிற் பெருமணமெல்லாந் தனித்தே +ஒழியச்செய்தே தெருமரல் கைவிட் டிருக்கோ என்றாற் பொருண்முடியாமை காண்க.

இதனால், தலைவிக்குத் தம் மிறையால் அச்சமே தோன்றிற்று.

---

௧. "பழியெனி, னுலகுடன் பெறினுங் கொள்ளலர்" புறம். ௧௮௨: ௫ - ௬.

௨. "முன்றுறை" என்பதற்குத் 'துறை முன்' என்றே பொருள் கூறுவர், பிறரும்; பரி. ௧௨: ௩௬: புறம். ௧௩௬: ௨௫.

௩. "தாயே, புனைமா ணிஞ்சி பூவ லூட்டி, மனைமண லடுத்து மாலை நாற்றி, யுவந்தினி தயரும்" அகம். ௧௯௫: ௨. - ௫.

௪. "பூவலூட்டி" (அகம். ௧௯௫: ௩) என்பதற்கு, சுவரைப் புதுக்கோலஞ் செய்து என்றும் பூவல் - சிவப்பு என்றும் குறிப்புக் காணப்படுகிறது.

௫. இச்செய்தி வேறெங்கும் கண்டதன்று.

(பிரதிபேதம்) * தம்மிற்புணர்ந்த, † மலர்ந்த, ‡ கூறுதல். || யானீங்கினேனாக. ÷ உண்டா கின்றது, × சிறிதுங்கை, + ஒழிகைசெய்தே.

எருமைப் பெடையென்றது * "பேடையும் பெடையும்" என்னும் (க) சூத்திரத்து நாடினென்றதனுல் அமைத்தாம்.

(உ)இது வெள்ளைக்கொச்சகமும் ஓரடியாமெனென்றும் கொச்சகமும் போக்கிலக்கண †மில்லாத ஆசிரியச்சுரிதகமும் பெற்ற உறழ்கலி. (கச)

(ககரு.) தோழிநாங், காணாமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
புல்லினத் தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ;
அதனை, வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ணெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
மீங்கெவ னஞ்சுவது;
அஞ்சல், அவன் கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பின் மணற்றாழப் பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை.

இது தலைவிகளவுவெளிப்பட்டதென்று அஞ்சித்தோழிக்குச் ‡சொல்ல, || நமர் நின்னை அவற்கே கொடுக்கச் சூழ்ந்தாரெனச் சொல்லி அச்சம் நீக்கியது.

---

க. தொல். மரபியல். சூ. ருச.

உ. இச்செய்யுள் போக்கிலக்கணமில்லாத ஆரியச் சுரிதகம்பெற்ற உறழ்கலிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. கருசு. பேர். நச்.

(பிரதிபேதம்) * பேடை பெடையும், பெட்டையும் பெடையும், † இல்லாயாசிரிய. ‡ சொல்லவேயின்னை. || எமர்.

### இதின் பொருள்.

(௧)தோழிநாஞ், (௨)காணாமை(௩)யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
(௪)நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் (௫)கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
(௬)புல்லினத் *தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
(௭)†வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு ‡மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ

---

௧. 'ஆயர்வேட்டுவர்' என்னும் (தொல். அகத். ௨௧.) சூத்திரவுரையில் 'ஆயர்வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதினாரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலங்கட்குரிய வினைப்பெயர்களான் வருவனவுங் கொள்க' என்று கூறி, "தோழி நாஞ்..............மகன்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர். நச.

௨. (அ) "நம்மு ணுணுநர் போலத் தம்முண், மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சிபோல, வுள்ளத் துள்ளே மகிழ்ப" தொல். களவி. சூ. ௨௩. நச்; நாற். சூ. ௧௪௧. மேற். (ஆ) "கள்ளொற்றிக் கண்சாய் பவர்" குறள். ௯௨௭. (இ) "மட்டொளித் துண்ணு மாந்தர் மாண்புபோன் மறைந்து வண்ணப், பட்டொளித் தொழிய வல்குற் பசுங்கதிர்க் கலாபந் தோன்ற" சீவக. ௨௫௩௩.

௩. "அந்தீந்தேறன் மாந்தினர் மயங்கி ...............புலவிக்காலத்துப் போற்றா துரைத்த காவியங்கண்ணார் கட்டுரை யெட்டுக்கு, நாவொடு நவிலா நகைபடு கிளவியும்" சிலப். ௧௪: ௧௩௩ - ௧௩௬.

௪. "நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும், பேணாப் பெருங்குற்றத் தார்க்கு" குறள். ௯௨௪.

௫. "தலைப்பெய்து, கையொடு கண்டாய்" கலி. ௯௫: ௨௭ - ௨௮ என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௬. "புல்லினத் தாயர்மகன்" (கலி. ௧௦௩: ௪௭) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

௭. "ஐங் கூந்த லுளரச், சிறுமுல்லை நாறியதற்கு" (கலி. ௧௦௫: ௫௩-௫௪.) என்றதற்கு, 'ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்ற அது வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப்பூவின் நாற்றம் மேவி மிக நாறியதற்கு' என்று எழுதியிருக்குமுறை ஈண்டு அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * ஆயர்மகன். † வெண்ணெயுரைஇ. ‡ இல்லாராய்நாண.

*௭ - து: மெல்லிய இயல்பினையுடையாய்! நம்பாட்டினத்தையுடைய (௧)ஆயர்மகன் சூடிவந்ததொரு முல்லைத்தொடையினையும் அதனோடு †செய்த தோர்(௨)கண்ணியையுங் கூந்தலிலேயிட்டுமிகவும்‡முடித்தேன்;தோழீ! அப்பூச் செவிலித்தாய் ||வெண்ணெய்தேய்க்கவிரித்த மயிரோடே நற்றாயுந் தந்தை முதலியோரும் இல்லிடத்தேயிராநிற்க நற்றாயுங் கெட்டொனும்படியாகச் செவிலிமுன்னே வீழ்ந்தது; ஆகையினாலே () தோழீ! பிறர் காணாமையுண்ட (௩)கள்ளின்களிப்பு மெய்யிடத்தே தோன்றி மிகுகையினாலே பின்னை நாணு மற்சென்று பிறர் நகைக்கும்படி அக்கள்ளைத் தாமுண்டபடியை உரைத் தாற்போல ÷நாம் கரந்தகளவொழுக்கமுங் கையோடே பிடித்துக்கொள்ளப் பட்டேங்காணென்றாள். எ - று.

௧௦ அதனை, +வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ணெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
(௪)பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
(௫)பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
வீங்கெவ ×னஞ்சு வது

எ - து: பின்னரும் அப்பூவை வந்தபடி என்னென்று கேட்டலுஞ் செய்யாளாய்ச் சினத்தலுஞ் செய்யாளாய் நெருப்பைக் கையாலே தீண்டினவர்கள் =அக்கையைப் பிதிர்க்கு மாறுபோலக் கையைப் பிதிர்த்து நீங்கிப் புறமாகிய புறக்கேபோனாள்; அவள்போனபின்பு யானும் என்னுடைய மயிர்ச் ∴சந்தனம் பூசி உலர்த்தின மயிரை முடித்து நிலத்தே ** தாழ்ந்த பூத்தொழிலையுடைத்

---

௧. (அ) "முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்" பதிற். ௨௧: ௨௦. (ஆ)"முல்லையங் கண்ணிசிந்தக் கால்விசை முறுக்கியாய ரொல்லென வொலிப்ப வோடி" சீவக. ௪௮௮.

௨. "கூழையு ளேதிலான், கைபுனை கண்ணி முடித்தாள்" கலி. ௧௦௭: ௧௪ - ௧௫.

௩. "மெய்க்கண், மகிழா னறிப நறா" நான்மணி. ௭௩.

௪. "பூங்கரை நீலம் புடைதாழ" கலி. ௧௩௧: ௩.

௫. "பாங்கரும் பாட்டங்கால்" கலி. ௧௧௩: ௧.

(பிரதிபேதம்) * எ - து, மெல்லியலாய் நம்மாட்டினத்தை. †செய்தவழினையுடைய கண்ணியையும். ‡ முடித்தேன் அப்பூ. ||வெண்ணெதேய்க்க. எண்ணெய்தேய்க்க () தோழி. ÷நாங்கரந்த ஒழுக்கமும். + வினவலுஞ்சொல்லாள் சினவலுஞ் சொல்லாள். × அஞ்சுவது அஞ்சல், எ-து:=தங்கையைப், ∴சந்தனமெழுகி யுலர்த்தின, ** தாழ்ந்தபூத்தொழிலை.

தாகிய கரையினையுடைய நீல ஆடையைக் கையாலே சிறிதேறத் தழுவிக் கொண்டு அச்சத்தால் தளர்ந்து நடந்து பக்கத்திலுண்டான செல்லுதற்கரிய கானத்திலே சென்று ஒளித்தேனென்றாள்; அதுகேட்டதோழி, ஏடீ! அப்பூ வீழ்ந்ததற்கு நீ அவ்விடத்தே அஞ்சுவது என்னகாரியத்திற் *கென்றாள். எ-று.

கஎ அஞ்சல்; (க) அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பின் (உ) மணற்றாழப் †பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை

எ - து: என்று பின்னும் நின் தலைவன் கண்ணியை நீ சூடினையாயின் அதற்கேற்ப நம்முடைய சுற்றத்தாரும் நின்னை அவனிடத்தே அடுத்தலைச் சூழ்ந்தார்; அதுவேயன்றி அகன்ற இடத்தையுடைய முற்றத்தே மணலைத் ‡தங்கப்பெய்து திரையிட்டுக் கல்யாணமும் இப்பொழுதே செய்வார்கள்; பகலேயன்றிப் போன இரவிலும் ஆராய்ந்த காரியம் || அக்காரியமேயாம்: நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - று.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

+இஃது ஐஞ்சீரடுக்கி வந்த தரவும் பாட்டும் சுரிதகமும் பெற்ற கலிவெண்பா. (கரு)

(கக௬.) பாங்கரும் பாட்டங்கால் கன்றோடு செல்வேமெந்
தாம்பி னொருதலை பற்றினை யீங்கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ
யென்னைமே முற்றாய் விடு;
விடேஎன், தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடுவய நாகுபோ னோக்கிக் கொடுமையா
னீங்கிச் சினவுவாய் மற்று;

க. "நின் கூழையு ளேறவன், கண்ணிதந் திட்ட தெனக்கேட்டு ........... நின்னையப், பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ, டையன்மா ரெல்லா மொருங்கு" கலி. க0எ: ௩0 - ௩௪.

உ. "மணற்றாழப் பெய்து" (கலி. ககச: கஉ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பாடபேதம்) * என்றாள அவன்கண்ணி, †பெய்து வதுவையும். ‡தங்கப்பெய்து கல்லியாணமிப்பொழுதே. || அக்காரியமேயாமினியஞ்சாதே, +இதனைஞ்சீரடுக்கி.

அ நீநீங்கு, கன்றுசேர்ந் தார்கட் கதவிற்றுச் சென்றாங்கு
வன்கண்ணா ளாய்வர லோம்பு ;
யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக தளரேன்யா
னீயருளி நல்கப் பெறின் ;
நின்னையான் சொல்லினவும் பேணாய் நினை இக்
கனைபெய லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையா ணணிலி நீ.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு விலக்கிய தலைவனோடு அவள் சில மொழிகூறிக் குறியிடங் கூறியது.

இதன் பொருள்.

(௧)பாங்கரும் (௨)பாட்டங்காற் (௩)கன்றொடு செல்வேமெம்
† தாம்பி னொருதலை பற்றினை யீங்(௪)கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ
‡ யென்னை (௫)யே முற்றாய் விடு

எ - து: மனைப் ||பக்கத்திற், பிறர் சேருதற்கரிய, நாம் பயிர் செய்யுந் தோட்டத்திடத்தே கன்றொடு போகாநின்றேம்; அங்ஙனம்போகின்ற எம்முடைய கையில் தாம்பின் ஒரு தலையைப் பிடித்தனையாய் எம்மை இவ்விடத்தே ÷ முன் பேயும் ஒருதா நின்று விலக்கினாற்போல விலக்குதற்கு, ஏடா ! நீ என்ன பித்தேறினாய் ? நீ என்னைப் போகவிடு என்றாள். எ - று.

௧. "பாங்கருங் கானத்து" கலி. ௧௧௫: ௧௫.

௨. "பாட்டங்கால்" கலி. ௧௧௧: ௪.

௩. "கன்றெல்லாந் தாம்பில்" கலி. ௧௧௩: ௧ - ௨. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. "பேரேமுற்றார்போல முன்னின்று விலக்ுவா, யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி" கலி. ௧௧௩: ௪ - ௫.

௫. இந்நூற்பக்கம் ௭௨௩: ௫ - ஆங் குறிப்புப் பார்க்க

(பிரதிபேதம்) * விலக்கியவத்தலைவனோடு, † தாம்பிலொருதலை, ‡ என்னை முற்றாயவிடு, || பக்கத்திற்சேருதற்கரிய நாம்பயிரைச்செய்யும், ÷ முன்பேவுமொருத்தா னின்று விலக்கினாரைப்போல.

௬ * விடேஎன், (௧)தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடு †வய நாகுபோ னோக்கித் (௨)தொடுவாயி
னீங்கிச் சினவுவாய் ‡ மற்று

எ - து: அதுகேட்டவள், யான் நின்னைப் போகவிடேன்; தன்னைத் தீண்டுதற்குச் செல்லுமவர்களை இடையே விலக்கி எதிரே மிக்குச்செல்லுங் கடிய வலியினையுடைய நாகுபோலே செறுத்துநோக்கித் தொழுவின் வாயிலி னின்றும் போந்து நின்று பின்னைச் சினப்பா ||யென்றான். எ - று.

௮ நீநீங்கு, கன்றுசேர்ந் தார்கட் ÷ கத (௩)வீற்றாச் சென்றாங்கு
வன்கண்ண ளாய்வர லோம்பு

எ - து: அதுகேட்டவள், நீ இவ்விடத்து நின்றும் போ; அதுவென் னெனில் தன்னுடைய கன்றைச் சேர்ந்தார்மேலே கோபத்தையுடைய புனிற் றாச் ×சென்றாற்போல நீ என்மேலே வந்தது காணில் யாய் தறுகண்மையை யுடையளாய் வந்துசீறுதலுமுண்டுகாண்; அவ்வரவை நீபேணிக் +கொள்வா யென்றாள். எ - று.

௧௦ யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக * ×தளரேன்யா
(௪)னீயருளி நல்கப் பெறின்

---

௧. வயாவென்பது வேட்கைப் பெருக்கத்தை யுணர்த்துமென்பதற்கு, "தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங், கடுவயா நாகுபோ னோக்கி" என்பதனை மேற்கோள்காட்டி, வயாவென்பது கன்றின்மேற் காதன்மிகுதி குறித்து நின்றதென்பர், தெய்வச்சிலையார்; தொல். உரி. சூ. ௫௭. 'வயாவென்'

௨. எழுப்புதல் எடுப்புதலென வருதல்போல, தொழு, தொடுவென ழகரம் டகரமாய் வந்ததுபோலும்.

௩. (அ) "ஈற்றா, அச்சப்பொருளில் ஒன்றாகக் (தொல். மெய்ப். சூ. ௮) கூறப்பட்டிருத்தலும் (ஆ) "கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாளு, நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு" (கலி. ௧௧௦: ௧௪- ௧௫) என்பதும் (இ) "கன்றமர் கறவை மான, முன்சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே" (புறம்: ௨௭௫: ௮ - ௯.) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

௪. (அ) "நின்றோழி யென்னை, யருளீயல் வேண்டுவல்" (ஆ) "களிறன் றான் றன்னையொரு, பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ"

(பிரதிபேதம்) * விடேன் தொடிய செல்வோர்த். † வயாகாகுபோனோக்கிக் கொடுமையா. ‡ மற்று நீங்கு. எ-து: || என்றான் தன் கன்று, ÷ கதவிற்றாய், × சென் றாற்போல, செற்றாற்போல, + கொள்ளென்றான். யாழ்.

எ - து: அதுகேட்டவன், நீ அருள்செய்து என்னைக் கூடப்பெறின், அவ்விடத்தே ஒன்று தாய் வருக; ஒன்று அயலார் வருக; அவர்களேயன்றிப் பின்னை நின் தந்தை தான் வரினும் வருக; அதற்கு யான் வருந்தேனென் றான். எ - று.

கஅ *நின்னையான் சொல்லினவும் பேணாய் நினைஇக்
(க)கனைபெய †லேற்றிற் றலைசாய்த் தெனைய தூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
‡வருவையா ணணிலி நீ

எ-து: அதுகேட்டதலைவி, நின்னையான் எத்தன்மையவாகவுஞ்சொன்ன ||வார்த்தைகளைப் பரிகரியாயாய்க் கூட்டத்தையே நினைந்து செறிந்த மழையிடத்து ஏறுபோலே தலையைச் சாய்த்து யான் கூறியவற்றிற்கு எதிராகச் சில சொற்களைக் கூறி இங்ஙனம் மயக்கமுறுகின்றவனே! நாணமில்லாதவனே! நீ கறவைக்கலத்தோடே யாஞ் செல்லும் பசுமேய்க்கின்ற இடத்தையும் நாடி என் தமையன்மார் நிற்கும் புலத்திலும் வருவையாயிருந்தாய்; ஆண்டுக் கூடுது மெனக் குறியிடங் கூறினாள். எ - று.

இதனால், ÷இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.
இஃது ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டு. (கசு)

(ககள) மாண வுருக்கிய நன்பொன் மணியுறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய் கோங்கின்
முதிரா விளமுகை யொப்ப வெதிரிய
தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை;
சு கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு ளென்னுள
காண்டக்கா யெற்காட்டிக் காண்;

(இ) "இருளுறழ் கூந்தலா ளென்னை, யருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே" (ஈ) "நீநல்கி னுண்டென் னுயிர்" கலி. சுக: கரு - கஎ, கக - உ0; கச0: கூகூ - கூச; கூச: கஉ.

க. "கனைபெயல்" (கலி. சுரு: ச) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * நினைஇயான், † ஏற்றித் தலைசாய்த்து, ‡வருகுவையால், || வார்த்தைகளையும். பரிகரியாய், ÷ இருவரும் புணர்ச்சியுவகை யெய்தினர். இது அஞ்சீர்

காணினி, தோட்டார்*கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா
யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனுற்
செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
சொல்லிய நேரா வறிவு.

*இஃது ஆற்றிடைத்தலைவன் தலைவியைக் கையது வினாயிச் சேர்ந்தது.

**இதன் பொருள்.**

மலை யுருக்கிய நன்(க)பொன் மணியுமிழ்இப்
பெனிற் றுடைத்தன்ன மேனியாய்(உ)கோங்கின்
முகிழா விளமுலை பொம்ப வெதிரிய

- - -

க. “பொன்னுரை மணியன்ன மாமைக்கண்” (கலி. ௪௮: ௧௭) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

உ. கோங்கு பாலைநிலத்துக்குரித்தாகக் கூறப்படுவது; பொரியரையுடையது; வேனிற்காலத்து மலரும் இயல்பினது; தோகதச்செய்கையில் மகளிர்குதலை கேட்டு மலர்வதாகக் கூறப்படுவது. இம்மலர் பொன்னிறமும் விரிந்து தோன்றலுமுடையதாதலால், இதற்கு விளக்கும் பொற்கிண்ணமும் பொற்றட்டும் பொற்றசுத்தட்டும்பொற்குடையும் சுரிதகமென்னுமாபரணமும் உவமையாகக் கூறப்படுகின்றன. இவை (அ) “அலர்முலை யதரே ரான கோங்கமு, மிலவமு மெல்லடி யினை வுறவைகைத், தலைவனோ டவ்வழிச் சார்ந ரின்புற, நிலைபெறு பஞ்சியி னெறிக ளர்க்குமே” எனவும் (ஆ) “பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ” எனவும் (இ) “இணர்ந்லைக் கோங்கம பயந்த, வண்மிகு கொழுமுகை யுடையும் பொழுதே” (ஈ) “வேனிற் கோங்கின் பூம்பொருட்டு” எனவும் (உ) “சோங்க மாதர் குதலையைக் கேட்டலுங், தேங்கொள் போது சினைதொறும் பூத்தலால்” எனவும் (ஊ) “பொன்போதலர் கோங் கோங்கு சோலை” எனவும் (எ) “கோங்கின், காலுறக் கழன்ற கண்கமழ் பனிமலர், கைவிடு சுடரிற் றோன்றும்” (ஏ) “செல்சுடர் நெடுங்கொடி போலப், பல்பூங் கோங்க மணிந்த காடே” எனவும (ஐ) “வள்ளப்போற் கோங்கு மலருந் திருநாடன்” எனவும் (ஒ) “கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப், பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச், செம்பொற்றட்டிற் றீம்பா லேந்திப், பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்றும்” எனவும் (ஓ) “பொன்

(பிரதிபேதம்.) * இது ஆற்றிடைத்தலைவியை.

(க)தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கையதெவன்மற் றுரை

எ - து: மாட்சிமைப்பட உருக்கி ஓடவைத்த நல்ல பொன்னிலே நீலமணியை அழுத்திப் பேணி ஒப்பமிட்டாற்போன்ற கரிய நிறத்தையுடையாய்! முதிராத கோங்கினது இளைய முகையையொப்பத் தோன்றின தொய்யி லெழுதினவனமுலையையுடையாய்! பின்னை நின் கையிடத்தது யாதுதான் உரையென்றான். எ - று.

உ கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலுள் என்னுள
*காண்டக்கா யெற்காட்டிக் காண்

எ - து: அதுகேட்டவள், என் கையிடத்தது, இச்சேரிக்குரிய இடையர்மகளாயிருப்பேன் யான், பின்னை என் கையில் இருக்கின்ற இது காதலையுடைய புலைத்தி விற்கப்படுவதொன்றாக முடைந்ததொரு புட்டில்; அது தான் பின்பு பனங் குருத்தின் வகிராற் பொத்தின தொழிலையுடைய புட்டி லென்றாள். அதுகேட்டவன், (உ) காட்சிதக்கவளே! இப்புட்டிலுள் என்ன பண்டங்களுள? அவற்றை எனக்குக் காட்டிக்கா†ணென்றான். எ - று.

---

செய் கன்னம் பொலிய வெள்ளி, நுண்கோ லறைகுறைந் துதிர்வன போல, வரவ வண்டின மூதுதொறுங் குரவத், தோங்குசினை நறுவீ கோங்கல ருறைப்ப" எனவும் (ஔ) "புல்லிதழ்க் கோங்கின் மெல் லிதழ்க் குடைப்பூ" (ஃ) "குடைமாக மெனவேந்திக் கோங்கம்போ தவிழ்ந்தனவே" (அஅ) "குடையவிழ்வன கொழுமலரின குளிர்களி யன கோங்கம்" (ஆஆ) கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன" எனவும் (இஇ) "கைவல் வினைவன் தையுபு சொரிந்த, சுரிதக வுருவின வாகிப் பெரிய, கோங்கங் குவிமுகை யவிழ" எனவும் வருவன வற்றால் அறியலாகும். இதன் றாது பொன்னிறமுடையதென்பது கலி. ௩௩: கஉ-ஆம். அடியானுணரப்படும். இதன் காய் சால்போன்ற தென்றும் பஞ்சுடையதென்றும் கூறுவர்; இதன் அரும்பும் மகளிர் கொங்கையும் ஒன்றற்கொன்று உவமையாகக் கூறப்படுதலை இந்நூற் பக்கம் ௩சச. உ - ஆம் குறிப்பால் உணர்க.

க. (அ) "தொய்யில் பொறித்த சுணங்கெதிர் இளமுலை" மது. சகக. (ஆ) "தொய்யில் பொறித்த வனமுலை" (இ) "தொய்யில் பொறித்த வழி" கலி. கஎ: கஉ; கசச: ௩ச.

உ. காண் - அழகுமாம்.

(பிரதிபேதம்) *காண்டக்காய் காட்டிக்காண். † என்றான் தோட்டார்.

காணினி, (க)தோட்டார் கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா
யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனாற்
(உ)செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.

எ - து: அதுகேட்டவள், இனிக்காண்பாயாக ; பின்னை இவை மூத்த மூரலே நிறையப்பட்ட மயிரினையுடைய என் தோழி ஆயத்தாருடனே காட்டிடத்தே பறித்த சிறுமுல்லையென்றாள் ; அது கேட்டவன், முடிகூடின மயிரினையுடையாய்! யான் தனியே இவ்விடத்தே*கண்டேனால்; இருந்த இவை முல்லைப்பூவாயின், இவை தொடுத்துமுடித்து நாங் கூடுதற்குப் பொழுதாயின், ஒளி இத்தன்மைத்தாயிராநின்றது ; நின் நினைவு போக்கில்லையாகில் யான் போவென்று விடுவதுஞ் செய்வேன் ; பின்னை எனக்கு நின்னைப் போகவிடுதலை †ஓராது இவன் என் அறிவு இளைத்திராநின்றது ; இனி இக் கூட்டத்திற்கு உடம்பட நில்லென்றான். எ - று.

இது (ஙூ)‡இதோளி யதோளியெனச் சுட்டு நீண்டு நின்றது; இது சுட்டு முதலாகிய இகரவீற்று வல்லெழுத்து மிக்கு நின்றது.

---

க. (அ) "தோட்டார் கதுப்பினுள்" குறள். ௧௧0௫. (ஆ) 'தோட்டார் குழலியொடு" சிலப். ௧௫: ௧௧௮.

உ. "நின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொள், டென்னெஞ்ச மேவல் செயின்" கலி. ௧௧௩: ௧௭ - ௧௮.

ஙூ. "ஒரு காலத்து வழங்கப்பட்ட சொல் ஒரு காலத்து வாராதாகலும் பொருள் வேறுபடுதலுமுடைய; அதோளி இதோளி உதோளி எனவும் குயின் எனவும் நின்ற இவை ஒருகாலத் துளவாகி இக்காலத் தில வாயின. இவை முற்காலத்துளவென்பதேகொண்டு வீழ்ந்தகாலத்தும் செய்யுள் செய்யப்படா. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்து உளவாயினும் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் பாட்டினும் தொகையினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மரபிலக்கண மாகலி னென்பது" என்று பேராசிரியரும் "ஒருகாலத்து வழங்கிய சொற்கள் ஒருகாலத்து வழங்காதனவுமுள" என்பதற்கு, அதோளி இதோளி உதோளி குயின் என்பவற்றை மேற்கோள் காட்டி, 'இவை இடைச்சங்கத்திற் காகாவாயின'

பிரதிபேதம்) * கண்டேனா யிருந்தவிவை, † ஓராவென்னறிவு, ஓராத வென்னறிவு, ‡ இது தொளி யீதொளியென.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை *பிறந்தது.

---

என்று நச்சினார்க்கினியரும், "மரபேதானும்" என்னும் (தொல். செய். அ௦.) சூத்திரத்தினுரையில் எழுதி யிருக்கிறார்கள்; 'இவை இடைச் சங்கத்திற் காகாவாயின' என்ற நச்சினார்க்கினியருக்குக் கடைச்சங்கத்திற் காகுமென்பது கருத்தென்று கொள்ளலாகாது; இச்சொற்கள் வழக்கி லில்லையென்பதே கருத்தென்று கொள்ள வேண்டும். ஆனால், 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னும் (தொல். தொகை. கஎ) சூத்திரவுரையில் இளம்பூரணர்சுட்டுமுதலாகிய இகரவிறுதிக்கு, அதோளி, இதோளி, உதோளி என்னுஞ் சொற்களை உதாரணங்காட்டி யிருக்கிறார். நச்சினார்க்கினியரும் அவரையே பின் பற்றி அச்சூத்திரவுரையில் அப்பகுதிக்கு அச்சொற்களையே உதாரணங் காட்டி யிருப்பதோடு 'அதோளி - அவ்விடமென்னும் பொருட்டு' என்று குறிப்பும் எழுதியிருக்கிறார். 'ஞநமவவென்னும் புள்ளிமுன்னர், யஃகா னிற்றன் மெய்பெற் றன்றே" என்னும் (தொல். நூன்மரபு உஎ.) சூத்திரத்துரையில், இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ்செய்தலின் அக்காலத்து இந்நான்கு புள்ளிகளின் முன்னும் யகரம் வரப்பெற்று ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன என்று கூறுபவராகிய இவர், அதோளி முதலியசொற்கள் முற்காலத்துளவாகி இவர்காலத்து இலையாயின் 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னுஞ்சூத்திரவுரையிலும் 'இங்ஙனம் ஆசிரியர்சூத்திரஞ்செய்தலின் அக்காலத்துச், சுட்டுமுதல் இகரவீறான சொற்கள் உளவென்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன' என்றன்றோ கூறவேண்டும். இவர் கூற்றுள்ளே முன்னுக்குப் பின் முரணுகின்றதே எனின் முரணாது அமைத்துக்கொள்ளல் வேண்டும். நாமறிந்த அளவில் இச்சொற்குப் பொருளறிவித்தவர் இவரே. அங்கு, அதோளியென்பதற்கு அவ்விடமென்று பொருள்கூறி யிருப்பது போலவே இந்நூலிலும் இச்செய்யுளில் 'இதோளி' என்னுஞ் சொல் லுக்கு 'இவ்விடம்' என்று பொருள் கூறியிருக்கிறார். இவற்றையும் செய்யுளியலுரையில் இவர் எழுதியிருப்பதையும் நோக்கின், இச் சொற்கள் மிகுதியாக வழங்காமை கருதிச் செய்யுளியலில் அவ்வாறு எழுதினரென்றும் இவை அருகி வழங்குமென்பதே இவர் கருத்தென் றும் கொள்ளுதலேதகுதியாம். "கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பீலிக் கனைகுர ஞரைவண் டானம்" (சீவக. உக௦அ.) என்பதனுரையில் 'பூணிகம்பு ளென்பன இறந்தவழக்கு' என்று இவர் எழுதியுள்ள

(பிரதிபேதம்) * தோன்றிற்று.

இது கொச்சகக் கலி. (கஎ)

*முல்லைக்கலி முற்றும்.



கருத்தையும் நோக்குக. 'இதோளி' என்னுஞ்சொல் ஒன்றே முதல் நீண்டாவது இந்நூலிற் காணப்படுகின்றது; அதோளி உதோளி யென்பன நாமறிந்தஅளவில் ஓரிடத்துங் காணப்படவில்லை. வடமலையாளமாகிய தளிச்சேரிப்பக்கத்து இப்போதும் ஒளியென்பது இடமென்னும் பொருளில் பெரியோரைச் சுட்டி உயர்சொற் கிளவியாய் வழங்குமென்ப; இச்சொற்கள்பண்டைக்காலத்தே ஈற்றிகரங்குறைந்து ளகர ஈறாயும் வழங்கின வென்பது தோல். புள்ளி. க0௬-ஆம் சூத்திர வுரைகளிலுள்ள உதாரணங்களால் அறியலாகும். கன்னடத்தில் அதரொள் இகரொள் என்பன அதில் இதிலென்னும் பொருளில் வழங்குமென்பதும் இங்கேகருதத்தக்கது. அன்றியும் இக்காலத்து அவ்விடம் இவ்விடமென்னும் பொருளில் வழங்கும் அதோ இதோ என்னுஞ் சொற்களும் அதோள் இதோள் என்பவற்றின் சிதைவோஎன்றும் ஐயமுண்டாகிறது. இவற்றைப் பாகதச் சிதைவென்பாருமுளர். இவற்றுள், இதோவென்பது சிவஞானமுனிவராற் செய்யுளிலும் பல இடத்து எடுத்தாளப்படுகிறது. "மற்றிதா தோன்றுகின்ற, சோலைசூழ் வரையினெற்றி" (சீவக. கஉ௩உ) என்புழி, இதா வென்பது இவ்விடமென்னும் பொருளில் சிந்தாமணியிலும் வந்துள்ளது. அங்கு 'இதா, திசைச்சொல்' என்று இவ்வுரையாசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * முல்லைப்பாட்டு முற்றும், முல்லை முற்றும்.

உ

வருணன் துணை.

# கலித்தொகை

## மூலமும்

## நச்சினார்க்கினியருரையும்.

### ஐந்தாவது நெய்தற்கலி.



(ககஅ.) வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போற்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
வானூது கலுழ்கொண்ட வுலகத்து மற்றவ
னேனையா னளிப்பான்போ லிகலிருண் மதிசீப்பக்
குடைநிழ லாண்டாற்கு மாளிய வருவாற்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை ;

மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா
யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய் ;

மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய் ;

மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய்

தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்;

எனவாங்கு;

உஉ மாலையு மலருநோனு தெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
யுள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி னுள்ள முள்ளு ளுவந்தே.

இது பிரிவிடையாற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு அதனோடு புலம்பித் தோழிகேட்ப அதனோடு புலந்தது.

இதன் பொருள்.

(க)வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் (உ)தான்செய்த
தொல்வினைப்*பயன்றுய்ப்பத் துறக்கம்வேட்†டெழுந்தாற்போற்
(ங)பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
ரு வானாது ‡கலுழ்கொண்ட வுலகத்து மற்றவ
னேனையா னளிப்பான்போ லிகலிருண் ||மதிசீப்பக்

க. (அ) "வென்றிப் பல்புகழ்" மலை. ருசச (ஆ) "மறம் வீங்கு பல்புகழ்" பதிற். கஉ: அ. என்பவைகளும் (இ) இந்நூற்பக்கம் கசரு: ச - ஆம் குறிப்பும் ஒப்புநோக்குக.

உ. (அ) "அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார், சிறந்தோ ருலகம் படருநர் போல" பரி. கக: கO - கக. (ஆ) "வினைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்குந், துளங்கா விழுச்சீர்த் துறக்கம்" பரி. 'வானூர்' சக - சஎ. (இ) "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" (ஈ) "எண்ணிய வின்ப மன்றித் துன்பங்க ளில்லை யான, புண்ணியம் புரிந்தோர் வைகுந் துறக்கமே போன்ற தன்றே" (உ) "மாண்டதோர் நலத்திற் றுமென் றுணர்த்துதல் வாய்மைத் தன்றால், வேண்டிய வேண்டி னெய்தி வெறுப்பின்றி விழைந்த துய்க்கு, மீண்டரும் போக வின்ப மீறில தியாண்டுக் கண்டா, மாண்டது துறக்க மஃதே யருமறைத் துணிவு மம்மா" கம்ப. நகரப். ரு. சவரிபிறப்பு. க. கடறுவு. கச.

ங. "கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு" அகம். கஉO: ரு.

(பிரதிபேதம்) * பயன்றுய்ப்பான், † உழந்தாற், ‡ கலிழ்கொண்ட, || மதிசீய்ப்ப, மதி சிறப்ப.

குடைநிழ (க)*லாண்டோர்க்கு மாளிய வருவாற்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை

எ - து: (உ)பகைவரிடத்துப் போர்த்தொழில்நிகழ்த்த வல்ல விளங்கிய ஒழுக்கத்தாலே வெல்கின்ற புகழையுடைய அரசன் நல்ல தருமநூனெறியாலே (ந) பல்லுயிர்களையும் பாதுகாத்துத் தீவினையால் உளதான நடுக்கம் மனத்திலில்லையாம்படி தான்செய்த பழவினையின்பயனை நுகர்தற்குச் சுவர்க்கத்தை விரும்பிப் போனாற்போல பலகதிரையுடைய (ச) ஞாயிறு தனக்குப் பகையாகிய இருளைக் கெடுத்து உலகத்திற்குப் பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையிலே சென்று சேராநிற்க, அமையாதே கலக்கங்கொண்ட உலகத்தினிடத்தே பின்னை †அவ்வரசனுக்குப்பகைவனாகிய அரசன் வந்து அவ்வுலகைச் சிறிதே அளிப்பான்போல, தனக்கு மாறுபாட்டையுடைய இருளை மதி போக்காநிற்க, அந்தக்குடையால் நிழல்செய்து ஆண்ட அரசனுக்கும் அவ்வுலகை ஆளவரும் அரசனுக்கும் நடுவுநின்ற வருத்தந்தருகின்ற காலம்போல வந்துவிட்ட மாலாய்! நீ மருட்சியையுடைய மாலையாய் இருந்தாயென்றாள். எ - று.

௬ மாலைநீ, (ச)‡தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினலம் மெள்ளுவாய்

க "புற்கென்று ரந்தி புனைமலர்க்கண்ணீ ரரும்ப, நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்-முற்கொண், டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கு, மிடைநின்ற காலம்போ லின்று" நள. சுயம்வர. ௪௦௦.

உ. "விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று மேனின், றொருதனித் திகிரியுந்தி யுயர்புகழ் நிறுவி நாளு, மிருநிலத்தெவர்க்கு முள்ளத் திருந்தன னென்ன வீந்த, செருவலி வீர னென்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்" கம்ப. கங்கைப். ௪எ.

ந. "மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப, தன்னுயி ரஞ்சும் வினை" குறள். உ௪௪.

௪. (அ) "விரிகதிர்பரப்பி.........மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென......
......அந்திவானத்து வெண்பிறை தோன்றிப், புன்கண்மாலைக் குறும்பெறிந்தோட்டி" சிலப். ௪: க - உ௦.

ரு. (அ) "இனந்தூய்மை தூவா வரும்" (குறள். ௪ருரு.) என்பதன் விசேடவுரையில், தூவென்பது பற்றுக்கோடென்னும் பொருளில் வருதற்கு, 'தூவறத் துறந்தானை' என்பதனை மேற்கோள் காட்டுவர், பரி. தாவென்பதேயன்றித் தூவென்பதும் வலியென்னும் பொருளில் வருமென்பதை, (ஆ) "தூவறுத்தலின்" மது. கசஅ. (இ) "தூவெதிர்ந்து" பதிற். அ: ௩௪. (ஈ) "தூவாகாது" (உ) "தூவறத் துறந்தனன்" (ஊ) "தூவற நீபய" கலி. ௬எ: உ௦, க௨௬: க, க௪௬: ௬௬.

பிரதிபேதம்) * ஆண்டோர்க்கும், ஆண்டார்க்கும். † அரசனுடையபகைவனாகிய. ‡ தாவற.

யாப்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
(க)காதலர்ப் *புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்

எ - து: அதற்குக் காரணம் என்னெனில், நமக்கு வலியில்லையாம்படி நம்மைத் துறந்தவரை நினைக்கையினாலே (உ)கயங்கள்பூத்த போதுபோலே நின்னைக்கண்டு மனங்குவிந்த என்னுடைய அழகினையுடைய நலத்தை இகழ்கின்ற நீ அழகிய † சிறகினையுடைய வண்டுகள் ஆரவாரிக்கும்படி முறுக்கு நெகிழ்ந்த கோட்டுப்பூப்போலே மன ‡நெகிழ்ந்த காதலரைக் கூடியிருக்கின்ற மகளிருடைய அழகைப் போக்கமாட்டாயென்று அதன் மருட்சி கூறினாள். எ - று.

||இதனால், நீ வருந்தினவர்களை வருத்தியே விடுவையென்றும் × மகிழ்ந்தவர்களை மகிழ்ப்பண்ணியே விடுவையென்றும் அதன் அருளின்மைநோக்கி மருட்சியையுடைய மாலையாய் இருந்தாயென்றாள்.

இறுத்தந்தமாலாய்! நீ மருண்மாலையாய் இருந்தாயென மேல்வரும் 'மாலைநீ' என்பனவற்றையும் இங்ஙனங்கூட்டிப் பொருள்கூறிக்கொள்க.

கக. (ங)மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
(ச)செவ்வழியாழ் நரம்பன்ன =கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்

எ - து: கோவலருடைய தனித்தகுழலோசை தையென்னும் ஓசைப்பட ஒலிப்ப அதுகேட்டுக் குறைந்த நெஞ்சத்தை ÷ யுடையேம் பக்கத்தேநின்று

---

என வருபவையும் வலியுறுத்தும். (எ) "தாவறுந் துறத்தல்" கலி. கஉக: க-ஆம் அடிக்குறிப்புப் பார்க்க.

க. "தாழ்துணை துறந்தோர் தனித்துய ரெய்தக், காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்த,........மாலைவந் திறுத்தென" சிலப். ச: கங - உ௦.

உ. (அ) "கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது, வேட்டதே வேட்டதா நட்பாட்சி - தோட்ட, கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை, நயப்பாரு நட்பாரு மில்" நாலடி. உகரு. (ஆ) "உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங், கூம்பலு மில்ல தறிவு" குறள். ௪உரு. (இ) "நலமிக வுயர்ந்தோர் தம்மை நண்புறத் தழுவிக்கொள்க, நிலவிய கயத்துப் பூவை நிகர்தரா துயர்ந்த கோட்டு, ஒலரென வவர்பானிற்க வாக்கமிக் கடுத்த காலை, மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலு மொழிக ணமந்தா" விநாயக. அரசியற்கை. ருக.

ங. ஞாயிறு முதலியன சொல்லுந போலவும் கேட்குந போலவும் சொல்லி மையைப் பெறுமென்புழி, கேட்குநபோலப் பொழுதொடு

(பிரதிபேதம்) * புணர்ந்தவர்க்காரிகை, † சிறையினையுடைய, ‡ நெகிழ்ந்து காதலரை. || இதனால் வருந்தின. × மகிழ்ந்தவரை, = இளவியார்ப் பாராட்டும், ÷ உடையேமுடைய பக்கத்தே.

உயிரைக்கொள்ளாதே விளைந்திருந்துப் பாராட்டுகின்ற நீ தங்கணவர் பிரிந்த காலத்துச் (௧) செவ்வழியென்னும் பண்ணையுடைய யாழினது நரம்போசை போலவருந்திக்கூறும் மொழியினையுடையமகளிர் அக்கணவர்(?) *வருந்தின எம்போற் (௨) கனவிற் புணர்ச்சியின்றிப் பாராட்டப்படும் நனவிற்புணர்ச்சியிற் பெற்ற புதியநலத்தைக் கடியமாட்டாய். எ - று.

௧௭ மாலைநீ, †தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
‡பகைமிக்க நெஞ்சத்தேம் ||புன்மைபா ராட்டுவாய்
தகைமிக்க ÷புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்

எ - து: அழகு மிக்க தாழ்ந்த சினைகளில் தமக்கிருப்பிடத்தே(௩)பேடுஞ் சேவலுமாகச் சேர்ந்து பறவைகள் ஆரவாரியாநிற்க, மற்றுள்ள பகைகளாலும் வருத்தமிக்க நெஞ்சத்தினை ×யுடையேம் புன்மையையாங்கள் இறந்துபடாத படி பண்ணி விளைந்தித்துப் பாராட்டுகின்றநீ அழகு மிக்ககூட்டத்தையுடைய ✚ மகளிரது தாழ்ந்த கொடியினையுடைய நறிய முல்லையினுடைய முகையின் முகத்தை வண்டுகள் திறந்தாற்போல ஆடவரால் திறக்கப்படும் முறுவலையுங் கடியமாட்டாய். எ - று.

**எனவாங்கு அசை.

௨௨ ††மாலையு மலரு நோனா தெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
‡‡யுள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி லுள்ள முள்ளுளு ளுவந்தே

கூறியதற்கு, "மாலைநீ, தையெனக் கோவலர்........பக்கம்பா ராட்டு வாய்" என்பதுமேற்கோள்; தொல். செய். சூ. ௧௯௦. 'ஞாயிறு' இளம்.

௧. "நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே, கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றே" கலி. ௩௧: ௩௫ - ௩௬.

௨. (அ) "என் கிளவிபோற் செவ்வழி யாழிசை" கலி. ௧௪௩: ௩௮. (ஆ) "செவ்வழி நல்யா, ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி, யணங்குசா லரிவையை" அகம். ௨௧௨: ௬ - ௮.

௩. பேடென்பது பெண்பறவையென்னும் பொருளில் இவருரைகளிலும் கம்பர் வில்லிபுத்தூராழ்வார் குமரகுருப சுவாமிகள் சீகாழி அருணாசலக் கவிராயர் முதலியவர் செய்யுட்களிலும் வந்துள்ளது.

(பிரதிபேதம்) * வருந்தின் எம்போற். † தலைமிகத்தாழிசை, ‡ புரிமிக்க, || பன்மைபாராட்டு வாய், ÷ புணர்ச்சியாற்றாழ், புணர்ச்சியாய்தாழ், × உடையேமுடைய பன்மையை, ✚ மகளிருடைய தாழ்ந்த, ** ஆங்க. மாலை, †† பலையுமலரு, ‡‡ உள்ளஞ்சமைந்தோருள்ள முள்ளினுள்ள.

எ - து: நம்மைப் பிரிந்து உள்ளில்லாத உள்ளத்தாலே நம்மை நினையாமல் அமைந்திருந்தோரை உள்ளே உள்ளே உவந்து உள்ளும் நம்முடைய நெஞ்சமும் இம் *மாலையையும் ஊரார் கூறும் அலரையும் பொறுத்தே நம்மை விட்டுப் போகாநின்றது; இனி என்செய்வேமெனெ வருந்திக் கூறினள். எ-று.

இதனால், தலைவிக்கு இழிவு பிறந்தது.

இது "நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி" (க)என்ற இலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி வருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய(உ)கொச்சகமாயிற்று.

இது முதலிய மூன்றுபாட்டும் (ங)மாலைக்காலத்தைக்கூறினமையின் "காரு மாலையுமுல்லை" என்னும் (ச) பொதுவிதிபற்றி முல்லையுட் கோத்தல்வேண்டு மெனின், அது பெரும்பான்மைபற்றிக்கூறியது; மாலை எற்பாட்டின் பின் நிகழுங் காலமாதலின் அதற்கியைபுபட்டு நெய்தற்கும் உரித்தாயிற்று. அது

க. தொல். செய். சூ. கருகூ.

உ. (அ) இச்செய்யுளை 'தாழிசைதோறும் தனிச்சொற்பெற்றுவந்த நேரிசை யொத்தாழிசைக்கலிப்பா' என்று கூறி, "வெல்புகழ்... ..........மருண் மாலை" இது தரவு "மாலைநீ; தூவறத்.........காரிகை கடிகல்லாய்" "மாலைநீ, தையெனக்.........புதுநலங் கடிகல்லாய்" "மாலைநீ, தகை மிக்க.........முறைவலுங்கடிகல்லாய்" இவை மூன்றுந்தாழிசை. ஆங்க-தனிச்சொல் "மாலையு...........ளுவந்தே" இது சுரிதகம் என்று விளக்கினர் இளம்; (தொல். செய். சூ. கருக. 'போக்கியல்') பேராசிரியர்க்கும் நச்சினார்க்கினியர்க்கும்இது உடம்பாடன்றென்பது.(ஆ)பேராசிரியர் இச்செய்யுள் தரவுந் தாழிசையும் போக்கும் முறையானே வந்ததாயினும் 'இடைநிலைக்கிளவி தாழிசைப்பின்னர், நடைநவின்றொழுகு மாங்கென் கிளவி' (தொல். செய். சூ. கருகூ.) என்னும் இலக்கணஞ் சிதைய[த் தரவிறுதியினுந்] தாழிசை[யிறுதி]கடோறுஞ் சொற்சீர்பல வருதலான் ஒத்தாழிசையெனப்படாது அதன்வகைத்தாய் எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியதாஉ(கொச்சக)மாயிற் றென்பதாலும் நச்சினார்க்கினியர் அதனையே தழுவி, "இது 'நடைநவின் றொழுகு மாங் கென் கிளவி' என்னும் இலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி பலவருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகமாயிற்று" என்று எழுதுவதாலும்விளங்கும். தொல். செய். சூ. கருகூ.

ங. "கலியுள், மாலைக்காலம் நெய்தலின்கண் வந்தது"; தொல். அகத். சூ. அ. நச்.

ச. தொல். அகத். சூ. கூ.

(பிரதிபேதம்) *மாலையுமிவ்வூரார் கூறும்.

"திணை மயங்குறுதலும்" என்னும் (க) சூத்திரத்து "நிலனொருங்குமயங்குத *லின்று" என்றதனாற் காலமொருங்கு மயங்குமென்றது கொண்டு சான்றோர் பலருஞ் செய்யுள்செய்தார். "கானன் மாலைக் கழிப்பூக் †கூம்ப" என்னும் (உ)அகப்பாட்டும் நெய்தற்கண் மாலைவந்தது. "தொல்லூழிதடுமாறி" என்னும் (ங) நெய்தற்கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தவாறுகாண்க. இந்நிலத்து மாலைவந்த பாட்டுக்கள் ‡பலவுமுள. பிற சான்றோர்செய்யுட்களுட் காலம் மயங்குமாறு பலவுங் கண்டுகொள்க. (க)

(கககூ.) அகன்ஞாலம் விளக்குந்தன் (ச)பல்கதிர் வாயாகப்
பகனுங்கி யதுபோலப் (ரு)படுசுடர் கல்சேர
இகன்மிகு நேமியா னிறம்போல ||விருளிவர
(சு)நிலவுக்காண் பதுபோல வணி×மதி யேர்தரக்
கண்(எ)பாயல் பெற்றபோற் (அ)கணைக்÷கால மலர்கூம்பக்
(கூ)தம்+புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச

க. தொல். அகத். சூ. கஉ.

உ. அகம். சo.

ங. கலி. கஉகூ.

ச. "பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய" குறிஞ்சி. உகசு.

ரு. "ஒண்சுடர் கல்சேர" கலி. கஉக: க.

சு. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி முன்னத்தான் உவமை கூறு தற்கு இவ்வடியை மேற்கோள்காட்டி, இது காணப் பிறிதாகிய பொருளோடு உவமை கூறாமையிற் பிறிதொடுபடாதாயிற்றென்றும், மதியினதெழுச்சியை நோக்குதலிற் பிறப்பொடுநோக்கிற்றென்றும் கூறுவர், இளம்; தொல் உவமை. சூ. உங. 'பிறிதொடு'

எ. "பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப" கலி. கஙச: அ.

அ. கணைக்காலென்பது, நீர்ப்பூக்களுள் நற். உஙo,ஐங்.சுஅ; ஆம்பலுக்கும், நற். உசுஉ, குவளைக்கும், நற். கஙஅ, குறுந். கூ. நெய்தலுக்கும் வருதலோடு திணைமொழி. ஙஉ - இல் மருதுக்கும் அடையாக வந்துள்ளது.

கூ. (அ) "சான்றோர், புகழு முன்னர் நாணுப" குறுந். உருஉ. (ஆ) "கோவெனப் பெயரிய காலை யாங்கது, தன்பெயராகலி னாண்" (இ) "பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந், திறைஞ்சியோனே" புறம். கருஉ: உக-உஉ, உஅரு: கங -கச. (ஈ) "பிறர் தன்னைப் பேணுங்கா னாணலும் ..........ஊராண்மை யென்னுஞ் செருக்கு" திரிகடுகம். சு.

(பிரதிபேதம்) * இலவென்றதனால், †கூம்பும், கழ்பும். ‡பலவுமுளவென்றுணர்க. பிறசான், || இருள்வர, × மதிபோதரக், ÷ காலவலர், காலலர். +புகழ்க்கேட்டார்.

முறுவல்*கொள் பவைபோல முகையவிழ்பு புதனந்தச்
சிறு (௧)வெதிர்ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் (௨)திம்மெனப்
(௩)பறவைதம் பார்ப்புள்ளக் (௪)கறவைதம் பதிவயிற்
கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர
மாவதி சேர மாலை வாள்கொளா
(௫)வந்தி யந்தண ரெதிர்கொள வயர்ந்து
செந்தீச் செவ்வழ †றொடங்க வந்ததை
(௬)வாலிழை மகளி ‡ருயிர்பொதி யவிழ்க்குங்

---

௧. "ஆரும் வெதிரும்... ..........மெல்லெழுத்து மிகுதன் மெய்பெறத் தோன்றும்" (தொல். புள்ளிமயங். சூ. ௬௮.) என்பதனால், வெதிர்ங் குழலென வந்தது.

௨. "இம்மென" கலி. ௩௬: ௫; ௧௨௩: ௩.

௩. பார்ப்பென்பது பறவையின் இளமைப் பெயராய் வருதற்கு, "பறவை தம்பார்ப்புள்ள" என்பது மேற்கோள்; தொல். மரபி. சூ. ௪. 'பார்ப்பும்' இளம். இச்சொல் பார்வலெனவும் வழங்கும்.

௪. (அ) "ஆன் கணங், கன்றுபயிர் குரல மன்று நிறைபுகுதர" குறிஞ்சி. ௨௧௭ - ௨௧௮. (ஆ) "மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த தீம்பால் பிலிற்றக், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு, மாலையும்" அகம். ௧௪: ௯ - ௧௨. (இ) "சேதா, முலைபொழி தீம்பாலெழுது கலிப்பக், கன்று நினைகுரலமன்றுவழிப்படா" மணி. ௫: ௧௩௦ - ௧௩௨. (ஈ) "கறவை கன்று வயிற்படர" குறுந். ௧௦௮.

௫. (அ) "அந்தியந்தண ரயர" குறிஞ்சி. ௨௨௫. (ஆ) "அந்தி யந்தணர் செந்தீப்பேண்" மணி. ௫: ௧௩௩. (இ) "கருதி யந்தணர் யாவருந் தங்கடன் கழிப்பச், சுருதியென்னும் வெஞ் சாபமே லம்புகை தொடுத்துப், பருதி தன்பெரும் பகைவர்மேல் விடுத்தலிற் பரந்த, குருதி யாமென நிவந்தெழச் சிவந்தது குடபால்" வில்லி. கிருட்டினன்றூது. ௮௬. (ஈ) "(மறையவன்) வாம்பரித் தடந்தேர்ப் பரிதிவா னவன்போய் மறிதிரைக் குடகடல் குளிப்ப, வாம்பல்வா யவிழ மாலையங் காலத் தந்திவந்தனைத்தொழின் முடித்துத், தீம்புனற் றுறைநின் றகன்று" பிரமோத்தர. உமாமகேசுவரபூசை. எ.

௬. "மாலையோவல்லை" என்னுங் குறளின் விசேடவுரையில் "வாலிழை மகளிருயிர்பொதி யவிழ்க்குங், காலை" என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டதென்பர் பரி; குறள். ௧௨௨௧.

(பிரதிபேதம்) * கொள்பவைபோல, †தொடங்க, ‡ உயிர்ப்பொதி.

கழி காலை யாவ தறியார்
　(க)மாலை (உ)யென்மனார் மயங்கி யோரே.

**இது பிரிவிடை மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி தோழிக்கு உரைத்தது.**

---

க. மன் அசைநிலைக்கண் வந்ததற்கு, "மாலை யென்மனார் மயங்கியோரே" என்பது மேற்கோள்; நன். இடை. சூ. கஅ. மயிலை. இவ்வடியே குறுந். உகச - ஆம் செய்யுளிலும் மூன்றாம் அடியாக வந்துள்ளது.

உ. (அ) என்மனா ரென்பது, இடைச்சொல் தான்சாரப்படுஞ் சொல்லிற்கு வேறாய் வருதலே யன்றி அதற்கு உறுப்பாயும் வருமென்பதற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. க. சே. (ஆ) "என்மனா ரென்பது செய்யுண் முடிபெய்தி நின்றதோ ராரீற்று எதிர்கால முற்றுச்சொல்,................................என்ப என்னு முற்றுச் சொல்லினது பகரங் குறைத்து மன்னும் ஆருமென இரண்டிடைச்சொற்பெய்து விரித்தாரென்று உரையாசிரியர் கூறினாராலெனின்;-என்மனாரென்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறையென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறையென்றல்மேற்கோண்மலைவாதலானும் அவர்க்கு அதுகருத்தன் றென்க. மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணரவைத்தல் அவர்க்கு இயல்பாகலாற் செய்யுண்முடி பென்பது கூறாராயினர்" (தொல். கிளவி. சூ. க.) என்றும் (இ) இதனை வினைத்திரிசொல் லென்பாருமுள ரென்றும். (தொல். எச்ச. சூ. க.) கூறுவர் சேனாவரையர்; (ஈ) "என்பவென்னு முற்றுச்சொல் 'குறைக்கும்வழிக் குறைத்தலும்' என்பதனாற் பகரங்குறைத்து, 'விரிக்கும்வழி விரித்தல்' என்பதனால் 'மன்' 'ஆர்' என்பன இரண்டிடைச்சொற் பெய்து விரித்து, என்மனா ரென்றாயிற்று" என்று (இறை. சூ. க.) இறையனா ரகப்பொரு ளுரைகாரரும் (தொல். கிளவி. சூ. க) கல்லாடனாரும் (உ) என்பவென்னுமொழி, ஈற்றுப் பகரங்கெட்டு மன் ஆரென்னும் இடைச்சொற்களைப்பெற்று என்மனா ரென முடிந்ததென்று (யா - வி. சூ. உ௬.) யா - வி. உரைகாரரும் உரையாசிரியரெனப் பேர்பெற்ற இளம்பூரணர் கொள்கையையே பின்பற்றுவர்; (ஊ) "என்மனாரென்பது செய்யுண்முடி பாயதோ ராரீற்று முற்றுச்சொல்; மன் எதிர்காலவிடைநிலை. அது 'உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே' என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரைய ருரையானுமறிக" என்று கூறுவர் சிவஞானமுனிவர்; சிவஞான போத மாபாடியம். சூ. க. உரை.

## இதன் பொருள்.

அகன்ற (௧)உலகத்தை எவ்வுயிர்க்குந் தோற்றுவிக்கும் தன்னுடைய பல கிரணங்களைத் தனக்கு வாயாகக்கொண்டு (௨)கான்ற பகற்காலத்தை மீண்டும் அவ்வாயாலே விழுங்கினாற்போல அவற்றைச் சுருக்கிக்கொண்டு படுகின்ற சுடர் அத்தகிரியைச் சேர்கையினாலே போரின்கண் மிகுகின்ற சக்கரப்படையை யுடைய மாயோனிறம்போல இயல்பாகவுள்ள இருள் பரந்துவாராநிற்க, அதனைப் பொறாதே தன் நிலவாலே ஓட்டிப் புறங்காண்பானைப்போலே அழகினையுடைய மதி தோன்ற, கணவரைக் கூடித் துயிலப்பெற்ற கண்கள் போலே திரண்ட தண்டுகளையுடையவாகிய தாமரை (௩) முதலியன குவிய, தம்புகழ்களைக் கேட்ட சான்றோரைப்போலே தலையைச் சாய்த்து மரங்கள் துயில, சிறுதூறுகள் பிரிந்த மகளிரை (௪)இகழ்ந்து சிரிப்பனபோலே முகைகள் அவிழ்ந்து விளங்க, சிறிய மூங்கிலாகிய குழல்போலச் சுரும்புகள் ஆர்ப்பரவஞ்செய்து பாட, புட்கள் தம் பார்ப்புக்களை நினைத்துக் குடம்பையைச் சேர, பசுக்கள் தாந் தங்கும் ஊர்களிடத்திற் கன்றின்மேல் அமர்ந்த விருப்பத்தோடே மன்றுக ணிறையப் புகுதலைச்செய்ய, மாக்கள் தாந் தங்குமிடத்தே சென்று தங்க, அந்தணர் தாஞ் செய்யுந் தொழில்களைச் செய்து அந்திக் காலத்தை எதிர்கொள்ள, (௫)மகளிர் செந்தீயால் உண்டான விளக்கை ஏற்றத் தொடங்க, மாலை விளக்கங்கொள்ள வந்ததனை அறிவுகெட்டோர் வாலிய இழையினையுடைய மகளிருயிரை அதனைப் பொதிந்துநின்ற உடலினின்றும்

---

௧. "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந்தாலன்றிக், கருதுநிலப்பல்பொருளுங் காண்டலரிதாம்" திருக்குற்றாலப். நூற்பயன். ௧.

௨. (அ)"வெயில்கான் றிருள்சீத் தெழுவெங்கதிர்ச் செல்வன் மைந்தன்" கூர்ம. இராவணவதை. ௧௭. (ஆ) "பாயிருள் பருகுப பகலைக்கான் றெழுங், காயெரிக் கதிரவன்" திருவானைக்கா. தீர்த்தவிசேடப். ௬௧.

௩. முதலியனவென்றது, குவளை நெய்தல்களை; இவை காலை மலர்ந்து மாலைக் குவிவனவென்றே பண்டைநூல்கள் கூறுகின்றன; இதற்கு மாறாக, குவளை மாலை மலர்ந்து காலைக் குவியுமென்று பிற்காலத்து நூல்கள் கூறுகின்றன. இவற்றின் உண்மை நோக்கி அறியத்தக்கது.

௪. "முல்லைத், தொகுமுகை யிலங்கெயி றாக, நகுமே தோழி" குறுந். ௧௨௬.

௫. (அ) "வளமனைப், பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி, யந்தி யந்தண ரயர" குறிஞ்சி. ௨௨௩ - ௨௨௫. (ஆ) "உள்ளினே னல்லனோ யானே யுள்ளிய, வினைமுடித் தன்ன வினியோண், மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே" நற். ௩: ௭ - ௯. (இ) "எல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப, மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென" சிலப். ௪: ௧௧ - ௨௦.

போக்கும் காலத்தினது இயல்பினவதறியாராய் மாலைக்காலமென்று அதுவும் ஒருகாலமாகக் கூறாநிற்பரென ஆற்றாளாய்த் தோழிக்குக் கூறினாள். எ - று.

கல்சேர்கையினாலே * இருள் இவராநிற்க † அதுபொறாது மதிதோன்ற என ஒருவினையாகமுடிக்க. "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் ‡ பருதி" (க) என்றார் பிறரும்.

|| மதியோர்தர என்பது முதலிய செயவெனெச்சங்களெல்லாம் நிகழ்கால முணர்த்திநின்று ÷ மாலைவாள்கொள[ா] என்னுஞ்செய[யா]வெனெச்சத்தோடு முடிந்தன. அது பின் வந்ததை என்னுந் தொழிற்பெயர்த்திரிசொல்லோடு முடிந்தது.

மயங்கியோர் என்றது தோழியைக்கருதி. × "திணைமயங்குறுதலும்"(உ) என்றதனாற் கருப்பொருண்மயங்குதலும் அமைத்தாம்.

இனி மாலை + வாழ்கொளவென்று பாடமாயின் அப்பாடத்திற்கு, மாலை தான் வாழ்தல்கொள்ள வந்ததனை என்க.

** அளறுடங்க என்பதும் பாடம்.

இதனால், தலைவிக்கு இழிவுபிறந்தது.

இஃது அடக்கியலின்றி அடிநிமிர்ந்தோடிய கொச்சகவொருபோகின் பகுதியாய்த் தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடி நிமிர்ந்தோடிய †† அகநிலைக்கொச்சகம். (உ)

(கஉ0.) அருஞ்சுரந்த காட்சியா னறனோக்கா னயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பையபைய
விருநீர்ப் புலம்பூரக் கலைசுடர் கல்சேர
வுரவுத்தகை மழுங்கித்தன் னிடும்பையா லொருவனை
ரு யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போன் மரமெல்லா மிலைகூம்பத்
தோற்றஞ்சால் செக்கருட் பிறைநுதி யெயிறாக
நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக்
கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை;

க. பெரும்பாண். உ.
உ. தொல். அகத். கு. கஉ.

(பிரதிபேதம்) * இருள்வாராநிற்க, † அது பொறாமதி, ‡ பரிதி. || மதிபோதர, ÷ மாலை வாள்கொள்ள வென்னுஞ் செய்யாவென னு மெச்சத். × திணைமயக்குறுதலும் என்பதனாற் றரும்பொருண், + வாழ்கொளவென்ற பாடத்திற்கு மாலைதான் வாழ்தல், ** அழறுடங்க. †† வகைநிலைக்.

க0 மாலைநீ, உள்ளங்கொண் டகன்றவர் துணைதாராப் பொழுதின்கண்
வெள்ளமா னிறநோக்கிக் கணைதொடுக்குங் கொடியான்போ
லல்லற்பட் டிருந்தாரை யயர்ப்பிய வந்தாயோ;

கங மாலைநீ, ஈரமில் காதல ரிகந்தருளா விடனோக்கிப்
போர்தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போ
லாரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ;

கசு மாலைநீ, கந்தாதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்
வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போற்
காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ;

எனவாங்கு;

உ0 இடனின் றலைத்தரு மின்னுசெய் மாலை
துனிகொ டுயர்தீரக் காதலர் துணைதர
மெல்லியான் பருவத்து மேனின்ற கடும்பகை
யொல்லென நீக்கி யொருவாது காத்தோம்பு
நல்லிறை தோன்றக் கெட்டாங்
கில்லா கின்று விருளகத் தொளித்தே.

இது பிரிவிடையாற்றாத தலைவி, மாலைப்பொழுதுகண்டு கழிய ஆற்றாளாயின இடத்துத் தலைவன்வரவும் அவளது அகமலர்ச்சியுங் கண்டார் கூறியது.

இதன் பொருள்.

அருடீர்ந்த காட்சியா னறநோக்கா * னயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பைபய
விருடேர்பு புலம்பூரக் (க)கனைசுடர் கல்சேர
வுரவுத்தகை (உ)மழுங்கித்தன் னிடும்பையா லொருவனை
ரு யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போன் மரமெல்லா மிலைகூம்பத்

---

க. (அ) "கனைசுடர் கல்சேர்பு மறைய" அகம். சஎ: க. (ஆ) "படுசுடர் கல்சேர" (இ) "ஒண்சுடர் கல்சேர" (ஈ) "கல்சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்" கலி. ககக: உ, க௨க: க, கஙச: ச.

உ. மழுங்க லென்பது 'மழுகல்' எனவும் 'மாழ்கல்' எனவும் வழங்கும்.

(பிரதிபேதம்) * அறஞ்செய்யான், பயஞ்செய்யான்.

